# பண்டைய இந்திய அரசியல் ஆட்சி நிலையங்கள்

(POLITICAL AND ADMINISTRATIVE INSTITUTIONS IN ANCIENT INDIA)

டாக்டர் ந. சுப்ரமணியன்




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—424

# பண்டைய இந்திய அரசியல் ஆட்சி நிலையங்கள்

ஆசிரியர்
டாக்டர் ந. சுப்பிரமணியன், எம்.ஏ., பிஎச்.டி.,
பேராசிரியர், பண்டைய வரலாற்றுத் துறைத் தலைவர்,
மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—February, 1973

T.N.T.B.S. (C.P.) No. 424



**Administrative Institutions in Ancient India**

DR. N. SUBRAHMANIAN

Price Rs. 3-65

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by*
VENKATESAN PRESS,
2/65, Broadway, Madras-1.

# அணிந்துரை



திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி-உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக்கும் [illegible] டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக, இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பண்டைய இந்திய அரசியல் ஆட்சி நிலையங்கள்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 424ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இது வரை 459 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

வரலாறு என்பது படைப்புச் சாதிகள் பலவற்றுள்ளும் அறிவு என்னும் சாதனத்தால் சிறந்து விளங்கும் மனிதனின் தோற்றம், வளர்ச்சி, சாதனைகள் ஆகியவற்றின் முழுமையும்— ஆம்; வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மனிதன் பிற விலங்குகளினின்றும் பெரிதும் வேறுபடாமல் இருந்தமையால் அவற்றைப் போலவே அவனும் சமூக வாழ்க்கை ஒன்றை அறியாத, வேண்டாத நிலையில் இருந்தான். சமூக வாழ்க்கையின் தன்மை அதனைச் செவ்வனே நடத்தத் தோன்றிய பல சட்ட திட்டங்களையும் அவற்றின் அடிப்படையில் எழுந்த சமூக நிறுவனங்களையும் பொறுத்திருக்கும். ஆதலால், சட்டம் என்னும் ஒரு கட்டுப்பாட்டிற்கு அகப்பட்ட சமுதாய வாழ்க்கை வாழத் தொடங்கிய மனிதன் அவ்வாழ்க்கைக்குத் தேவையான பல நிலையங்களை நிறுவிக்கொண்டான். அவை, குடும்பம், அரசு, சமயம் முதலியனவாம். அவை அவனது தனிப்பட்ட, பொதுமையான ஆகிய இருவகைத் தேவைகளையும் நிறை வேற்றக் கூடியவையாய் அமைந்தன. அவையெல்லாம் மனிதன் வளர்ச்சிக் (பரிணமக்) காலத்தே சிறிது சிறிதாக நாளடைவில் தோன்றியவையாம். மனிதன் வளர்ச்சிக் காலத்தில் பற்பல துறைகளில் முயன்று மாறியும் முன்னேறியும் வந்துள்ளான் என்பது காணப்பெறும். இத்துறைகள் பலவாதலின் அவன் வரலாறும் பலவகைப்படும். இவற்றில் அரசியல் வரலாறு, சமய வரலாறு, பொருளாதார வரலாறு, அரசியல் சமயம் பொருளாதாரம் முதலியவற்றின் முன்னேற்றத்தின் அடிப்படையாக அமைந்த கருத்துக்களின் வரலாறு, அத்தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு மனிதன் நிறுவிக்கொண்ட ஆட்சி முதலியவற்றோடு தொடர்பு பட்ட நிலையங்கள் அல்லது நிறுவனங்களின் வரலாறு, அவன் இயற்றிய இலக்கியங்கள், உணர்ந்த உண்மைகள், கற்ற கலைகள் ஆகியவற்றின் வரலாறு எனப் பற்பல வகையினவாம்.

இவையெல்லாம் நாட்டுக்கு நாடும் காலத்திற்குக் காலமும் வேறுபடும் தன்மையன. ஏனெனில் இவ்வுலகத்தே வெவ்வேறு இடங்களில் தோன்றிய மனித சமுதாயங்கள் அவ்வவ்விடத்தே தட்பவெப்பம் முதலிய சூழ்நிலைகளுக்கேற்பவும் அவ்வக் காலத்திய வாழ்க்கை முறைகளுக்கேற்பவும் மாறி வருவன வாகும். எடுத்துக்காட்டாக, மிகத் தட்ப நிலையில் இருக்கும் வட, தென்துருவப் பிரதேசங்களில் வாழும் எஸ்கிமோ எனும் சாதியார் ஆண்டிலும் நாளிலும் பெரும் பகுதியை உறக்கத்திலும் செயலற்று இருக்கும் பிற நிலைகளிலும் செலவழித்தும் மிகச் சிறு பகுதியை உணவு தேடுவதற்காகச் சில விலங்குகளை வேட்டையாடும் தொழிலில் ஈடுபட்டும் வந்துள்ளனர். இங்ஙனமே பாலை வனங்களாகவும் அடர்ந்த காடுகளாகவும் அமைந்த இடங்களிலும் மக்கள் வாழ்க்கை தம் காப்பிலும் உணவு தேடுதலிலுமே பெரும்பாலும் செலவழி யும். வேறு வகை வாழ்க்கை அவ்விடங்களுக்குப் பொருந்தா. உலகின் வேறு சில இடங்களில் இயற்கையின் செழிப்பு மிதமாகவும் வாழ்க்கை வசதிகள் மிகுதியாகவும் அமைந் திருக்கும். அங்கு வாழும் மக்களுக்கு வாழ்க்கை முயற் சிக்கே அல்லாமல் பிற முயற்சிகளுக்கும் நேரமிருக்கும்; அந்நேரத்தைத் தங்கள் வாழ்க்கையை மேலும் மேலும் வசதிப்படுத்திக் கொள்ளும் முயற்சியில் செலவழிப்பர். இம் முயற்சி காரணமாகத் தோன்றுவனவே சமுதாய நிலையங்களாம். மேற் கூறியவாறு இந்நிலையங்கள் மிகப் பலவாயினும் அரசியல் அமைப்பிற்கு உறுப்புக்களாகவும் பொது வாழ்வினை வளப்படுத்தும் ஆட்சி நிலையங்களாகவும் அமைந்து கிடக்கும் நிறுவனங்களே நாம் இங்கு விரிவாக விளக்க எடுத்துக் கொண்ட பொருளாம். அவற்றுள்ளும் இந்திய நாட்டில் பண்டைக்காலத்தில் பயிற்சியில் இருந்து வந்த பொது நிலையங்களைப் பற்றியே நாம் இங்குக் கருது வோம்.

அரசியல் அமைப்பிற்கு உட்பட்ட பொது நிலையங்கள் என்பவை மக்கள் சமுதாயத்தின் புறத் தேவைகளைச் சட்ட வரம்புகட்கு உட்பட்டுப் பூர்த்தி செய்வனவும், சட்டவரம்பினை மீறும் சமுதாய சக்திகளை ஒறுப்பனவும் ஆய நிலையங்களே யாம். இவற்றுள் சமுதாய அரசியல் சட்டங்களை ஆக்குங் கருவி களான நிலையங்களும் அடங்கும். நாட்டைக் குழப்பத்தில் ஆழ்த்தும் உள், வெளி தீய சக்திகளைத் தடுக்கும் மன்னன், அவனுக்கு உதவும் படை, அப்படையை நடாத்தும் தலைவர்கள் அமைதிக்கால ஆட்சித் துறையில் அம்மன்னனுக்குத் துணை

நிற்கும் அமைச்சர்கள், அறத்தை நிலை நாட்டும் நீதி மன்றங்கள், அவை கருதும் சட்டங்களை உருவாக்கும் சட்ட மன்றங்கள், ஆட்சி இயங்குதற்கு இன்றியமையாத வரிகளைக் குவிக்கும் ஆட்சியாளர்கள், பிற பல நிர்வாகத் துறைகளில் ஈடுபட்டிருக்கும் வாரியங்கள், பஞ்சாயத்து முதலிய குழுக்கள், அவைக்களத்து அமர்ந்து அரசனுக்கு அறஉரை கூறும் ஏனைய ஆணையாளர்கள் முதலியோரும் இத்தகைய அரசியல் நிலையங்களை இயக்குவோராவர். மேற்கூறிய இந்நிலையங்கள் இந்திய நாட்டிலே கூட எக்காலத்திலேயும் ஒரே விதமாக அமைந்திருந்தன என்றோ, செயலாற்றின என்றோ கூற இயலாது. நம் நாட்டு வரலாற்றின் பண்டைக் காலத்திலேயும் மன்னராட்சியின்றி ஒருவகைக் குடியாட்சி நிலவிய இடங்களும் உண்டு. பேரரசுகளை ஆக்கி ஆண்ட மாமன்னர்களது நாட்டிலும் கிராம மக்கள் பெரும்பாலும் தங்கள் பொதுத் தேவைகளைத் தாங்களேயறிந்து பூர்த்தி செய்து கொள்ளும் மரபுகளும் இருந்தன. இவை யாவற்றையும் ஒரு சேரத் தொகுத்துப் பண்டைய இந்தியாவின் அரசியல் ஆட்சி நிலையங்கள் எனலாம். இந்நிலையங்களைப்பற்றி விரிவாக விளக்கிக் கூறுவதே இந்நூலின் நோக்கம் ஆகும்.

# 1. பண்டைய இந்திய அரசியல் கருத்துகளின் வரலாறும் தன்மையும்

ஏதேனும் ஒருவகை அரசியல் ஏற்பாடு இல்லாத நாடோ சமூகமோ இருக்க முடியாது. அது சிறிய எளிய அளவில் இயங்குவதாகவோ, பெரிதாகவும் சிக்கல் நிறைந்ததாகவுமோ இருக்கலாம்; ஆனால் அத்தகைய ஏற்பாடு ஒன்று நாகரிகமாக[1] இயங்கும் அல்லது இயங்க விரும்பும் எந்தச்சமுதாயத்திற்கும் தேவைப்படும். இந்தியா ஒரு துணைக்கண்டமாதலின் அதன் வெவ்வேறு பிராந்தியங்கள் வெவ்வேறு திக்குக்களிலும் வேகத்திலும் அரசியலில் வளர்ந்து வந்துள்ளன. ஆகவே, இந்தியாவில் அரசியல் கருத்துக்கள், நிலையங்கள் இவற்றின் வளர்ச்சி ஒரு படித்தாகவோ ஒரு தரத்ததாகவோ இராது. இந்நாடு நாகரிக வாழ்க்கை தொடங்கியதற்கு முந்திய காலத்திலும், ஆங்கிலர் ஆட்சி தொடங்கிய பிறகும், ஒரே வகையான அரசியல் மரபுகளைக் கொண்டு விளங்கி வந்தது. அதாவது தொடக்க காலத்தில்; 'நாகரிக' அரசியல் முறைகள் பயின்று வந்தன. ஆங்கிலர் ஆட்சிக்காலத்தில் இந்தியா முழுவதையும், ஒரே ஆட்சி முறையில் கொண்டுவரும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அவ்விரண்டு காலங்களுக்கும் இடைப்பட்ட காலத்திலெல்லாம் அரசியல் மரபுகள் பலவகைப்பட்டு ஆட்சி ஏற்பாடுகளும், நிலையங்களும் வெவ்வேறு நிலைகளில் விளங்கக் காண்கி

[1] நாகரிகம் என்னும் சொல் நகரம் என்னும் சொல்லிலிருந்து பிறந்தது. நகரமக்களின் வாழ்க்கை நிலை நாகரிக வாழ்க்கை நிலை எனப்படும். இவ்வாறே லத்தீன் மொழியிலும் 'civitas' (நகரம்) என்னும் சொல்லிலிருந்து பிறந்தவையே 'civic', 'civilization' என்னும் சொற்கள் என்பதும் நோக்கற்பாலது.

றும். ஆயினும், பொதுவாகப் பார்க்குமிடத்து மிகப் பண்டைக் காலந்தொட்டு இன்றுவரை இத்துறைகளில் ஏற்பட்டுள்ள வளர்ச்சியில் ஒரு வகைப் பொதுத் தன்மையும் காணப்படும். அப்பொதுத் தன்மைகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு, அவ்வளர்ச்சியின் சிறப்பியல்புகளையும் மனத்தில் இருத்திக் கொண்டு ஆராயுமிடத்து, அவ்வளர்ச்சியின் தன்மை விளங்கும். இப்பொதுத் தன்மை யாது என்பதை முதற்கண் ஆராய்ந்து விட்டுப் பிறகு அதன் சிறப்பியல்புகளை நோக்குவோம்.

ஐரோப்பியர்களின் அரசியல் கருத்துக்கள் அவர்களுடைய சமூக, தேசிய வாழ்க்கை அனுபவத்தையொட்டி அமைந்தன. அக்கருத்துக்கள் பெரும்பாலும் கிரேக்க நாட்டில் இன்றைக்கு ஏறத்தாழ 2,300 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த அரசியல் தத்துவ அறிஞர்களால் எடுத்துரைக்கப்பட்டவை. அவற்றைச் சில வேறுபாடுகளுடன் பிற்கால ஐரோப்பிய அறிஞர்கள் தங்கள் அனுபவத்தையொட்டி ஆராய்ந்து காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப நிகழ்ந்த அரசியற் செயற்பாடுகளையும் இணைத்து மேலும் மேலும் வளரும் ஒரு அரசியல் தத்துவ மரபாக்கி வைத்துக் கொண்டனர். அத் தொடக்க கால அரசியல் கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு ஏற்படுத்தப் பெற்ற ஆட்சி நிலையங்களில் மிகச் சிறப்பானவை சில ரோமானியர்களால் நிறுவப்பெற்றவை. கிரேக்கர்களுடைய மக்களாட்சிக் (Democracy) கொள்கைகளும், ரோமானியர்களுடைய குடியரசுக் (Republic) கொள்கைகளும் ஒன்றாகச் சேர்த்து ஆராயத் தக்கவை. ஆகவே, கிரேக்கர்களுடைய அரசியல் தத்துவ அறிவும், ரோமானியர்களுடைய அரசியல் அனுபவமும் பிற்கால ஐரோப்பியர்களின் அரசியல் வாழ்க்கைக்கு இரு தூண்கள் போலவும் முன்னோடிகள் போலவும் அமைந்தன எனல் பொருந்தும்.

ஆனால், பண்டைய இந்தியர்கள் தங்கள் நூல்களில் எழுதியுள்ள அரசியல் கருத்துக்களும், அவர்கள் பொது வாழ்க்கையில் நிறுவிக் கொண்ட அரசியல் நிலையங்களின் தன்மையும் பல விவரங்களில் வேறுபட்டிருப்பதில் வியப்பிருக்க முடியாது. ஏனெனில், அரசியல் கருத்துக்கள் இரு வகையாக உருவாகக் கூடும். ஒன்று சமுதாயத்தின் நிகழ்ச்சிகளின் உந்துதலால் அறிஞர்களின் உள்ளத்தில் தோன்றும் கருத்துக்கள் அரசியல் தத்துவமாகப் பரிணமிக்கும்; உதாரணமாக, 17ஆம் நூற்றாண்டு இங்கிலாந்தில் ஸ்டூவர்ட் (Stuart) மன்னர்களின் வரம்பற்ற ஆட்சி முறையினை வற்புறுத்த வந்தது தாமஸ் ஹாப்ஸ் (Thomas

Hobbes, 1588–1679) என்னும் ஆசிரியரின் 'லிவியதன்' (Leviathan) என்னும் நூல். இந்நூலில் மன்னனின் வரம்பற்ற இறைமை எதிர்க்கப் பாலதன்று என்னும் கொள்கை வற்புறுத்தப் பெறுகின்றது. இவ்வாறே அந்நாட்டில் 1688-ல் நிகழ்ந்த அரசியற் புரட்சி சில அரசியற் கருத்துக்களை உள்ளடக்கி இருந்தது. இக்கருத்துக்களைத் தத்துவமாக்கிக் கொடுத்தது ஜான் லாக் (John Locke, 1632–1704) என்னும் அறிஞர் இயற்றிய அரசியல் நூல்கள். இஃதொரு புறமிருக்க ஒருவகை அரசியல் தத்துவங்களைச் சில அறிஞர்கள் உருவாக்க அத்தத்துவங்களின் செல்வாக்கால் சில பெரிய வரலாற்று நிகழ்ச்சிகளே உருவாய் விடுவதுண்டு. உதாரணமாக, ரூஸோ (Jean Jacques Rousseau, 1712–1778) என்னும் பிரெஞ்சு அரசியல் தத்துவர் இயற்றிய 'சோஷல் கான்ட்ராக்ட்' (Social Contract) அல்லது சமுதாய ஒப்பந்தம் என்னும் நூல் சில புரட்சிகரமான கருத்துக்களை அரசியல் உலகில் புகுத்திற்று. இதன் விளைவாக, பிரான்ஸ் நாட்டில் தோன்றியதே பிரெஞ்சுப் புரட்சி (1789). மற்றும் 19ஆம் நூற்றாண்டில் ஜெர்மனியில் வாழ்ந்த கார்ல் மார்க்ஸ் (Karl Marx, 1818–1883) என்னும் அறிஞர் இயற்றிய டாஸ் காபிடல் (Das Kapital) என்னும் நூல் சமுதாயப் புரட்சிக் கருத்துக்களை உள்ளடக்கியிருந்தது. இந்நூலிலும் இத்தகைய பிற நூல்களிலும் கண்ட கருத்துக்கள் மொத்தமாக, கம்யூனிஸம் அல்லது பொது உடைமை (Communism) எனப்பெறும். இத்தத்துவத்தின் விளைவாக ருஷ்ய நாட்டில் நிகழ்ந்தது ருஷ்யப்புரட்சி (1917). இவ்விரண்டு வகை அரசியல் தத்துவங்களைத் தவிர சில அறிஞர்கள் 'இத்தகைய அரசியல் அமைப்புத்தான் சிறந்தது; இத்தகைய ஆட்சி முறைகள் தாம் மக்கள் நன்மைக்கு உகந்தவை' யென்று கருதி அக்கருத்திற்கு ஏற்பத் தத்துவ நூல்கள் இயற்றுவதுண்டு. உதாரணமாக, பிளேடோ (Plato, 427-347 B.C.) என்னும் கிரேக்க அறிஞர் இயற்றிய குடியரசு (The Republic) என்னும் நூலும், இங்கிலாந்தில் வாழ்ந்த சர் தாமஸ் மோர் (Sir.Thomas More, 1478-1535) என்னும் அறிஞர் இயற்றிய உட்டோபியா (Utopia) என்னும் நூலும் கருதத் தக்கவை. இந்தியாவில் எழுந்த அரசியல் தத்துவ நூல்கள் வட மொழியில் அர்த்த சாஸ்திர மென்னும் பகுதியிலும் தமிழில் பொருட்பால் என்னும் பகுதியிலும் அடங்கும். இத்தகைய நூல்கள் இயற்றியவர்களில் வட மொழியில் கௌடில்யரும் தென் மொழியில் வள்ளுவரும் குறிப்பிடத்தக்கவர்கள். ஆனால், இந்நூல்கள் மேலெடுத்துக் காட்டிய முதலிரண்டு வகையிலும் அடங்கா. மூன்றும் வகையில் ஓரளவு அடங்கக்கூடும். சர் தாமஸ் மோரின்

உட்டோபியா, அக்காலத்து அரசியல் முறைகளைக் கண்டிக்கும் நோக்கத்தோடு எழுந்த நூல். எதிர்மறை முகத்தால் ஒதுக்கு வது மட்டும் சிறவாது என்று கருதிய ஆசிரியர் தாமே ஒரு கற்பனை அரசியல் உலகை உண்டாக்கிக் காட்டிய முயற்சியே அந்நூல். கௌடில்யரும் வள்ளுவரும் இத்தகைய முயற்சியை மேற்கொண்டவர்கள் அல்லர். அவ்வவர்கள் காலத்தில் நடைமுறையிலிருந்த ஆட்சி முறைகள் எவ்வாறு இயங்க வேண்டுமென்று அறிஞர்கள் கருதினர்களோ, அக்கருத்தை அடிப் படையாக வைத்துக்கொண்டு எழுதப்பட்ட நூல்கள் அவை. ஆதலால், இந்தியாவில் அரசியல் ஆட்சி முறை வரலாற்றிற்கும் அரசியல் தத்துவ நூல்களில் கூறப்பட்ட கருத்துக்களுக்கும் ஓரளவு தொடர்பும் பெருமளவு தொடர்பின்மையும் இருக்கக் கூடும்.

இந்தியாவில் தோன்றி வளர்ந்த அரசியற் கருத்துக்களின் தன்மையை உண்மையாக உணர்வதற்கு இந்நாட்டின் ஆதி காலச் சமுதாய அமைப்பையும், அவ்வமைப்பின் அடிப்படையில் அமைந்த சமூகத் தத்துவத்தையும் நன்கு அறிதல் வேண்டும். இந்திய நாட்டில், ஆரியர் உட்புகுவதற்கு முன்பு பரவியிருந்த குடிகளின் புராதனச் சமுக அமைப்பும் ஆரியர் கலப்பால் பிற் காலத்துச் சிறிது சிறிதாகத் தோன்றிப் பிறகு நிலைத்து விட்ட சமூக அமைப்பும் கலந்து ஒரு பொது சமூக மரபும் அம்மரபைத் தத்துவ நிலையில் உணர்தற்குத் தேவைப்படும் கருத்துக்களும் சேர்ந்து ஓர் சமுதாய வரலாற்றினை உருவாக்கின. அச்சமுதாய அமைப்பினை ஓர் 'ஒழுங்கு' 'அமைதி' என்று கருதினர்.'ஒழுங்கு' 'அமைதி' என்பது ஒரு ஏற்பாட்டின் தன்மை விரைவிலோ அடிப்படையாகவோ விரும்பத்தகாத முறையிலோ மாறுபாட டையாமல் இருக்கும் என்றும் இந்திய (அல்லது இந்து) சமுதாயத்தை அமைத்தவர்கள் அச்சமுதாயம் என்றென்றைக் கும் அவர்கள் அடிப்படையில் நிறுவிக்கொண்ட கருத்துக்களி னின்றும் மாறுபடாமல் நிலைத்து நிற்கும் தன்மைத்து என்றும் கருதினர். அவர்கள் அந்நிலையையும், அந்நிலையை ஆளும் அறத்தையும் 'சநாதன தர்மம்' என்றனர். சநாதனம் என்பது இடம், காலம் என்னும் இரண்டையும் கடந்து நிற்பதைக் குறிக்கும். இவ்விரண்டையுமே கடந்து நிற்கும் ஓர் அறம் (தர்மம்), இவ்விரண்டிற்கும் எவ்வாற்ருலும் உட்பட்டு நிற்கும் உலகியல் நிகழ்ச்சிகளையும் அங்ஙனமே கருதும். ஆதலால், பண்டைய இந்துக்கள் மாறுபடாத தன்மையுடைய ஒரு சமுதாய ஏற்பாட்டை விரும்பியமைத்தனர் என்பது பெறப் படும். ஆயினும் அச்சமுதாய ஏற்பாடு மாறுபடாமலே இருக்க

முடியுமா? அன்றி, எந்தச் சமுதாயமும் காலப்போக்கில் மாறுபடாமலே இருக்க முடியுமா? என்னும் வினக்களுக்கு 'முடியாது' என்பதே விடை. இதைப் பண்டை இந்துக்களும் உணர்ந்தே இருந்தனர். ஆதலால், எத்தகைய மாறுபாடும் எப்போதும் அடையாத ஒரு சமுதாயத்தை அவர்கள் விரும்பவில்லை; காலப்போக்கில் உண்டாகும் வேறுபாடுகள் பயனிலவாயும், தீமை பயப்பதாயும் அமைந்தால் அவ்வேறுபாடுகளை மாற்றி மறுபடியும் பண்டைய நிலைக்கே சமுதாயத்தைக்கொணரும் மாற்றங்கள் மட்டும் விரும்பத்தக்கவை, தேவையானவை என்றே அவர்கள் கருதினர். மற்றும் அவர்கள் காலப்போக்கில் நல்ல நிலையில் இருக்கும் சமுதாயம் இழி நிலையடைவதுதான் இயற்கை என்று கருதினர். சிறந்த யுகத்திலிருந்து இழிந்த யுகத்திற்கு மாறி வருவதுதான் இயற்கை என்பது அவர்கள் கருத்து. கலியுகம் என்னும் மிக இழிந்த யுகத்தில், மக்கள் வாழ்க்கை நெறிகள் சிதறிப்போய் அறம் அழிந்து போகும் என்றும் கருதினர். இவ்வாறு தீய சக்திகளின் ஆதிக்கத்தால் கெட்டுப்போகும் சமுதாயத்தை அவற்றினின்றும் காப்பாற்றிப் பண்டைய தூய நிலைக்கு ஏற்றுவதற்குக் கடவுளே முற்படுவர் என்றும் கருதினர். இந்துக்களேயல்லாமல், பௌத்தர்கள், சமணர்கள் முதலியோரும் இந்நாட்டில் பண்டைக்காலத்தில் இருந்தனர். அவர்கள் இந்துக்களுடைய அறக்கோட்பாடுகளை அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை. ஆரிய இந்துக்கள் மேற்கொண்ட சமூகப் பாகுபாடுகள் அவர்களுக்கு உடன்பாடில்லை. எனவே, உலகியல் வாழ்க்கையில் மிகுதியும் ஈடுபடுதலை அவர்களுடைய சமயங்கள் எதிர்த்தன. ஆதலால், உலகியலோடு தொடர்புபட்ட கலைகளை வளர்ப்பதிலோ உருவாக்குவதிலோ அவர்களுக்கு மிகுந்த ஊக்கம் இருந்திருக்க முடியாது. பிற துறைகளில் இந்துக்களுடைய சமுதாயக் கருத்துக்கள் பலவும் அவர்களுக்கும் உடன் பாடாகவே இருந்தன. ஆகவே, பண்டைய இந்தியாவில் நடை முறையில் இருந்த சமுதாய ஏற்பாட்டிற்குப் பெரிய எதிர்ப்போ, மாறுபட்ட கருத்துக்களோ உருவாகவில்லை.

இவ்வாறு ஒழுங்காகவும் அமைதியாகவும், மிகுதியும் மாறுபடாத நிலையிலும் இருக்குமாறு அமைந்த இந்து சமுதாயத்தின் அடிப்படை அறத்திற்கு 'வருணாசிரம தருமம்' என்பது ஒரு பெயர். வருணம் என்பது பழைய இந்து சமுதாயத்தை நான்காகப் பிரித்த பாகுபாடுகளுக்குப் பெயர். பிராம்மணர் (அந்தணர்), க்ஷத்திரியர் (அரசர்) வைசியர், சூத்திரர் என்போர் நான்கு வருணங்கள். இவர்கள் தொடக்கத்தில் தாங்கள்

மேற்கொண்ட தொழில்கள் காரணமாக இவ்வாறு பிரிக்கப் பட்டனர் என்று சில வரலாற்றாசிரியர் கருதுவர். இவர்களில் பிராம்மணர் என்போர் வேதம் முதலிய கலைகளைக் கற்று ஆரியர் தம் கடவுளர்க்கு விருப்பமான யாகங்களைச் செய் வார்கள். அவர்கள் நாட்டைக் காப்பவர்கள்; நாட்டில் குழப் பங்கள் தோன்றாதவாறு படை பலத்தைப் பயன்படுத்துவர், தீமையை ஒறுத்து நன்மையைக் காப்பவர்கள்; போரிடுதல் அவர்களுடைய தொழில். ஆயினும், முக்கியமாக வருணாசிரம தருமத்தைக் கடைப்பிடிக்கும்படி சமூகத்திற்குத் தேவைப்பட்ட வசதிகளைச் செய்து கொடுப்பதோடு, அந்தத் தருமத்தை மேற் கொள்ளாதவர்களை ஒறுப்பதும் அவர்களுடைய கடமை. வருணங்களை ஒன்றோடொன்று மயங்கி ஒன்றாகிவிடாமல் பிரித்து வைப்பது மன்னனுடைய கடமையாகக் கருதப்பட்டது. இந்தக் கடமையில் தவறும் மன்னர்கள் இறைவனால் தண்டிக்கப் படுவர் அல்லது நரகத்தை எய்துவர் என்று கூறப்பட்டது. இவ்வாறு வருண 'சங்கம'த்தைத் தடுக்காத அல்லது ஊக்கு வித்த குற்றத்திற்காக, வேனன் என்னும் மன்னன் ஒருவன் பெருந் தண்டனை யடைந்த வரலாறு புராணங்களில் கூறப் பட்டது. அர்த்த சாத்திரம் இயற்றிய கௌடில்யரும், தரும சாத்திரங்களை இயற்றிய மநு முதலியவர்களும் இதனையே வற் புறுத்திக் கூறினர். ஆகவே, அர்த்த சாத்திரங்களிலும், தரும சாத்திரங்களிலும் எடுத்தோதப் பெற்ற சமுதாய மரபுகளுக்கு எதிராக அரசர்கள் யாதொன்றும் செய்யலாகாது என்பது அவர்களுடைய எண்ணம். 'தொடக்கத்தில் அமைந்த (அல்லது தாங்கள் தங்களுக்கு உகந்தது என்று கருதி அமைத்துக் கொண்ட) சமூக ஏற்பாடுதான் நிலைத்து நிற்பதற்கு வேண்டிய அளவு மட்டும் மாறுதல்களை மேற் கொள்ள வேண்டும்; மற்று, தாங்கள் விரும்பியவாறெல்லாம் ஒவ்வொரு காலத்தவரும் சமுதாய ஏற்பாட்டை மாற்றியமைக்க முற்படுவது தவறு' என்று அவர்கள் கருதினார்கள். இக்கருத்திற்கேற்பச் சமூகத் தைக்காப்பாற்றுவதையே மன்னருடைய கடமையாகக் கருதி னர். மன்னர் இக்கடமையாற்றும் முயற்சியில் தமக்குத் தேவை யான (அமைச்சர், படைத்தலைவர் முதலிய) கருவிகளை ஆக்கிக் கொள்ளலாம். ஆனால், இக் கருவிகளைக் கொண்டும் அவர்கள் சமூக ஏற்பாட்டைக் குலைக்கவோ, மாற்றவோ முற்படக் கூடாது, அதைக் காப்பாற்றவே பயன்படுத்த வேண்டும் என் பது கருத்து. ஆகவே, (வருணாசிரம) தருமத்தின் அடிப்படையில் நாட்டையாளும் கடமை மன்னருக்கு உண்டேயன்றி, அம்மரபை (தாம் நல்லது என்று எண்ணும் காரியத்திற்காகக்கூட) மாற்றி யமைக்கும் உரிமை இல்லை என்பது இதனால் பெறப்படும்.

அரசு தொழில் புரிந்த க்ஷத்திரியருக்கு அடுத்தபடியாக ஆரியர் சமுதாயத்தில், வைசியர் என்பவர்கள் கருதப்பட்டனர். வைசியர் வாணிபம் செய்பவர். அந்தணர், அரசர், வைசியர் என்னும் இம் மூன்று பிரிவினரே ஆரியரின் சமுதாய அமைப்பின் உள் நின்றவர்கள். அவர்களுக்கும், ஆரியர்களுடைய சிறந்த நூலான வேதத்திற்கும் கடவுளரை நோக்கித் தங்கள் நன்மைக்காக அவர்கள் இயற்றிய வேள்விகளுக்குத் தொடர்பு உண்டு. இத் தொடர்பினைத் தோற்றுவிக்கும் அறிகுறியாகவும் அவர்களுடைய சமூக மரபினை யொட்டியும் அவர்கள் பூணூலை யணிந்தனர்; அவர்களில் அந்தணர்கள் வேதத்தை ஓதவும் ஓதுவிக்கவும் உரியராயும், அரசர்கள் வேதத்தை ஓத மட்டும் உரியராயும், வைசியர்கள் வேதமோது நலைக் கேட்க மட்டும் உரியவராயும் இருந்தனர். இம் மூவகையினரில் அந்தணரைக் காட்டிலும் அரசர்கள் (அல்லது அவர்களும், அவர்கள் தொழிலைச் செய்த பிறரும்) பலராயினர்; அரசர்களிலும் வைசியர் மிகப் பலராயினர். ஆதலாலே அவர்களுக்கு 'வைசியர்' என்னும் பெயராயிற்று. 'வைசியர்', என்றால் 'எங்கும் பெரிய எண்ணிக்கையில் பரந்திருப்பவர்' என்றே பொருள்படும்.[1] இம் மூவகையினரே, தொடக்கத்தில் ஆரியரது சமுதாயத்தின் முப்பெரும் பகுதியினராயிருந்தனர்.

ஆயினும், இம்மூவரும் செய்த தொழில்களைத் தவிர எண்ணிறந்த வகைத் தொழில்களைச் செய்வோர், முக்கியமாக, உழவுத் தொழில் செய்வோரும் பிற ஏவல் கேட்போரும் எனப் பலர் சமுதாயத்திற்குத் தேவைப்பட்டனர். இவர்கள் இல்லையேல் சமுதாயத்தில் நடைபெற வேண்டிய காரியங்கள் செவ்வனே நடைபெறா. ஆதலால், தாங்கள் எவ்வாறே வென்று கொண்ட இந்தியப் பண்டைக் குடிமக்களில் தங்கள் ஏவல் கேட்க உடன்பட்டாரை எல்லாம், தொகுத்து 'சூத்திரர்' என்னும் பகுப்பில் அடக்கினர். இவர்களுக்கு மேற் கூறிய மூவகையினர் இட்ட வேலைகளை நிறையேற்றுவது தலையாய கடனாகக் கருதப்பட்டது. இவர்கள் பெரும்பாலும் நிலத்தைத் திருத்திச் சாகுபடி செய்யும் தொழிலிலும், பிற கூலி வேலைகள் செய்வதிலும் ஈடுபட்டனர். இவர்கள் ஆரியர் சமுதாயத்தின் ஓரத்தில் இருந்தனர். அதில் பட்டும் படாமல், கடமைகளை மட்டும் ஆற்றிக் கொண்டு, முக்கியமாக உரிமைகள் ஒன்றும் இலராய் வாழ்ந்தனர். இவர்கள் ஆரியர் கூட்டத்திற்குப்

[1] விஷ் என்னும் வடசொல், எங்கும் பரந்திருக்கும் தன்மையினைக் குறிக்கும்; ஆதலாலே 'விஷ்ணு' என்னும் சொல்லும் பிறந்தது.

புறம்பினராகவே கருதப்பட்டனர். இவர்கள் வேதத்தை ஓதவோ ஓதுவதைக் கேட்கவோ உரிமையிலர் என்றும் கருதப் பட்டனர். ஆதலால், இவர்கள் பூணூல் அணிவதில்லை. ஆரியர்கள் வகுத்துக் கொண்ட வாழ்க்கைக் கடன்கள் (சம்ஸ்காரங்கள்) இவர்களுக்கு இல்லை. பூணூல் அணியும் முதல் மூன்று பிரிவினர்களையும் இரு பிறப்பாளர் (துவிஜர்) என்றும், ஏனையோரை ஒரு பிறப்பினர் என்றும் பகுத்தனர்.

இந்நால் வகையினரையும் தவிரக்காட்டில்வாழ்பவர்களும், மலைகளில் வாழ்பவர்களும், ஆரியருடைய வாழ்க்கை முறைகளையும், சமய மரபுகளையும் ஏற்றுக்கொள்ளாமல், தங்களுடைய பண்டைய வாழ்க்கை நெறிகளையே தொடர்ந்து,கடைப்பிடித்து வந்த பலரிருந்தனர். அவர்களை யெல்லாம் பொதுவாகத் தீண்டத்தகாதவர் என்றும் நெருங்கவும் கூடாதவர்கள் என்றும் தனிப்படுத்தினர். ஆரியர் வகுத்த நான்கு வருணங்களுக்கும் புறம்பாக இவர்கள் இருந்தமையால் இவர்களைச் சிலர் 'பஞ்சமர்' (ஐந்தாம் வகுப்பினர்) என்றும் குறிப்பிடுவதுண்டு.

இவ்வாறு அமைந்த சமூக ஏற்பாடு தனது தன்மையை இழக்காமல் இருப்பதற்குப் பல வழிகள் வகுக்கப் பட்டன. சிறப்பாக, இவ்வருணத்தார் ஒருவரை யொருவர் மணந்து கொள்ளார். ஒரு வருணத்தவரோடு இணங்கியிருந்து உணவு கொள்ளுதலும் தவிர்க்கப்பட்டது. ஒரு வருணத்தார் மற்றொரு வருணத்தாரை மணந்து கொண்டாலோ, ஒருவர் உணவை ஒருவர் உண்டாலோ 'தீட்டு' அல்லது 'அசுத்தம்' ஏற்பட்டதாகக் கருதினர். இவ்வாறு ஒரு வருணத்தாரிடமிருந்து பிறர் பிரிக்கப் பட்டனர். இதுவேயல்லாமல், ஒரே ஒரு வருணத்துள்ளும் பல உட் சாதிகள் தோன்றி இச்சாதிகளும் ஒன்றோடு ஒன்று மணவினை முடிக்க மறுப்பனவாய்ப் பல பல்கின. இதன் காரணமாக, இந்நாட்டில் ஓரளவு ஒற்றுமை காணப் படுமாயினும் பல நிலைகளில் வேற்றுமைகள் வெளிப் படையாகத் தோன்றுகின்றன.

இவையெல்லாம் வெறும் சமுதாயப் பாகுபாடுகளாக மட்டும் எண்ணப் படவில்லை. 'ஒவ்வொரு மனிதனும் எந்தச் சாதியில் அல்லது வருணத்தில் பிறந்தானோ அந்தச் சாதியிலேயே, வருணத்திலேயே இருத்தல் வேண்டும், ஒரு சாதியை விட்டு மற்றொரு சாதியினனாக ஒருவன் மாறமுடியாது' என்பது அவர்களுடைய கோட்பாடு; ஆதலால் பிறப்பினாலேயே சாதி ஏற்பட்டு விடும் என்னும் கருத்தும் ஒரு சாதியிற் பிறந்ததும்

அச்சாதிக்கு உரிய தொழில்களை மேற்கொள்வதும், அதற்கு, ஒத்த வாழ்க்கை முறைகளைக் கடைப்பிடிப்பதும் ஒருவனுடைய கடமையாகும் என்பதும் இதனல் தோன்றிய பிற கோட்பாடு களாம். ஆனல் நாளடைவில் ஒரு சாதியிற் பிறந்தவன் என்றென்றைக்கும் அச் சாதிக்கே உரியவன் என்னும் கோட்பாடு மட்டும் மிஞ்சிற்று: அவன் அச்சாதிக்குரிய தொழிலையே செய்ய வேண்டும் என்றும் நீதி தளரத் தொடங்கியது. அன்றியும் அவன் தன் சாதிக்குரிய தொழிலை ஆற்றும் பொழுதும் அதனைச் சரிவர ஆற்றவேண்டும் என்னும் மரபும் சிறிது சிறிதாகத் தளர்ந்தது. நாட் போக்கில் பிறப்பிற்கும் தொழிலுக்கும் தொடக்கத்தில் இருந்த தொடர்பு பெயரளவிற்கே என்னும் நிலைமையும் எய்திற்று. இத் தொடர்பு குறையவும், சாதிக் கட்டுப்பாடு (சாதி விட்டுச் சாதி மணம் புரிந்து கொள்வ வதில்லை, பல சாதிக்காரர் ஒன்ருயிருந்து உணவருந்துவதில்லை என்னும் கட்டுப்பாடு.) இறுக ஆரம்பித்தது. இவ்வாறு ஆதி காலத்தே ஏற்படுத்தப் பெற்ற முறைகள் ஓரளவு மாறித் தளர்ந்து விட்டால் அம்மாற்றமும் தளர்ச்சியும் காலப் போக்கில் மனித சமுதாய வாழ்க்கையில் தவிர்க்க முடியாமல் நிகழக் கூடிய இழிவு என்ற கருதப்பட்டன. இதுகாறும் கூறியவை வருணசிரம தருமம் என்னும் சமுதாய முறையில் வருணம் என்பது யாது; அது இந்து சமூகத்தில் எவ்வாறு ஒரு நிலையமாயிற்று என்பதை விளக்க வந்தவை. இனி ஆசிரமம் என்பது யாது என்று பார்ப்போம்.

'ஆசிரமம்' என்னும் சொல் வாழ்க்கையில் ஒருவன் 'எய்திய நிலை' என்று பொருள்படும். பிறப்பிலிருந்து, இறப்பு வரை ஒருவனுடைய வாழ்க்கை நான்கு நிலைகள் அல்லது ஆசிரமங்களாகப் பிரிக்கப்பட்டது. அவை பிரமசரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்யாசம் என்பனவாம். இவற்றில் பிரமசரியம் என்பது ஒருவன் வாலிபப் பருவத்தே கல்வி பயிலும் நிலை, பிரமத்தைப்பற்றிய அறிவைத் தேடி அலையும் நிலை அதுவாதலின் அது அப்பெயர் பெற்றது. கிருஹஸ்தன் கல்வியை முடித்துக்கொண்டு, ஒரு இல்லறத்தானுக மண வாழ்க்கை வாழும் நிலையில் இருப்பவன். வானப் பிரஸ்தன் என்பான், வீட்டை விட்டு நீங்கிக் காடுகளில் வசித்து முற்றும் துறக்கும் நிலைக்குத் தன்னைப் பயிற்றிக் கொள்ளும் நிலையில் இருப்பவன். சந்யாசி என்பவன் முற்றுந் துறந்தவன். இந்நால் வகை நிலைகள் துவிஜர்களுக்கே கூறப்பட்டது. அவர்களும் தங்கள் வாழ்க்கைக்குக் கூறப்பட்ட நான்கு நிலைகளில் மூன்று, பிரமத்தை (கடவுளை) அறியவும், அடையவும் செய்யும்

முயற்சிகளில் செலவழிவதாலும் அந்நிலையிலும் கிருஹஸ்தன் தான் பிறருக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைப் பற்றியே எண்ணி, தனக்குக் குடும்பத்திலும், சமுதாயத்திலும் சில உரிமைகள் உள என்பதை மறந்து செயலாற்ற வேண்டியிருந்தமையாலும் இந்து சமுதாயமே உலகியல் அறிவைவிட ஆன்ம விசாரம் சிறந்தது, உரிமைகளுக்குப் போராடுவதை விடக் கடமைகளையாற்றுவது சிறந்தது என்னும் கருத்து அடிப்படையில் உருவாயிற்று எனலாம்.

வருணங்களும், ஆசிரமங்களும் தவிர; ஒவ்வொரு தனி மனிதனுடைய வாழ்க்கையிலும் பிறப்பிலிருந்து இறப்பு வரை அவனுக்குப் பிறர் செய்யும் அல்லது அவன் பிறருக்குச் செய்யும் வினைகள் (ஸம்ஸ்காரங்கள்) ஏராளமானவை. அவன் பிறக்கும் போதே பெற்றோருக்கும் உற்றோருக்கும் தீட்டு (தீண்டாமை) ஏற்படுத்தி விடுகிறான். இறக்கும் பொழுதும் பத்து நாளைக்குத் தீட்டு ஏற்படுத்தி விட்டுத்தான் போகிறான். இத்தீட்டுக் காலத்தில் பிறந்தவன் அல்லது இறந்தவனோடு நெருங்கிய உறவு பூண்டவர்கள், பிறர் சம்பந்தப்பட்டவரை, தீண்டத்தகாதவர்களே. அவர்களைத் தொடவோ, அவர்கள் உடுத்திய உடைகளைத் தொடவோ, சமைத்த உணவை உண்ணவோ கூடாது; அப்படித் தவறிச் செய்துவிட்டால், செய்தவர்களைத் தீட்டு ஒட்டிக்கொள்ளும். ஆனால், இத்தீட்டினைக் கழுவி விடுவதற்குக் கழுவாய்களும் உண்டு. இவையெல்லாம் வெறும் சமூகப் பழக்கவழக்கங்களாகக் (Social practices) கருதப்படவில்லை. இவற்றைச் சமய மரபுகளாகவே கருதினர். பெயரிடுதல், காது குத்துதல், முடிவைத்தல், முதல் உணவு அருத்துதல், பள்ளியிற் சேர்த்தல், பூணூல் பூணுதல், மணந்து கொள்ளுதல், பிள்ளைப் பேறு, துறவு மேற் கொள்ளுதல், இறந்துபோதல் ஆகிய எல்லாமே வாழ்க்கை வினைகள் (ஸம்ஸ்காரங்கள்). இவற்றிற் கெல்லாம் சமயத்தால் போற்றப்படும் பெருமை உண்டு. பொதுவாக, ஓர் இந்துவின் வாழ்க்கையில் சமயம் குறுக்கிடாத சமயமே இல்லை எனலாம்.

ஆரியர் தொடக்க கால சமுதாயத்தில் மகளிர்க்கு ஓர் உயரிய நிலை இருந்தது. அவர்கள் வேதங்களை ஓதவும், கற்பிக்கவும் கூட உரிமை பெற்றிருந்தனர். வேத கால மகளிர் பூணூலும் அணிந்திருந்தனர் என்று கருத இடமுண்டு. யாக்ஞவல்கியர் என்னும் ரிஷிக்கும், கார்க்கி என்பாளுக்கும் நிகழ்ந்ததாகக் கூறப்படும் பேச்சிலிருந்து மகளிர் எவ்வளவிற்கு ஆடவரோடு சமமாகப் பழகினர் என்பது தெரிய வரும்.

ஆயினும், நாளடைவில் எக்காரணத்தாலோ; மகளிர்க்குத் தனிப்பட்ட உரிமைகள் எவையும் இல்லை. ஆடவர் வாயிலாகவே அவர்கள் பெருமைகளையடைய முடியும், வேதங்களை அவர்கள் கற்கலாகாது, அவர்களுக்குப் பூணூல் அணியும் ஸம்ஸ்காரம் இன்மையால் அவர்கள் துவிஜர் (இருபிறப்பாளர்) ஆகார்; என்னும் கருத்துக்கள் நிலவின. மேற் கூறிய காரணங்களால் சமூக நிலையில் அவர்கள் உயர்ந்த சாதியில் பிறந்தவர்களாயிருப்பினும் சமய நிலையில் அவர்களுக்கும் சூத்திரராகிய நான்காம் வருணத்தினருக்கும் வேறுபாடு இல்லை என்கிற அளவிற்கு அவர்கள் நிலை மாறிற்று. நான்காம் வருணத்தினர் முதல் மூன்று வகுப்பினருக்கும் ஏவல் புரியும் நிலையினர் என்று எண்ணப்பட்டது போலவே, மகளிரும் ஆடவர்க்கு ஏவல் புரியப் பிறந்தவர்கள் என்னும் கருத்து சமூகத்தில் வேரூன்றியது.

மேற்கூறிய சமூக அமைப்பு மன்னனால் பாதுகாக்கத்தக்கது என்று கருதப்பட்டது. சமூகத்தில் பெரும்பான்மையோரும் அறிஞர்களும் சிறந்தவை என்று கருதியவற்றைப் பாதுகாப்பதே மன்னனது கடமை; தம் விருப்பப்படிப் புதியன புகுத்தலோ பழையன கழித்தலோ அவனது வேலையன்று; தாமே கழிந்த பழையவற்றைப் போற்றுது தாமே புகுந்த புதியவற்றைப் போற்ற வேண்டுவதும் மன்னனது கடமையாம் என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆகவே, அக்கருத்துக்களைச் செயல் படுத்தும் பொறுப்பேற்றுள்ள மன்னருக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்புகள் புலப்படும். ஆரியர் சமூகத்தின் பல பகுதிகளுக்கிடையே ஒன்றிற்கு ஒன்று நிலவிவர வேண்டியதாகக் கருதப்பட்ட உறவுகளின் முழுமைக்கு 'தர்மம்' என்னும் பெயர் பொருந்துவதாயிற்று.

இந்தத் தருமம் இருவகைப்படும். ஒன்று தனிமனிதன் தன் வாழ்க்கையில் தன்னளவிற்குக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகள்; மற்றொன்று அவன் சமூகத்தில் பிறரோடு பழகும் போது போற்ற வேண்டிய நடை முறைகள். இவற்றை வள்ளுவர் தமது குறளில் நன்றாக அமைத்துக் காட்டியுள்ளார். ஓர் இல்லறத்தானது ஒழுக்க நெறி இவ்வாறிருக்க வேண்டும் என்பதை இல்லற வியலிலும், ஒரு துறவியின் ஒழுக்க நெறி இத்தன்மைத்தாக வேண்டும் என்பதைத் துறவற வியலிலும், இல்லறத்துள்ளும் மனைவியோடு அன்பு காரணமாகக் கொள்ளப்படும் உறவு இத்தன்மைத்தாதல் வேண்டும் என்பதனைக் காமத்துப்பாலுள்ளும், சமூக உறவுகள் இப்படியிருக்க

வேண்டும், அவற்றைப் பாதுகாத்துத் தீயன கடிந்து நல்லன போற்றும் பண்புகள் மன்னனிடமும் அவனது ஆட்சிக் கருவிகளான அமைச்சர் முதலியோரிடமும் இவ்வாறு அமைய வேண்டும் என்னும் விவரங்களைப் பொருட் பாலுள்ளும் எடுத்துக் காட்டியுள்ளார். ஆதலால், மக்களின் தனி வாழ்க்கையும் பொது வாழ்க்கையும் ஆகிய அகமும் புறமும் முற்றிலும் வேறுபட்ட இரு வாழ்க்கை நிலைகள் அல்ல. அவையிரண்டையுமே தருமம் கட்டுப்படுத்தும்; தருமப்படி கற்க வேண்டியவற்றைக் (பிரமசாரியாயிருந்து) கற்று, கிருஹஸ்தனாகவும், துறவியாகவும் இருக்கும் நிலைகளிலும் அக்கல்விக்குத் தக நிற்றல் முறை. தரும சாத்திரக் கோட்பாடுகளுக்கு மாறு படாத நிலையில் திரவியம் தேடி, இல்வாழ்க்கை வாழ்ந்து. இன்பம் துய்த்து, இரப்போர்க்கு ஈந்து குடிமகன் ஆற்ற வேண்டிய கடமைகளையாற்றி இருத்தல் வேண்டும். இங்ஙனமே மன்னனும் அறநூல்களில் கூறிய முறை தவறாமல் மக்களையும் நாட்டையும் புரந்து செங்கோலோச்ச வேண்டும். இந்நிலையில் மற்றவர்கள் யாவரைக் காட்டிலும் மன்னனுக்கே பொறுப்பு அதிகம். தன் தருமத்தைத் தான் கடைப்பிடிப்பதேயன்றி பிறரும் அவரவர் கடமைகளை முறையே ஆற்றிவருகிறார்களா என்று ஆய்ந்தறிந்து தருமத்தை நிலை நாட்ட வேண்டியது மன்னனுடைய கவலையும் வேலையும் ஆகும். கடவுளருள்ளே திருமால் மன்னனாக வருணிக்கப்படுவான். எப்பொருளையும் படைப்பவன் பிரமனாயினும் காப்பவன் விஷ்ணு என்பது கொள்கை. உலகில் அதருமம் மிக்கு தருமம் தாழ்ந்தபோது தருமத்தைக் காத்து அதருமத்தை யொழிப்பதற்காக அவதாரம் செய்யும் கடமை அக்கடவுளுடையதுஎன்பர் பௌராணிகர். அம்முறையைப்பின் பற்றியே உலகைக் காக்கும் மன்னனைத் திருமால் என்று உவமை காண்பர். ஆதலாலே நம்மாழ்வார் என்னும் வைணவப் பெரியாரும் திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டே[1] னென்றும் கூறினர். வடநூலாரும் 'நா விஷ்ணு: ப்ருதிவீபதி' என்பர்.

ஆயினும், மன்னரும் தருமத்திற்கு உட்பட்டவர்களே. தருமத்திற்குப் புறம்பாகஏதேனும்அவர்கள் செய்தால்அவர்கள் கடவுளின் தண்டனைக்கு உட்படுவதோடு தங்கள் இறைமையினின்றும் இழிந்து விடுவர். சமூகத்தில் எல்லோரையும் போலவே மன்னரும் தருமத்தின் கட்டளைகளுக்கு உட்பட்டுச் செயற்பட வேண்டியவர்களாதலாலும்; ஒவ்வொருவரும் ஒரு

[1] திருவாய்மொழி 4ஆம் பத்து, 4ஆம் திருமொழி, 8ஆம் செய்யுள்.

வகைக் கடமையை ஆற்றுவது போல மன்னரும் ஒரு கடமையையே ஆற்றுவர் ஆதலின், மற்றவர்க்கு இல்லாத சிறப்பு ஒன்று மன்னர்க்கு மட்டும் உண்டு என்று கருத வேண்டா. ஆதலால் சமூக முழுமைக்கும் தலைமை தாங்கும் சக்தி தருமம் எனப்படும் என்பதாயிற்று. தருமம் என்னும் வெண் கொற்றக் குடைக்கீழ் உலக முழு தாளும் சிறப்புடையவனே அரசன். உலகத்தோடு அரசனும் அக்குடைக்குக் கீழே இருப்பவன் என்பது வெளிப்படை. இவ்வரசன் உலகினை ஆளுதற்குத் தனக்குத் தேவையான ஆட்சிக் கருவிகளை ஆக்கிக்கொள்வான். இக்கருவிகளே அமைச்சர் புரோகிதர், படைத்தலைவர் முதலிய ஆட்சி உதவியாளர்கள் இவர்களுடைய தன்மை, தகுதி செயற்பாடு ஆகியவற்றின் வரலாற்றை ஆய்வதே இந்நூலில் நோக்கம்.

பண்டைய இந்திய ஆட்சி வரலாற்றில் ஆட்சித்தத்துவம் என்பது ஒன்று உண்டு; ஆட்சிமுறை என்பது மற்றொன்று. இவற்றில் பின்னர்க் கூறியது அரசு ஆட்சி செலுத்துவதற்குக் கருவிகளாயமையும் ஆட்சி உறுப்புக்கள். உதாரணமாக, அரசனே அத்தகைய கருவிகளில் ஒருவனாவான். நாடு பெரிது, மக்கள் மிகப் பலர். ஆட்சிப் பிரசினைகள் நாளுக்கு நாள் பெருகும் இந்நிலையில் அரசன் ஒருவனே ஆட்சிப் பொறுப்பினை நிர்வாகத்துறையில் ஏற்றுக் கொள்ள முடியாது. ஆகையால் நாட்டை நிர்வகிக்கும் வேலையில் தனக்குத் துணைபுரிவதற்காக அவன் ஏவலாளர்களை ஏற்படுத்திக் கொள்வான். அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், வரி வசூலிப்போர், நீதி வழங்குவோர் எனப் பலதரப்பட்ட அலுவலாளர்கள் அரசனால் நியமிக்கப்படினும், அவர்கள் யாவரும் அவனுடைய ஏவல் கேட்பவர்களே யாதலால், ஏவலாளர் எனத்தக்கவர்களே. அவர்கள் முற்றிலும் ஏவல் கேட்பவர்கள் தாமா, அரசன் ஆணையை மாற்றி நாட்டு மக்களின் நன்மையைக் கருதி அரசனுக்கு அறவுரை கூறும் தகுதி வாய்ந்தவர்களா என்னும் வினாக்களுக்கு விடை இந்நூலில் அடுத்து வரும் பகுதிகளில் கூறப்படும்.

இவ்வாறு அமைந்த ஆட்சிக் கட்டுக் கோப்பு ஏதேனும் ஓர் உட்பொதி கருத்தை மேற்கொண்டே ஆக்கப்படும் என்பது தெளிவு; ஏனெனில், எந்தச் செய்கைக்கும், நிலையத்திற்கும், அமைப்பிற்கும் அடிப்படையில் ஒரு தத்துவம் இருந்தே தீரும் அல்லது இருந்தே தீரவேண்டும்— இல்லாவிடில் இவை யாவும் குழப்பத்தில் முடியும். ஆதலால், இந்த ஆட்சி முறைக் கட்டுக் கோப்பிற்கும் ஒரு தத்துவம் இருக்க வேண்டும். இந்தத் தத்து

வத்தின் அடிப்படை மன்னனில்லாமல் ஒரு ஆட்சி இருக்க முடியாது என்பது இந்தக் கொள்கை. இந்திய அரசியல் கோட்பாட்டு வரலாற்றில் பெரும்பான்மை அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அரசனின்றி வேறு வகைகளில் ஆட்சி அமையும் மரபு சில சமயங்களில் இந்நாட்டில் சில பகுதிகளில் நடை முறையில் இருந்து வந்தமை வரலாற்றில் காணப்படுமாயினும், அம்மரபு மிகச் சிறுபான்மை மரபு; இற்றைக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முன்பு வட கிழக்கு வட மேற்கு இந்தியப் பகுதிகளில் சில இடங்களில் பயிற்சியில் இருந்து வந்த இந்த மன்னனில்லா ஆட்சி முறை பேரரசுக் குப்தர் ஆட்சிக்காலம் வரையில் ஒவ்வொரிடங்களில் காணப் பட்டுப் பிறகு இந்நாட்டு வரலாற்றிலிருந்து மறைந்து போயிற்று. கி.பி. 1950–ம் ஆண்டு இந்திய மக்கள் தமக்குத் தாமே ஒரு புதிய அரசியல் சட்டத்தை வகுத்துக் கொண்ட பொழுதுதான் இந்த முறை மறுபடியும் இந்திய வரலாற்றில் புகுந்தது.

இனி, இவ்வரசனுக்கு அருகிலிருந்து அறிவுரை கூறக் கூடிய, கூற வேண்டிய சமயங்களில் அவ்வறிவுரைகளைக் கூறி மன்னனிட்ட கட்டளைகளை மேற்கொண்டு தாமேயோ தம் கீழ் அலுவல் பார்க்கும் பிறரைக் கொண்டோ நிறைவேற்றும் பொறுப்புடையவர்க்கு அமைச்சர் என்பது பெயர். இவர்கள் மிகப் பொறுப்பு வாய்ந்த, தலைசிறந்த ஏவலாளர். தற்காலத்துப் பிரதம மந்திரி, முதல் அமைச்சர் என்பார்க்குநிகராக இருப்பர் அக்காலத்துத் தலைமை அமைச்சர்; ஆயினும் மன்னரது வரம் பற்ற ஆட்சி அதிகாரத்தாலும் இறைமைத் தன்மையாலும் அமைச்சர்கள் தங்கள் இச்சையாலேயே நிர்வாகம் நடத்துவது என்பது அக்காலத்தில் இயலாததாகும். இனி, மன்னர் எப் படித் தமது பொறுப்புக்களை அமைச்சரிடம் ஒப்படைப்பரோ அவ்வாறே அவ்வமைச்சர்களும் தங்கள் பொறுப்புக்களைத் தமக்குக் கீழ் அலுவல் பார்க்கும் பிற அலுவலாளரிடம் ஒப் படைப்பர். அவர்கள் வரி வசூலிக்கவும், நீதித்துறையில் உதவி செய்வதற்கு எனப் பலவகை ஆட்சித் தொழில்களில் ஈடுபடுவர். புரோகிதன், கணி என்போர் பண்டைக் காலத்து இந்திய அரசவைக்கு இன்றியமையாத ஆட்சிக்கருவிக ளாகக் கருதப்பட்டனர். சாத்திரங்களிலும் அற நூல்களிலும் கூறியாங்கு ஆட்சி நடத்தப் பெறவேண்டும் என்பது அடிப் படைக் கொள்கையாதலின், அந் நூல்களைக் கற்று அவற்றின் பொருளை விரிக்கும் திறமை யுடையோர் அவைக்களத்தே தேவைப்பட்டனர். மன்னர் உலகியலிலேயேயன்றி ஆன்

மார்த்த சமயத் துறைகளிலும் ஈடுபாடுடையராதலின் அத் துறைகளிலும் அவருக்கு ஓர் ஊன்றுகோல் என அமையத்தக்க குல குருக்களை அவைக் களத்தே இருத்திக் கொள்வதும் ஒரு மரபாயிற்று. தசரதனுக்கு வசிட்டன் குல குருவாக அமைந்தது யாவரு மறிவர். தேவலோகத்தில் இந்திரனுக்கும் ஒரு குல குரு உண்டு. அவ்வாறே அசுரர்களுக்கும் குல குரு உண்டு. அவர்களே பிருகஸ்பதி (வியாழன்), சுக்கிரன் (வெள்ளி) என் போர் என்பது புராணம். இவர்கள் பிராம்மணர்களாகவே இருப்பர். தான் ஆளும் நாட்டைக் காப்பதே யல்லாமல் பிறர் நாட்டை வவ்வுதலும் மன்னனுடைய கடமை அல்லது தருமம் என்று கருதப்பட்டமையின், படையும் அதை நடாத்தத் தலைவர் களும் தேவைப் பட்டனர். மன்னர் பெரும்பாலும் தாமே படை நடத்துவது உண்டு. ஆயினும், பல படைத்தலைவர்களும் இருப்பர். பிறர் நாட்டைக் கவரக் கருதிப் படை யெடுக்கும் நோக்கமுள்ள மன்னர்களும், படை யெடுத்துப் பிற நாடுகளை வென்று கொற்றக் கொடி உயர்த்தியவர்களும், பேரரசு அல்லது சாம்ராஜ்யத்தை நிறுவிக் கொண்ட பேரரசர்களும் பல வகை வேத வேள்விகள் செய்வதுண்டு. இவற்றைநடத்து விக்கவும் அந்தணர்கள் தேவைப் பட்டனர்.

நீதி வழங்கும் அவைக்களத்தில் மன்னர் தாமே தலைமை தாங்கி, வீற்றிருந்து நீதி வழங்குவதுண்டு; ஆயினும்அந்தணர் அமைச்சர், சாத்திரம் உணர்ந்த பிற அறிஞர்கள் முதலியோ ரைக் கொண்டு நீதி வழங்குவதும் மரபாயிருந்தது. மேற் கூறிய அலுவல்கள் யாவையும் மன்னர் அவையிலேயே அன்றி, அவர் மேற்பார்வையிலே நடைபெறக் கூடிய அலுவல்களே. ஆனால், வரிவசூல் செய்யும் பொறுப்பு பிறரிடமே ஒப்படைக்கப் பட வேண்டிய அலுவலாகும். அக்காலத்தில் பெரும் பாலும் நகர மக்களிடமிருந்தே வரிவசூலிக்கப்படும். வருமானவரிஎன்ப தொன்றில்லை. பெரும் பான்மை மக்கள் வாழ்ந்து வந்த கிராமங்களிலிருந்தே மன்னனது இறைப் பணத்தின் பெரும் பகுதி வந்தது; உழவுத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் இன்றுபோல் அன்றும் பெரும் பான்மையராவர். ஆதலால் கிராமங்களுக்குச் சென்று இறைப் பணத்தை வசூலிக்க எண் ணிறந்த அலுவலர் தேவைப் பட்டனர். கிராம மக்களே வரி களை வசூலித்து இவர்களிடம் கொடுத்து விடுவர். ஆதலால், வரி வசூலிக்கும் தொழில் எளிதாயிருப்பினும் அதைச் செய்ய மிகப் பலர் தேவைப்பட்டனர். இவ்வாறு நாடு முழுவதும் மன்னன் கட்டளைகள் சென்று மக்களை அவனது இறைமைக்கும் பணிய வைக்க வேண்டுமாயின், நாட்டைப் பல பகுதிகளாகப்

பிரித்து ஒவ்வொரு பகுதியிலும் மன்னனுணையை நிறைவேற்றக் கூடிய ஆணையாளர்கள் நியமிக்கப் பட்டனர்.

மன்னர் பிற நாடுகளோடும் போர் புரிவதே யல்லாமல் மற்ற தொடர்புகளும் கொள்வர். பிற நாட்டு மன்னர்களுக்குச் செய்தி விடுக்கும் போது அச் செய்திகளைக் கொண்டு செல்வோர் தூதர் எனப் படுவர். அவர்கள் தங்கள் நாட்டு நலனைப் பிற நாடுகளிலும் பரப்புதலைத் தமது தொழிலாகக் கொள்வர். இன்றைக்குப் போல் அன்றும் தூதர்களுக்குத் தனிப்பட்ட சலுகைகள் உண்டு. இத்தூதர்களே யல்லாமல், பிற நாடுகளிலும் தங்கள் நாடுகளிலும் நடக்கும் முக்கியமான செய்திகளை மன்னனுக்கு அவ்வப்போது அறிவிப்பதற்கு ஒற்றர்கள் நியமிக்கப் பட்டனர். இந்தத் தூதர்களும் ஒற்றர்களும் இவ்வாறு நடந்து கொள்ள வேண்டும், செயலாற்ற வேண்டும் என்பதற்குப் பல விதிகள் அமைக்கப்பட்டன. இவ்வாறு எளிய முறையில் மன்னராட்சி அமைந்தது. இந்த ஆட்சி முறையின் முக்கியமான தத்துவம் யாதெனில், பரம்பரை பரம்பரையாக தகப்பனுக்குப்பின் மகன் என்னும் முறையில் அரசு புரியும் மன்னராட்சிக்கு உட்பட்டுத் தங்கள் தங்களுக்குத் தருமம் ஏற்படுத்திய கடமைகளைத் தவருமல் செய்து வரும் குடி மக்கள் நிரம்பிய நாடே நாடெனப்படும். தருமத்தின் விதிகளுக்கு உட்பட்டு ஆட்சிபுரிபவனே மன்னன். தருமத்தின் விதிகளுக்கு மன்னனும் புறம்பானவனல்லன் என்பதே. இந்த ஆட்சித் தத்துவமே இந்திய அரசியல் வரலாற்றின் அடிப்படையாகப் பெரும்பாலும் அமைந்தது.

# 2. சான்றுகள்

வரலாறு சான்றுகள் இன்றியமையாதவை. பண்டைய வரலாற்றுச் செய்தியொன்றைக் குறிப்பிடும் பொழுது வரலாற்ருசிரியர் எந்த ஆதாரத்தைக் கொண்டு அந்தச் செய்தியை உண்மைச் செய்தியாகக் குறிப்பிடுகிருர் என்பதை அவர் தெளிவு படுத்தவேண்டும். இவ்வாறு தெளிவுபடுத்துவதற்குத் தேவையான ஆதாரங்கள் இல்லை யென்ருல், அச் செய்திகள் வரலாற்றுச் செய்திகள் ஆகா. ஆதலால், பண்டைய இந்திய அரசியல் நிலையங்களைப் பற்றி நாம் எழுதப் புகும் வரலாற்றிற்குச் சான்றுகள் யாவை என்று பார்க்க வேண்டும்.

நாம் தொடக்கத்திலேயே கண்டது போல, அரசியலைப் பற்றியும், ஆட்சி முறைகளையும் அரசியல் அமைப்புக்களையும் பற்றியும், மேனுட்டு கிரேக்க ரோமானிய அறிஞர்கள் ஆராய்ந்தது போல் இந்திய அறிஞர்கள் ஆராயவில்லை. இவையெல்லாம் உலகியல் அறிவில் அடங்கு மாதலின் இவற்றைப் பெரும்பாலும் புறக்கணித்து ஆன்மவிசாரத்தோடு தொடர்பு பட்ட சமயப் பிரசினைகளுக்கு விடை காண்பதே அறிஞர்களுடைய முக்கியமான வேலையென்று இந்திய அறிஞர்கள் கருதினர். இக்கருத்திற் கேற்பவே, இந்திய இலக்கியமும் அமைந்தது. அதாவது மிகப் பெரும்பான்மை இலக்கியம் சமயம், தத்துவம் முதலியவற்ருேடும் கடவுளரது வரலாறுகளைப் பற்றியும் அமைந்த தாயினும், சில சில நூல்கள் வரலாற்றுச் செய்திகளையும் தந்தன. புராணங்களில் தரப்படும் மன்னர்குல முறைகள் (வமிசாவளிகள்) கல்வெட்டுக்களில் காணப்பெறும் மன்னர் சாதனைகள், பாணரது ஹர்ஷ சரிதம், பில்ஹணரின் விக்ரமாங்க தேவ சரிதம், கல்ஹணரது ராஜதரங்கிணி, தமிழ்ச்சங்க இலக்கியம் முதலான இலக்கியங்களில் கிடைக்கும் வரலாற்றுச்

செய்திகள் யாவையும் பண்டைய இந்திய அரசியல் வரலாற்றிற்குப் பயன்படும் சான்றுகளே. ஆயினும், அரசியல் தத்துவத்தைப் பற்றியோ, அரசியல் அமைப்புக்களைப் பற்றியோ தனிப்படவும், சிறப்பாகவும் ஆராய்ச்சி செய்து எழுதப் பெற்ற பண்டைய இந்திய நூல்கள் மிகமிகக் குறைவே. ஆட்சி முறைகளைப் பற்றிப் பண்டையோர் எண்ணிப் பார்த்ததே இல்லை என்பது இதன் பொருள் அன்று. பல நூல்களிலும் இடை இடையே ஆசிரியர்களால் அரசியல் தத்துவக் கருத்துக்கள் ஆங்காங்குக் கூறப்படுவதைக் காண்கிறோம். புறநானூற்றுச் செய்யுள் ஒன்றில் 'மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்'' என்று கூறப்பட்டுள்ளமை இதற்கு ஓர் உதாரணம். அன்றியும் ஆட்சி முறைகளையும்; மன்னன் முதலானோர் தத்தம் கடமைகளை எவ்வாறு ஆற்ற வேண்டும் என்னும் விவரங்களையும் விரித்துரைக்கும் சில அரிய நூல்களும் உள.

இவற்றில் மிகச் சிறந்த நூல் கௌடில்யர் இயற்றிய அருத்த சாத்திரம் என்பது. அருத்த சாத்திரம் என்னும் சொல்லுக்கு வேர்ப்பொருள் காணுமிடத்து, 'பொருள் நூல்' (Economics) என்றே பொருள்படும். ஆயினும், இது பெரும் பகுதி அரசியல் மரபுகளைப் பற்றிக் கூறும் நூலாகவே அமைந்துள்ளது. கௌடில்யர் என்பவர், சாணக்கியர், விஷ்ணு குப்தர் என்னும் பெயர்களும் பெறுவார். விசாக தத்தர் என்னும் குப்தர் கால நாடகாசிரியர் இயற்றிய, 'முத்ரா ராட்சசம்' என்னும் நூலில் கௌடில்யர், அசோக மன்னனின் பாட்டனை சந்திரகுப்த மௌரியனின் ஆட்சிக்கு வழி வகுத்தவரும், நந்தர் குல அழிவிற்குக் காரணமாயிருந்தவரும், பிறகு சந்திரகுப்தனின் அமைச்சராகச் சில காலம் இருந்தவருமே, அர்த்த சாத்திரத்தை இயற்றியவராவார்என்பர். ஆயினும், அவர் வேறு, அர்த்த சாத்திரம் இயற்றிய கௌடில்யர் வேறு என்று சிலர் கருதுவர். அர்த்த சாத்திரம் சந்திரகுப்த மௌரியன் காலத்தில் இயற்றப்பட்டது என்னும் கருத்தைப் பேராசிரியர் ஏ. எல். பாஷம் அவர்கள் ஏற்றுக் கொள்ளுவதில்லை. சந்திர குப்தர் ஆட்சி புரிந்த கி.மு. நான்காம் நூற்றூண்டில் இந்தியர்கள் கேள்வியுற்றிருக்க முடியாத செய்திகள், உதாரணமாகச் 'சீனர்' என்னும் பெயர் அந்நூலில் காணப்படுவதால், அர்த்த சாத்திரம் அந்த நூற்றூண்டில் இயற்றப்பட்டிருக்க முடியாது என்று தமது கருத்துக்குக் காரணம் காட்டுவார் பேராசிரியர் பாஷம். அன்றியும் அந்த நூலில் அசோகர் கல்

புறநானூறு: 186.

வெட்டுக்களிலோ, பாலி மொழியில் எழுதப் பெற்ற பௌத்த நூல்களிலோ காணப்படும் ஆட்சிக் கலைச் சொற்கள் பெரும் பகுதி காணப்படுவதில்லை; தவிர, மௌரியர் காலத்திற்குப் பிறகுதான் நடைமுறைக்கும், ஆட்சிக்கும் வந்திருக்கக் கூடும் என்று நாம் உறுதியாக நம்பக்கூடிய பல சொற்கள் அர்த்த சாத்திரத்தில் ஆளப்பெறுகின்றன. ஆயினும், அது பேரரசர் குப்தர் காலத்திற்கு (கி.பி. 4-ம் நூற்றுண்டு) முந்தியது என்பதில் ஐயமில்லை. குப்தர் காலத்திற்குச் சில நூற்றுண்டு களுக்கு முன்பே கௌடில்யர் என்பவர் ஒருவரால் இயற்றப் பட்டுப் பிற்காலத்தில் பல இடைச்செருகல்களோடு முழுநூலாக இன்றைய உருவத்தில் வெளி வந்திருப்பதே இன்று நாம் அறியும் 'கௌடில்யர் அர்த்த சாத்திரம்' போலும்! அந்த நூல் இயற்றப்பெற்ற காலம் யாதேயாயினும் அது ஆட்சி முறையைப் பற்றி மிக விரிவாக எடுத்துரைக்கின்றது. அரசின் தோற்றத்தைப் பற்றிக் குறிப்பிடும் அந்நூல், அரசு ஆட்சி செலுத்தும் முறைகளையும், நாட்டுச் செல்வாதாரம், பொருளா தாரம் என்பவை செழிப்புறும் வகைகளையும், போர் முறைகளை யும் பற்றி விரிவாகக் கூறுகின்றது. தவிர, பண்டைய இந்தியர் வாழ்க்கையைப் பற்றி வேறெங்கும் கிடைக்காத அரிய செய்திகளை அர்த்த சாத்திரம் தருகிறது. மௌரியர் ஆட்சி முறைகளைப் பற்றி விவரிக்கும் வரலாற்றுசிரியர்களில் மிகப் பலர் கௌடில்யரை ஆதாரமாகக் காட்டியே அவ்வரலாற்றினைக் கூறிச் செல்வர். ஆயினும், கௌடில்யர் மௌரியர் காலத்திற்குப் பிற்பட்டவர் என்னும் கருத்தே உறுதியானால், மௌரியர் ஆட்சி முறைக்குக் கௌடில்யரது நூல் ஆதாரமாகாது. மெகஸ்தனிஸ் என்னும் கிரேக்க தூதர் இயற்றிய 'இண்டிகா' வும், அசோகர் கல்வெட்டுக் கூற்றுக்களுமே நமக்குச் சான்றுகளாம்.

அடுத்தாற் போல, பண்டைய இந்திய அரசியலைப் பற்றி முக்கியமான நூல் மகாபாரதம் என்னும் வடமொழி இதிகாசம். மகாபாரதம் அம்மொழியில் இயற்றப்பெற்ற மிகப் பெரிய நூல் களில் ஒன்று. இதனை ஐந்தாம் வேதம் என்றும் கூறுவர்; ஏனெனில், இதன் இடையே அருச்சுனனுக்குக் கண்ணன் கூறுவதாக அமைத்துச் செருகப்பட்டிருக்கும் அரிய தத்துவ நூலே பகவத்கீதை என்பது. இத்துணைப் பெருமை வாய்ந்த நூலின் பன்னிரண்டாவது பகுதி (பருவம்) சாந்தி பருவம் என்பது. சாந்தி பருவத்தில் 'யுதிஷ்டிரர்' என்னும் தரும புத்திரருக்கு அம்புப் படுக்கையில் அமர்ந்திருந்த வீடுமர் ஆட்சிப் பொறுப்பேற்கும் நிலையில் நிற்கும் யாவருக்கும் பயன் படுமாறு அரசியற் கலையை விரிவாகவும் மன்னனுடைய

பொறுப்பு முதலானவற்றைப் பற்றிச் சிறப்பாகவும் எடுத்துரைத்த செய்தி காணப்படும். இதில் கூறப்படும் அறிவுரைகள் ராஜதருமம் எனப்படும். மகா பாரதத்திலேயேயன்றி அதன் உடன் ஒத்த மற்றொரு இதிகாசமான இராமாயணத்திலும் அரசியல் கலையின் நுணுக்கங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. வசிட்டர், பரத்துவாஜர் முதலிய முனிவர்கள் இராமனுக்கு உரைப்பதாக அமைந்துள்ள அப்பகுதியில் பாரம்பரியமாக அரசியலைப் பற்றி நம் நாட்டில் முன் காலத்தில் நிலவி வந்த செய்திகள் கூறப்பட்டுள்ளன. அன்றியும், இராவணன் அவைக் களத்தில் பிரகத்தன், வீடணன் முதலியோர் மன்னனுக்கு அறிவுரை கூறிய வரலாறும் அதற்கு அம்மன்னன் இசைந்த அல்லது இசையாத வரலாறும் அந்நூலிலேயே கூறப்படுகின்றன. பண்டைக்கால இந்திய இலக்கியத்தில் பௌத்தர்கள் இயற்றி வைத்த ஜாதகக் கதைகளிலும் அரசியல் கருத்துக்கள் பல காணப்பெறுகின்றன. ஜாதகக் கதைகளாவன: கௌதம புத்தர் தமது 'பழம் பிறப்பு'க்களில் செய்ததாக பௌத்தர்கள் நம்பும் செயற்கரிய செயல்கள் பலவற்றையும் தொகுத்து வைத்துள்ள தொகை நூல். கி.பி. 2ஆம் நூற்றாண்டிலிருந்து. கி.பி. 2ம் நூற்றாண்டு இறுதிவரை தக்காணத்தைப் பேரரசாக ஆண்டு வந்த சாதவாகன மன்னர்களில் ஒருவரான ஹாலர் என்பவர் இயற்றிய சப்தசதகம் என்னும் நூல் வாத்ஸ்யாயனருடைய காம சூத்திரத்தைப் போல ஆடவர்-மகளிர் காமஉறவைப் பற்றியும், பிற காதற் செய்திகளையும் கூறுவதாக அமைந்துள்ளதாயினும், அந்நூலைப் போலவே உலகியற் செய்திகளையும் விவரமாகக் கூறுவதால் பண்டைக்கால இந்திய மன்னர் ஆட்சி முறையில் உலகியல் வாழ்க்கை எவ்வாறு அமைந்தது என்பது ஓரளவாயினும் விளங்கும்.

ஸ்மிருதிகள் என்னும் சில தரும சாத்திர நூல்கள் அரசியலைப் பற்றியும் கூறுகின்றன. மநு, யாக்ஞவல்கியர், நாரதர், போதாயனர் முதலியோர் இயற்றிய தரும சாத்திரங்கள் வாழ்க்கையோடு பட்ட பலபிரச்சினைகளுக்கும் விடைகாணும் வகையில் இயற்றப்பெற்றவை. அவற்றில் மன்னனைப் பற்றியும் ஆட்சியைப் பற்றியும் அவற்றோடு தொடர்புள்ள பிற பல செய்திகளும் கூறப்படுகின்றன. மநுஸ்மிருதி கிருஸ்து அப்தம் முதல் ஒன்று இரண்டு நூற்றாண்டுகளில் இயற்றப் பெற்றிருக்கலாம் என்பது பல அறிஞர்களுடைய கருத்து.

ஸ்மிருதிகளைத் தவிர வேறு சில நூல்களும் அரசியல், ஆட்சிமுறை முதலிய பொருள்களைப் பற்றி விவரிக்கின்றன. காமந்தகர் இயற்றிய நீதிஸாரம், குப்தர் காலத்தில் எழுதப்

பெற்றிருக்கலாம். பத்தாம் நூற்றுண்டில் வாழ்ந்து வந்த சோமதேவ சூரி என்னும் ஜைன ஆசிரியர் நீதிவாக்யாம்ருதம் என்பதொரு நூலை இயற்றினர். பிற்காலத்தில் யாரோ ஒருவரால் எழுதப்பெற்று சுக்ராச்சாரியார் என்னும் பௌராணிக ஞானி பெயரால் நிலவிவரும் நீதி சாத்திரம் என்பது மற்ருெரு அரசியல் கலை நூல். இந்நூல்களில் எல்லாம் பெரும்பாலாக ஒரு சில கருத்துக்களே திரும்பத் திரும்பக் கூறப்படுகின்றன. அரசியலைப் பற்றியும், ஆட்சிமுறைகளைப் பற்றியும் எழுதுவதாகக் கூறிக்கொண்டு தொடங்கும் சில நூல்களைத் தவிர ருக்வேதத்திலிருந்து இந்திய வரலாற்று இடைக்கால இலக்கியங்களால் உலகியலைப் பற்றி விவரிக்கும் எல்லா நூல்களிலுமே, அரசியற் கருத்துக்கள் ஓரளவு எடுத்துரைக்கப் பட்டுள்ளமை காணப்பெறும். வடமொழி நூல்களில் மேற்கூறியவையேயன்றி காளிதாசர் போன்ற பெருங்கவிகள் நூல்களிலும் ஆங்காங்குப் பல அரசியல் தகவல்கள் கிடைக்கின்றன. இவை நேரடியாக மன்னராட்சி முறைகள், அரசியல் தத்துவங்கள் ஆகியவற்றைப் பற்றிக் கூருவாயினும் இடையிடையே அவ்வவ்விடங்களில் கூறப்படும் பலவேறு செய்திகளினின்று இக்கருத்துக்களை நாம் தெரிந்து கொள்ளலாம்.

வடமொழியில் இயற்றப்பெற்ற இந்நூல்களேயன்றி அம்மொழிக்கு நிகராகத் தொன்மையும் பெருமையும் வாய்ந்த தமிழில் வள்ளுவர் இயற்றிய குறள் போன்ற நூல்களின் 'பொருட்பால்' அரசியலைப் பற்றி விரிவாக உரைக்கின்றது. நாலடியார், பழமொழி, தமிழ்ச் சங்க இலக்கியத்தின் சில சில பகுதிகள் முதலியவற்றில் (உதாரணமாக, புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டில் மதுரைக் காஞ்சி, பட்டினப் பாலை முதலியவற்றில் காணப்பெறும் கருத்துக்களும் இத்துறையில் பயன்தரக் கூடியவை. அன்றியும் தொல்காப்பியம் என்னும் ஆதித் தமிழ் நூலில் பொருளாதாரத்தில் போர் முறைகளைப் பற்றி விவரிக்கும் வாயிலாக மன்னனைப் பற்றியும் ஆட்சி முறைகளைப் பற்றியும் பல செய்திகள் கூறப்படுகின்றன. அந்த நூல் மரபியலில் அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என்னும் சமூகப் பாகுபாடுகளைப் பற்றிக் கூறும் போது மன்னனைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு சங்க காலக் காப்பியங்களில் அரசியல் கருத்துக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. தமிழில் இடைக்காலத்தில் எழுந்த பல நூல்கள் மன்னர்களைப் போற்றும் வகையில் அமைந்துள்ளன. பல்லவ நந்திவர்மன் III காலத்திலிருந்த நந்திக் கலம்பகம், குலோத்

துங்கன் I அவைக்களப் புலவரான செயங்கொண்டார் இயற்றிய கலிங்கத்துப் பரணி, ஒட்டக் கூத்தர் எழுதிய மூவருலா என்பவை இவ்வகை நூல்களில் சிறந்தவை. சிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம், பெரிய புராணம் ஆகிய காப்பியங்களிலும் பல அரிய அரசியல் கருத்துக்கள் தக்க இடங்களில் எடுத்துரைக்கப்படுகின்றன.

புலவர்களால் இயற்றப்பெற்ற இந்நூல்களைத் தவிர, கவிகளாக விளங்கிய சில தென்னாட்டுப் புரவலர்களும் அரசியல் கருத்துக்களைக் கூறும் நூல்களை இயற்றியுள்ளமை காணப்பெறும். பல்லவ மகேந்திரவர்மன் இயற்றிய மத்த விலாசப் பிரகசனம் என்னும் நூலில் ஆட்சி முறையைப் பற்றி வரும் குறிப்புக்கள் அருமையானவை. விஜயநகர இளவரசியான கங்காதேவி இயற்றிய மதுரா விஜயம் என்னும் நூல் அவள் கணவன் குமார கம்பணன் தென்னாட்டில் புரிந்த வெற்றிப் போர்களைப் பற்றிப் பேசுகின்றது. இவற்றையெல்லாம் விடச் சிறந்தது விஜய நகரப் பேரரசரான கிருஷ்ண தேவராயர் எழுதிய ஆமுக்தா மால்யதா என்னும் நூல் ஸ்ரீ ஆண்டாளைப் பற்றி பக்தி லீலையிலிருந்து ஆக்கப்பட்டதாக அமைந்திருப்பினும், அரசியல் கருத்துக்களையும் பெரிதும் எடுத்துக் கூறுகின்றது.

இந்த நூல்கள் எல்லாம் நாம் அரசியல், ஆட்சி முறை, ஆட்சித் தத்துவங்கள், அரசியல் நிலையங்கள் என்பவற்றைப் பற்றி அறிந்து கொள்ள எவ்வளவிற்குப் பயன் படுகின்றன என்று காணவேண்டும். அங்ஙனம் காணுங்கால் அந்நூல்கள் எல்லாம் அவ்வந்நூலை இயற்றிய ஆசிரியனது சொந்தக் கருத்துக்களை எடுத்துக் கூற முற்படுபவையேயன்றி, அந்த நூல்கள் இயற்றப்பட்ட காலத்தில் உண்மையில் நடைமுறையில் இருந்த ஆட்சி முறைகளை உள்ளவாறு வரலாற்று முறையில் எடுத்துரைக்கின்றன என்று கருதுவது தவருகும். அந்த நூலாசிரியர்கள் அரசியல், ஆட்சி முறை முதலானவை எவ்வாறு இருக்க வேண்டும், இயங்க வேண்டும் என்றெல்லாம் கருதினர்களோ அவ்வாறெல்லாம் எழுதிவிட்டார்களேயல்லாமல், அவற்றையெல்லாம் வரலாற்று நூல் இயற்றும் முறையில் இருப்பது - கூறல், நிகழ்ந்தது - கூறல் என்னும் அடிப்படையில் கூறவில்லை என்பது எளிதில் புலனாகும். கௌடில்யர் அரசியலில் வெற்றி காணும் அரசன் எந்த எந்த வகைகளில் எண்ணமிட வேண்டும், செயலாற்ற வேண்டும் என்று கூறியுள்ளாரோ அம் முறைகளை எந்த மன்னனும் உணர்ந்திருப்பானே, அன்றி உணர்ந்திருந்தாலும் நடைமுறைப்படுத்த விரும்பியிருப்பானே

என்பது ஐயத்திற்கு இடமானதே. நூல்களில் காணப்படும் கருத்துக்களைத் தத்துவ அளவில் வைத்துக் கொண்டு அரசியல் வாழ்க்கையில் வெற்றி காண்பதற்கு வேறு பல நெறிகளைப் பின்பற்றி இருக்க வேண்டும் அக்கால ஆட்சியாளர்கள். ஆதலால், அர்த்த சாத்திர வகையைச் சேர்ந்த நூல்களை மட்டும் முற்றிலும் ஆதாரமாகக் கொண்டு பண்டைய இந்திய ஆட்சி நிலையங்களைப் பற்றி யாதொன்றும் இறுதியாகக் கூற முடியாது.

பண்டைய இந்திய அரசியல் ஆட்சி நிலையங்களைப் பற்றி இலக்கியங்கள் வாயிலாக நாம் அறிவதேயன்றி, கல்வெட்டுக்கள் மூலமாகவும் அறிகிறோம். அசோகர் கல்வெட்டுக்கள் சாதவாகனர், குப்தர், பல்லவர், சோழர், சாளுக்யர், ராஷ்டிரகூடர், விஜயநகர மன்னர்கள் ஆகியோர் காலத்தெழுந்த கல்வெட்டுக்களில் காணப்பெறும் அரசியல் செய்திகள் பல; ஆட்சி முறைகளைப் பற்றி இவற்றினின்றும் நாம் அறிந்து கோடற் பாலவை பயன்படும் செய்திகளேயாம்.

மேற் கூறியவை யாவையும் பண்டைக் காலத்தே எழுந்த சான்றுகள். அச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற தற்கால நூல்கள் பலவுள. இப்பொழுது இந் நூலுக்கு இவ்விருவகைச் சான்றுகளுமே பயன்படுவனவாம். இவற்றில் முந்தியதை முதனிலைச் சான்றுகள் (Primary Sources) என்றும் அண்மைக்கால, தற்கால நூல்களை இரண்டாம் நிலைச் சான்றுடன் (Secondary Sources) என்றும் கூறலாம். இரண்டாம் நிலைச் சான்றுகளில் மிகப் பெரும் பாலானவை ஆங்கிலத்திலேயே எழுதப் பெற்றுள்ளன. சிற்சில நூல்கள் ஆங்காங்குத் தமிழிலும் உள்ளன. கே. பி. ஜயஸ்வால் இயற்றிய 'இந்து ஆட்சிமுறை'[1] இராமச்சந்திர தீக்ஷதருடைய 'மௌரியர் ஆட்சிமுறை,'[2] 'குப்தர் ஆட்சிமுறை,'[3] இந் நூலாசிரியர் இயற்றிய 'சங்க கால ஆட்சி முறை'[4] ஸி: மீனாட்சி இயற்றிய 'பல்லவர் கால ஆட்சியும் சமூக வாழ்க்கையும்[5] தெ. வெ. மகாலிங்கம் இயற்றிய 'விசய நகர ஆட்சியும் சமூகவாழ்க்கையும்,[6] 'தென் இந்திய ஆட்சிமுறை,[7] போன்ற நூல்கள் இரண்டாம் நிலைச் சான்றுகளுக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

[1] Hindu Polity; [2] Mauriyan Polity; [3] Gupta Polity; [4] Sangam Polity;
[5] I Government and Social life under the Pallavas
[6] I Government and Social life under Vijayanagar.
[7] South Indian Polity. இக்கடைசியிற் கூறிய நூல் அதற்கு முன்பு கூறிய நூலிற் கண்ட செய்திகளையே பெரும்பாலும் திரும்பக் கூறுகின்றது. விஜயநகரம் அல்லாத பிற ஆட்சி முறைகளைப் பற்றி அந்நூல் கூறுவது மிகக் குறைவு.

# 3. வரலாற்றுத் தொடக்க காலமும் சிந்து வெளி நாகரிக காலமும்

இந்தியாவில் தோன்றிய ஆதி மனிதன் பஞ்சாபிற்கு மேற்பால் உள்ளவடமேற்கு இந்தியாவிலும் தக்காணத்திற்குத் தென் பகுதியில் உள்ள தென் இந்தியாவிலும் தான் தோன்றிய தாகப் புவியியலாரும் மானிட இயலாரும் கூறுவர். வட இந்தியாவில் இரண்டு நூறாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே மனிதவர்க்கத்தைப் பற்றி நாம் யாதொன்றும் அறிய வழியில்லை. அக்காலத்தில் அங்குத் தோன்றிய மக்கள் விட்டுச் சென்ற சில வாழ்க்கைச் சுவடுகள் தென்படுகின்றன. அவையெல்லாம் அவர்கட்குப் பழங் கற்காலத்தின் தொடக்க காலம். ஏறத்தாழ அதே காலத்தில் தென் இந்தியாவில் வாழ்ந்த பழங் கற்கால மனிதர்கள் விட்டுச் சென்ற கற் கருவிகள் பலவுள. அக்காலத்தில் கங்கைச் சமவெளியில் எவ்வுயிரும் வாழ வில்லை. அது ஒரு கடலாக இருந்தது என்று புவியியலார் கூறுவர். இந்நிலையில் இந்திய உப கண்டத்தில் தோன்றினன் ஆதி (இந்திய)மனிதன். அவன் இயற்கையில் கண்ட உணவைச் (கனி, கிழங்குகளையும், வேக வைக்காத இறைச்சியையும்) சேகரிப்பதில் தேர்ந்திருந்தான்; அவனுக்கு உணவு ஆக்கத் தெரியாது; அவன் ஆடையை ஆக்கவும் அதை உடுத்த வேண்டிய தேவையை அறியவும் இயலாத நிலையில் இருந்தான். உண்மையில் அவனுக்கும் ஏனைய காட்டு விலங்குகளுக்கும் வேறுபாடு இல்லை. ஆதாரமாக, ஆண் பெண் சேர்ந்த ஒரு குடும்பம் உண்டு; இதைத் தவிரச் சமூகம் என்பது ஒன்று இல்லை. ஆதலால், பிற்காலத்தில் எழுந்த சமூகப் பிரச்சினைகளும் எழவில்லை. தான் சேகரிக்கும் உணவைப் பிறர் தட்டிப் பறித்துக் கொள்ளாமல் காக்கவும், இயன்றால் பிறர் உணவைத் தான் பறித்துக் கொள்

ளவும் ஆன இரு பெரு முயற்சிகளில் மனிதன் அக்காலத்தில் ஈடுபட்டிருந்தான். இவை இரண்டும் முறையே பொருளாதாரப் பிரச்சினையும் உடல் வலிமையைப் பொறுத்த தற்காப்புப் பிரசினையும் ஆம். சமூகம் இல்லாததால் சமூக உறவுகளை ஒழுங்கு படுத்த அரசு தேவைப் படவில்லை; அரசு இல்லாததால் அதன் பகுதிகளாக எழுந்த ஆட்சிக் கருவிகளில் ஒன்றும் தேவைப் படவில்லை. உண்மையில் இவற்றைப் பற்றி யெல்லாம் எண்ணிப் பார்க்குமளவிற்கு மக்கள் பக்குவம் அடையவில்லை.

இதற்கு அடுத்த நிலையில் புதுக் கற்கால மக்களைக் காண்கிறோம். அதாவது கி.மு. 10,000க்கு பிறகு கி.மு. 6,000க்கு முன்பு அவன் புதுக் கற்கால நிலைக்கு வருகிறான். அப்போதுதான் மனிதன் இயற்கையால் நியமிக்கப்பட்ட தன் சூழ்நிலையைத் தனது வசதிக் கேற்றவாறு மாற்றிக் கொள்ள முயலும் நிலை தோன்றுகிறது. அதையே கார்டன் சைல்டு (Gordon Childe) என்னும் அறிஞர் 'மனிதன் சூழ் நிலையை எதிர்க்க முற்படும் நிலை' என்று வருணிக்கிறார். நிலத்தை உழுது உணவு தானியங்களை உற்பத்தி செய்யும் முயற்சியில் ஈடுபட்ட மனிதன், உழவுக்கு உழவு, சாகுபடிக்குச் சாகுபடி, வேளாண்மைக்கு வேளாண்மை, கதிரறுப்புக்குக் கதிரறுப்பு (மகசூல்) ஓரேயிடத்திலிருந்து செயலாற்ற வேண்டி யிருந்தமையால், அத்தகைய வாழ்விற்குத் தேவையான கருவிகளையும் செயற்பாடுகளையும் கண்டு பிடித்து மேலும் மேலும் வளர்க்க முற்பட்டான். பொதுவாகப் புதுவகையாக நன்கு ஆக்கப் பெற்ற கற்கருவிகளைச் செய்யவும் பயன்படுத்தவும் மனிதன் கற்றுக் கொண்டது புதுக் கற்கால மனித வாழ்க்கையின் அம்சங்களில் ஒன்று. இத்தகைய புதுக்கற்கருவிகள் வடமேற்கு இந்தியாவிலும் தக்காணத்திலும் பெரும்பாலும் காணப்படுகின்றன. இன்றும் மலை உச்சிகளிலும் அடர்ந்த காட்டுப் பிரதேசங்களிலும் வாழும் நாகரிகமடையாத மக்கள் பலர் புதுக்கற்கால நிலையில் உள்ளனர். சிலர் இப்பொழுதுதான் அந்தக் கற்கால நிலையை விட்டுத் தற்கால நிலைக்கு மாறி வருகின்றனர்.

இத்தகைய பண்பாடு நிலைக்கு அடுத்தபடியாக, கி. மு. முப்பதாம் நூற்றாண்டின் நிலையான நககரிகம் ஒன்று ஏறத்தாழ ஒரே சமயத்தில் எகிப்தில் நைல் நதிக் கரையிலும், மெசபொடேமியாவில் டைகரிஸ்-யூப்ரடிஸ் ஆற்றின் கரையிலும், பஞ்சாப் சிந்து மாநிலப் பிரதேசத்தில் (இன்றைக்கு மேற்கு பாகிஸ்தானத்தின் வடதென் பகுதிகள்) சிந்துவின் கரையிலும் தோன்றிற்று. இந்தியாவில் தோன்றிய அந்த நாகரிகத்திற்கு சைந்

தவ நாகரிகம் அல்லது சிந்து வெளி நாகரிகம் என்பது பெயர்.

இந்த நாகரிகம் எப்படித் தோன்றிற்று, எப்படி அழிந்தது என்னும் இரண்டு விவரங்களும் நாம் அறியோமாகையால், இதனை ஒரு வரலாற்றுத்தீவு என்று கூறலாம். இதனைச் சுற்றி நீலக் கடலைப் போன்று கால இருள் சூழ்ந்திருப்பதால், ஐம்பது ஆண்டுக்குமுன் புசிந்து வெளியில் டாக்டர் மார்ஷல், பானர்ஜி போன்ற தொல் பொருள் ஆராய்ச்சியாளர்கள் மேற்கொண்ட அகழ்வுகளின் விளைவாகக் கண்டுபிடிக்கப்பட்ட சில சிதைவுகளைக் கொண்டு அக்காலத்தில் அம் மக்கள் எத்தகைய வாழ்க்கையை நடத்தி இருப்பார்கள் என்று வரலாற்று ஆசிரியர்கள் அமைத்துப் பார்க்கிறார்கள்.

முதல் முதல் இந்த அகழ் வாராய்ச்சிகளை நடத்திய போது அறிஞர்கள் கோட்டை கொத்தளங்களையோ அரண்மனை அல்லது கோயில் போன்ற இடங்களையோ கண்டு பிடிக்க வில்லை. அதிலிருந்து சைந்தவ நகரங்கள் சிறு சிறு வாணிபக் குடியரசுகள் என்றும், சிறு தனவந்தர் குழாம் ஒன்று அங்கு ஆட்சி செய்திருக்கும் என்றும் மிகச் செல்வந்தரும் மிக வறியரும் இன்றி இடைப்பட்ட வகுப்பினரே அங்கு மிகுதியும் இருந்திருப்பர் என்றும் கருதினர். ஆனால், 1946ல் ஹாரப்பா என்னுமிடத்தில் நிகழ்ந்த அகழ்வு ஆய்வுகளிலும் மொஹஞ்சதாரோவில் மேலும் கண்டு பிடித்த சிதைவுகளிலும் இக்கருத்து தவறு என்றுகூறக்கூடிய அளவிற்குச் சான்றுகள் கிடைத்தன. சைந்தவ நகரங்களில் ஒவ்வொன்றும் கோட்டை மதிலால் சூழப்பட்டது என்பது தெளிவாயிற்று. நகர அமைப்புக்களின் ஒரே தன்மையைக் காணும் பொழுது இந்நகரங்கள் தனித்தனி நகர-அரசுகளாக இயங்கவில்லை. இவை யெல்லாம் சேர்ந்து ஒரு மத்திய அரசின் கீழ் செயற்பட்டன என்பது வெளிப்படையாகும். அன்றியும், சமயச் சார்புடைய அரசாக அது அமைந்திருக்கலாம் என்று பிக்கட் (Piggot) என்னும் அறிஞர் கருதுகின்றார். இந்த நாகரிகம் தொடர்ந்து இருந்த இரண்டாயிரம் ஆண்டு காலம் வரை ஒரே வகை அரசு இயங்கியிருக்க வேண்டும் என்பது பேராசிரியர் ஏ.எல். பாஷம்(A.L.Pasham) முதலியோர் கருத்து. நகரங்களில் காணப்படும் வீடுகளையும் அவற்றில் பொருத்தியுள்ள வசதிகளையும் பார்க்கும் பொழுது நகரத்தாரில் பெரும்பாலோர் உயர்-நடுத்தர வகுப்பினராய் இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. விவசாயமும் கைத்தொழிலும் நன்கு நடைபெற்று வந்தது என்று கருத இட

முண்டாதலின், வெளி நாட்டு வாணிகம், ஏற்றுமதி, இறக்குமதி ஆகிய இருவகைகளிலும் நடைபெற்றிருக்கும். சைந்தவ நகரப்பாழ்களிலிருந்து அகழப் பெற்ற சில முத்திரைகள் மெஸபொடேமியாவில் (Iraq)கிடைக்கப் பெறுவதால், இவர்களுடைய வாணிபம் அந்தத் தொலைவிற்கு எட்டியது என்பது பெறப்படும். சைந்தவ நகரங்களில் ஏராளமாக இதுவரை கிடைத்துள்ள இம் முத்திரைகளில் உள்ள எழுத்துக்களை இன்றுகாறும் ஒருவராலும் படிக்க முடிய வில்லை. இவற்றை ஒரு காலத்தில் படிக்க முடியுமாயின் அந்த நாகரித்தைப் பற்றியும் அவர்களுடைய ஆட்சி மரபுகள் முதலானவற்றைப் பற்றியும் இப்பொழுது நாம் அறிவதைவிடச் சற்று அதிகமாக அறியமுடியும். இன்று உள்ள சான்றுகளைக் கொண்டு அவர்கள் போர் முறைகளைப் பற்றிச் சில கருத்துக்கள் கூற முடியும். அவர்கள் புலி, காண்டாமிருகம், மான், எருது, யானை முதலிய விலங்குகளை அறிந்திருந்தன ராயினும், குதிரையை அறியார் என்றே தோன்றுகின்றமையின், குதிரையையும் அதனை ஏறி நடத்துவதையும் குதிரை கட்டிய தேர்களைப் போரில் பயன் படுத்துவதையும் அறிந்த பகைவர்கள் தங்கள் நாட்டைப் படையெடுத்த பொழுது அப் பகைவர்கட்கு நிகராக நின்று போரிட முடியாமல், அவர்களுக்கு அடிமைப் பட்டு அழிந்து போன நாகரிகமே சைந்தவ நாகரிகம் என்பது விளங்கும். அமைதிக் கால நாகரிகத்தில் சிறந்து விளங்கும் ஒரு நாகரிக மக்கள் தங்கள் நகரங்களைக் கோட்டைக் கொத்தளங்களால் வலுப்படுத்திக் கொண்டிருப்பினும் அவர்களுக்குப் படைக்கலப் பயிற்சி மிக்கிருப்பினும், விரைவில் இடம் பெயரக் கூடிய குதிரை முதலிய போர்ச் சாதனங்களைக் கொண்டு தாக்கும் பகைவர்களை எதிர்ப்பது அரிது என்னும் உண்மை 4000 ஆண்டுகட்கு முற்பட்ட சைந்தவ ஆட்சியாளர் வருந்திக் கற்ற பாடமாகும். அதனைப் பன்னூறு ஆண்டுகட்குப்பின் வடமேற்கு இந்தியாவில் ஆண்ட போரஸ் மன்னரும் கற்றுக் கொள்ளவில்லை யாதலால், பயிற்சி பெற்ற திறமை வாய்ந்த குதிரைப்படை ஒன்றை வைத்திருந்த அலெக்ஸாந்தரிடம் அவர் தோற்றுப்போக வேண்டியதாயிற்று.

சைந்தவ நாகரிகத்தின் ஆட்சி முறைகளைப் பற்றி அங்கு அகழ்ந்தெடுக்கப் பட்டுள்ள சிதைவுகளிலிருந்து மேற்கூறிய செய்திகளே யல்லாமல் வேறொன்றைப் பற்றியும் உறுதியாகக் கூற இயலாது.

# 4. வேத கால மக்களின் ஆட்சி நிலையங்கள்

சைந்தவ நாகரிகம் அழிவுற்றதற்கு ரிக் வேதத்தில் வருணிக்கப்பட்டுள்ள போர்த் தலைவர்களே காரணம் என்று மார்டிமர் வீலர் (Mortimer Wheeler) போன்ற தொல் பொருளியலார் கருதுவர். அது உண்மையாயிருத்தல் கூடும். அன்றி, அவ்வரலாற்றுத் தொடக்க கால நாகரிகம் பிறவாறும் அழிந்திருக்கக் கூடும். அது எவ்வாருயினும் கி. மு. 1500 அல்லது அதை அடுத்த நூற்ருண்டுகளில் ஆரியர் இந்தியாவினுள் வடமேற்குப் பாதையாகப் புகுந்தனர் என்பது வரலாறு கண்ட செய்தி. இந்தியாவில் (முதலில் சிந்து நதிக் கரையில்) இவர்கள் வந்து தங்கிய காலத்திலேயோ அதற்குச் சற்று முன்பேயோ நான்கு வேதங்களிலும் மிகப் பழமையான பல பகுதிகள் இயற்றப்பட்டு விட்டன. பிற்காலத்தில் ஒரு முனிவர் வேதப் பாடல்களைப் பல அடிப்படைகளில் நான்காகப் பிரித்தார் : ரிக், யஜுர், சாமம், அதர்வம் என்று. அங்ஙனம் பிரித்தமையால் அவருக்கு வியாசர் என்று பெயராயிற்று. இவற்றில் யஜுர் வேதம் ரிக்வேத சூக்தங்களையும் விளக்கம் தரும் முறையில் அமைந்துள்ளது; சாமம் சில ரிக்வேதப் பாடல்களை இசைக்கிறது. அதர்வம் மக்களின் நலன்களை ஆக்கவும் அழிக்கவுமான மந்திரங்களை உள்ளடக்கியது. இவற்றில் பல, ஆரியர் இந்நாட்டு பூர்வகுடிகளிடமிருந்து பெற்றுக்கொண்டு ரிக் வேதத்திற்குச் சமமான முறையில் தொகுத்து அமைத்தவை. இவ்வாறு அவர்கள் பெற்ற புதுக்கருத்துக்கள் நடைமுறைகள், சாங்கியங்கள் என்பவற்றுள் தொகுதியடிப்படையிலேயே அதர்வ வேதம் உருவாயிற்று. ஆதலால், வேதம் என்பது முடிவில் ரிக் வேதம் என்னுமளவில் நிற்கிறது என்பது தெளிவு. ஆதலால்,

வேதகால மக்களின் வாழ்க்கை முறை, ஆட்சி முறை முதலான வற்றை அறிவதற்கு ரிக் வேதம் மட்டுமே பயன் தருவதாகும் என்பது பெறப்படும்.

வேதகால ஆரியர்கள் இந்தியாவினுள் புகுமுன்பே ஓரளவு நாகரிக நிலை எய்தினர்வர்களே; ஆயினும், அவர்களுடைய நாகரிகம் சைந்தவ மக்களின் நாகரிகத்தினின்றும் பெரிதும் (முற்றிலும் என்று கூடக் கூறலாம்) வேறுபட்டது. இவ்வேறுபாடுகளை கீழ்க்கண்டவாறு குறிக்கலாம்.

| சைந்தவர்கள் | ஆரியர்கள் |
|---|---|
| 1. எழுதப் படிக்கக் கை வந்தவர்கள் | 1. எழுத்துமுறை அறியாதவர்கள். |
| 2. கோட்டை கொத்தளங்களால் சூழப் பெற்ற நகரங்களில் வசித்தவர்கள், | மண்குடிசைகளோ கூடாரங்களோ இட்டுக் கொண்டு திறந்த வெளி வாழ்க்கையை மேற் கொண்டவர்கள். |
| 3. குதிரையைப் பெரும்பாலும் அறியாதவர்கள் | 3. குதிரை இவர்ந்து பரி கட்டிய தேர்களைக் கடாவிப் போரிடுவதில் வல்லவர்கள். |
| 4. கோவில் குளம், படிம வழிபாடு செய்பவர்கள் | 4. திறந்த வெளி, ஆகாயக் கடவுளரான இந்திரன், வருணன் முதலிய தேவர்களை வழிபட்டவர்கள். |
| 5. இலிங்க வழிபாடுடையவர்கள். | 5. இலிங்க வழிபாட்டை இகழ்ந்து தடுத்தவர்கள். |
| 6. எருது இவர்கட்கு முக்கியமான; தெய்வீகமான (சமயத் தொடர்புடைய) விலங்கு. | 6. பசு இவர்களுடைய புனித விலங்கு. |
| 7. முத்திரைகளில் காணப் படும் செய்திகளைத் தவிர இலக்கியம் என்று ஒன்று இவர்களுக்கு உண்டா என்பது தெரியாது. | 7. செவி வழி வந்த அழகிய வேதப் பாடல்களை ஆக்கவும் இசைக்கவும் கற்றவர்கள். |

இவ்வாறு நேர்மாறான வாழ்க்கை முறைகளை மேற் கொண்டு வாழ்ந்து வந்த ஆரியர்களும் சைந்தவர்களும் ஓரே

வகை பொது அரசியல் மரபுகளை மேற் கொண்டிருக்க முடியாது.

ஆரியர்கள் சமூகம் பல குடிகளாகப் பிரிந்திருந்தது; அக் குடிகள் ஒவ்வொன்றிற்கும் ஒரு தலைவன் இருந்தான். அந்தத் தலைவன் பெரும்பாலும் போர்க் காலத்தில் தகுதியைக் கருதித் தேர்ந்தெடுக்கப்படுவான். இந்தக் குடிகள் மாடு பிடிக்கவோ நாடு பிடிக்கவோ தங்கள் நலனைப் பாதுகாத்துக் கொள்ளவோ கருதி, பிற குடிகளோடு போரிடுவர்; அக்காலங்களில் போர்ச் செயல்களைத் தலைமை தாங்கி நடாத்த, தலைவர்கள் தேவைப் படுவர். அக்காலத்தில் குடிகள் தேர்ந்தெடுக்கும் குடித் தலைவர் களில் வலிமை மிக்கவர்கள் அமைதிக் காலத்திலும் தங்கள் ஆதிக்கத்தை நிலைநிறுத்திக் கொள்வார்கள். இந்தக் குடித்தலை வர்களை ஆரியர்கள் 'ராஜன்' என்னும் பெயரால் அழைத்தனர். வேதகாலத்து ராஜன் முழு அதிகாரம் செலுத்தும் (எதேச்சாதி காரியான) பரம்பரை மன்னன் அல்லன்; அதாவது அவன் 'இறைவன்' அல்லன்; ஏனெனில் குடியின் ஆட்சி ராஜன் ஒரு வனால் மட்டும் நடத்தப்பட்டதன்று; ஆட்சியில் அவனுக்கு உதவி, சிற்சில சமயங்களில் அவனுடைய அளவு மீறிய ஆதிக் கத்தைக் குறைத்த குடி மன்றங்கள் (tribal councils) இருந்தன. இவற்றை வட மொழியில் சபாக்கள் என்றும் சமிதிகள் என்றும் கூறுவர். பல உறுப்பினர் கூடிய நிலையத்திற்கு, சபா அல்லது சமிதி என்பது பெயர். இந்தச் சபா என்னும் சொல்லே தமிழில் அவையென்று வழங்கும். சபா, சமிதி என்பவை ஒன்றையொன்று ஒத்திருந்த மன்றங்கள்; அவையிரண் டையும் அடிக்கடி சேர்த்துச் சேர்த்தே பேசுவர். ஆனால், அவற்றிடையே இருந்த வேறுபாடுகள் நன்கு புலப் படவில்லை. சபா என்பது வயது, அனுபவம், அறிவு, செல் வாக்கு முதலிய காரணங்களால் குடிகளின் இயற்கைப்பிரதி நிதிகளாக அமைந்த சிறந்தவர்களின் கூட்டமாக இருக்கலாம்; சமிதி என்பது எல்லாக் குடும்பத் தலைவர்களும் ஒருங்கு கூடிய கூட்டமாகலாம்; ஆயினும், இது உறுதியான கூற்று அன்று. இந்த மன்றங்களில் நடைபெற்ற விவாதங்களால் அரசன் (இது ராஜன் என்னும் சொல்லின் திரிபே) தனது கொள்கை களை மாற்றிக் கொள்ள வாய்ப்பு ஏற்படும். ஒவ்வொரு கிராமங் களில் இருந்த குடிகள் (பிரஜைகள்) ராஜன் என்று ஒருவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளாமலேயே தங்கள் ஆட்சியை நடத்தியிருக்கக் கூடும் என்று காண்கிறது. சபாவின் உறுப் பினர்கள் ஒன்று சேர்ந்து நேரடி ஆட்சி நடத்தியிருக்கக் கூடும் என்று நம்புவதற்கு இடம் தரும் வகையில் சில சான்றுகள்

உள்ளன. ஆயினும், பெரும்பாலும் பாரம்பரியமாக ஆண்ட மன்னராட்சி முறையே பெரும்பாலும் மேற்கொள்ளப்பட்டது. மன்னனின் அவையில் கிராமத் தலைவர்களும் (கிராமணிகள்) அவனைச் சூழ்ந்து போற்றி வாழ்வதையே தொழிலாகக் கொண்டவர்களும் குழுமியிருந்தனர். அவனது சேனை (படை)யைத் தலைமை வகித்து நடத்த சேனைத் தலைவர்கள் (சேனானிகள்) இருந்தனர். பெரும் போர்களில் அரசன் நேரடியாக ஈடுபட்டு படை நடத்துவதே மரபு; ஆனால், மாடுபிடி சண்டைகளிலும் பக்கத்துக் குடிகளோடு இட்ட சிறு போர்களிலும் சேனானிகள் முக்கியமாக ஈடுபட்டனர். இவர்களையெல்லாம் விட முக்கியமான அதிகாரி புரோகிதர் என்பவர். புரோகிதர் வேத வேள்விகளை நடத்தி, தேவதைகளைத் திருப்தி செய்து நாட்டின் வளமை (செழுமை)யைக் காத்தனர். போர்க்காலங்களில் இந்த வேள்விகளின் பயனாக அரசனுக்கு வெற்றி கிட்டும் என்று கருதினர். இராமாயணத்தில் இந்திரஜித் நிகும்பலை யாகம் செய்ய முற்பட்டது இங்கு நினைவு கூரத்தக்கது. மிகப் பண்டைக்காலத்துப் புரோகிதன் மந்திரவாதியாகவே யிருந்தான். தன்னுடைய மந்திரத் திறமையால் தனது குடிகளுக்கு நன்மையும் பகைவர்களுக்குத் தீமையும் செய்யவல்லவன் என்று இவன் பெயர் பெற்றிருந்தான். ஆயினும், தொடக்கத்திலிருந்தே மந்திரம் வல்ல புரோகிதனுக்கும் படை பலம் வாய்ந்த அரசனுக்கும் குடிமக்களிடையே யார் அதிக ஆதிக்கம் செலுத்துவது என்னும் போட்டி இருந்து வந்தது. பண்டைக்கால மக்களின் மனம் படை பலத்தைக் காட்டிலும் மந்திரசக்தியைக் கண்டு பெரிதும் அஞ்சிற்றாகையால், புரோகிதனே அரசனைக் காட்டிலும் ஒரு படி உயர்ந்து விளங்கினான். இந்தப் பாரம்பரியம் பிற்கால இந்திய சமூக வரலாறு முழுவதையுமே அடிப்படையாகப் பாதிக்கும் அளவிற்கு வளர்ந்தது.

குடித்தலைவர்கள் சிலர் மற்றவர்களைக் காட்டிலும் அதிகத் திறமையும் சக்தியும் பெற்று விளங்கியமையால் அவர்களுடைய ஆதிக்கத்தின் கீழ் வேறு பல குடிகளும் தம்மை அடக்கிக் கொள்ள முன் வந்தன. இம் முறைப்படி தொடக்கத்தில் இருந்ததைவிட, நாளடைவில் குடிகளின் எண்ணிக்கை குறைந்து குடித்தலைவர்களின் ஆதிக்க சக்தி மிகுந்தது. குடிகள் பிற்காலத்தில் தங்களுடைய தனித்தன்மையை விட்டு ஒரு நாட்டு மக்கள் என்னும் நிலையை அடையும் வழியில் இது முதற் கட்டம் எனலாம். ஆதியில் ஆரியர்களுடைய பொருளாதாரம் மிக எளிய தன்மையுடையது. ஆடு மாடுகளை வளர்த்து அவற்றையே செல்வமாகக் கருதி வாழ்ந்தவர்கள். பசுவினைக் கடவு

ளாக வணங்கும் அளவிற்கு அவர்களுடைய பொருளாதாரத் தேவைகளும் சமயக் கோட்பாடுகளும் ஒன்றாய் இணைந்தன. அவர்களுக்கு அக்காலத்தில் உலோகத்தாலோ பிற பொருள்களாலோ செய்யப்பட்ட காசுகள் செலாவணியில் இல்லை. மாடுகளே அவர்களுடைய சொத்து காசு யாவையும். ஒவ்வொருவனுடைய சொத்தின் அளவையும் அவனுக்கு எத்தனை பசுக்கள் சொந்தம் என்பதை வைத்துக் கணக்கிட்டனர். தமிழில் 'மாடு' எனும் சொல்லுக்கு, செல்வம் என்னும் பொருளும் உண்டு என்பது காண்க.

தொடக்க கால ஆரியர்கள் நாகரிகத்தில் சில துறைகளில் முன்னேறியிருந்தனராயினும், பல துறைகளில் பின்தங்கியவர்கள்; ஆதலால், அவர்களுடைய வாழ்க்கையில் கடினமான அல்லது சிக்கலான அரசியல் ஏற்பாடுகள் வளரவில்லை.

ரிக் வேத காலத்திற்கு சில நூற்றாண்டுகட்குப் பிறகு ஆரியர்களது பொது வாழ்க்கை சிறிது சிறிதாக மாறத் தொடங்கிற்று. 'அரசு'. 'குடி மக்கள்,' என்னும் கருத்துக்களும் அவ்விரண்டையும் பிணைக்கும் உறவுகளைப் பற்றிய கருத்துக்களும் வளரத் தொடங்கின. என்றைக்கும் 'அரசு' பற்றிய இத்தகைய கருத்துக்கள் இந்திய இலக்கியத்தில் பெரியதொரு தத்துவமாகவோ கோட்பாடாகவோ வளர்ந்துவிட இல்லை. ஆயினும், இவற்றைப்பற்றி எல்லாம் பண்டைய மக்கள் என்ன நினைத்தார்கள் என்பதை நாம் அறிந்து கொள்ளக் கூடிய அளவிற்கு பழைய இலக்கியத்தில் குறிப்புக்கள் உள்ளன. மனிதனுக்கு இயற்கையாக அமைந்துள்ள தன்மைகளில் தனக்குமுன் இவ்வுலகில் நிகழ்ந்த செயல்களைப் பற்றியும் தான் காணும் பொருள்களுக்கு அடிப்படைக் காரணம், தோற்றம் என்பவை யாவை என்பதுபற்றியும் அறிந்து கொள்ள வேண்டும் என்னும் விருப்பம் முக்கியமானதொன்று. இவ்விருப்பமும் அதைப் பூர்த்தி செய்து கொள்ளத் தேவையான அறிவியல் முயற்சியும் உலக மக்கள் யாவர்க்கும் பொதுவாயினும், சிலர் எப்பொருளுக்கும் எச் செயற்கும் உலகியல் காரணத்தைக் காண்பர்: வேறு சிலர் அவற்றிற்கெல்லாம் சமயத் தொடர்புடைய தெய்வீகமான காரணம் கற்பிப்பர். பண்டைக்கால கிரேக்கர்கள் இவர்களில் முதல் வகுப்பைச் சேர்ந்தவர்கள்; பண்டைக்கால இந்தியர்கள் இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவர்கள். ஆதலால், அவர்கள் அதனுடைய தோற்றமும் தொடக்கத்தில், தெய்வீகத்தோடு தொடர்புடையதாய் இருக்குமென்று நம்பினார்கள்.

பின் வேத காலத்தில் இயற்றப் பெற்ற ஐதரேய ப்ராமணம் (ஏறத்தாழ கி.மு. 7ம் நூற்றுண்டில் எழுந்த நூலாகலாம்) என்னும் நூலில் தேவர்களும் அசுரர்களும் இட்ட போர் வருணிக்கப்படுகின்றது. ஆரியர்கள் தங்களுடைய தலைவர்களைத் தேவர்களென்றும் தங்களுடைய பகைவர்களை அசுரர்களென்றும் அழைப்பர். இது அவர்கள் பாரசீகத்திலிருந்து பிரிந்து வந்த காலத்திலேயே ஏற்பட்ட ஒரு மரபு. தேவாசுர யுத்தத்தில் எப்போதுமே தேவர்கள் தோற்பதும் அசுரர்கள் வெல்வதும் வழக்கம். இவ்வாறு தோற்றுப்போன ஒருசமயத்தில் தேவர்கள் ஒருங்கு கூடித் தங்கள் போர்ப்படைகளை நடாத்த ஓரரசன் வேண்டு மென்று விரும்பினர். அப்போது அவர்கள் இந்திரனைத் தங்கள் தலைவனுக (அரசனுக)த் தேர்ந்து கொண்டனர். பிறகு அவர்களும் போரில் வெற்றி காணத் தொடங்கினர். இதனுல் தொடக்க கால அரசர்கள் போர்க் காலத் தேவைகளைக் கருதி நியமிக்கப் பட்டவர்கள் என்பதும் அப்பொழுது தாங்கள் தாற்காலிகமாகப் பெற்றுக் கொண்ட அதிகாரங்களைப் பயன்படுத்தித் தங்கள் ஆதிக்கத்தை நிரந்தரமாக்கிக் கொண்டனர் என்பதும் தோன்றுகின்றது. ஆனுல், சில காலம் கழித்து தோன்றிய தைத்ரீய உபநிடதத்தில் இக்கதை சிறிது மாற்றிக் கூறப்படுகிறது. அதில் ஒரு தலைவனை விரும்பிய தேவர்கள் தாங்களே ஒருவனைத் தெரிந்தெடுத்துக் கொள்ளாமல்மாபெரும்கடவுளானபிரஜாபதிக்குவேள்விசெய்து அவ் வேள்விப் பயனுகத் தோன்றிய இந்திரனே அவர்களுடைய அரசனுனதாகக் கூறப்பட்டுள்ளது. இதனுல், அரசு என்னும் நிலையம் எவ்வாறு தோன்றிற்று என்பதைப் பற்றிய கருத்து மாறிக் கொண்டே வந்தது என்பதும், முதற்கண் அரசன் என்பவன் மக்களால் தங்கள் விருப்பப்படி தேர்ந்து எடுத்துக் கொள்ளப்பட்டவன் என்றும் சற்றுப் பிற்காலத்தில் அரசனைக் கடவுளர் மக்கட்குத் தந்தனர் என்றும் கருதப் பட்டது என்பதும் விளங்கும். இவ்விரு கருத்துக்களில் முதற் கருத்தின்படி 'அரசன் மக்களால் மக்கள் தேவைக்காக ஏற்படுத்தப்பெற்ற உலகியல் நிலையம் என்ருகும்,' இரண்டாம் கருத்தின்படி அரசன் கடவுளரால் நியமிக்கப்பட்டவன், ஆதலால் கடவுளர் அம்சம் படைத்த, ஆதலால் இயல்பாகவே வரம்பற்ற ஆதிக்கம் பெற்ற, ஆதலால் மக்கள் கட்டுப்பாட்டிற்கு அடங்க வேண்டிய தேவையில்லாத ஒரு அதிகாரி என்பது போதரும். இவ்விரு கருத்துக்களுக்கும் உள்ள வேறுபாடு எளிதில் விளங்கும். அரசனுடையஅளவற்ற தெய்விகஆதிக்கச் சக்தியை புரோகிதர் முதலானேர் தங்கள் வேள்விகள் வாயிலாக மிகுவித்தனர். அரசன் விஷ்ணுவிற்கு நிகர், விஷ்ணுவினுடைய சக்திகளை

யெல்லாம் தன்னுள் அடக்கியவன் என்னும் கருத்துக்கள் வளர லாயின. வேள்விகளில் அரசனை இந்திரனுக்கு நிகராகக் கூறினர்; ஒவ்வோரு சமயங்களில் பெருங் கடவுளான பிரஜா பதிக்கு நிகராகவும் கூறப்பட்டான். புலித்தோலைப் பரப்பி அதன் மீது மூவடி நடந்த அரசன் எல்லா உலகையும் மூவடிக ளால் அளந்த திருமாலின் கடவுட் செய்கையை அவ்வப்போது திருப்பத் திரும்பச் செய்து தனது கடவுட்டன்மையை நிறுவிக் கொண்ட மரபை ஏற்படுத்தினன். வேள்வி யியற்றிய புரோ கிதன் அக்னி வாயிலாகக்கடவுளரை விளித்து "இப்போது முடி சூட்டிப் புனிதனுக்கப் பெற்றவன் வன்மை மிக்க பெரியோன். இவன் இவ்வேலியால் உங்களில் ஒருவனுகிருன்; நீவிர் இவனைக் காப்பாற்ற வேண்டும்" என்று உரைத்தனன்; இதனுல், அரசன் கடவுளர்க்குச் சமமானவன் என்றே, அன்றி அவனே ஒரு கடவுள் என்றே கருதப்படும் நிலை ஏற்பட்டது. முடி சூட்டிப் புனிதனுக்கும் சமயத்தில் மந்திரத்தால் அவனுக்கு ஏற்றப்பட்ட கடவுட்டன்மை எப்போதும் அவனுடைய முக்கிய மான பண்பாகக் கருதப்படும். இம்முயற்சிகளின் ஆதிகாரணம் புரோகிதன், மன்னன் ஆகிய இருவரின் ஆதிக்கத்தைச் சமூ கத்தில் ஒருவரும் எதிர்க்க முடியாமலும் எதிர்க்க நினைக்கா மலும் இருக்கும் சூழ்நிலையை ஆக்க விரும்பியமையே யாம். வாஜபேயம், அசுவமேதம் என்னும் வேள்விகள் அரச னுடைய தெய்விகத்தை அவ்வப்போது மிகுவித்தன. பின் வேத காலத்தில் மன்னனுடைய முடிசூட்டு விழா பெரும்பாலும் ராஜ சூய (பேரரசு) வேள்வியாகவே நிகழ்த்தப் பெறும். பிற் காலத் தில் இந்த மரபு சற்று தளர்த்தப்பட்டு வெறும் முடி சூட்டு அபிடேக அளவில் நின்றது; ஆயினும் அந்நிகழ்ச்சியின் தத்துவம் யாதென்பதை யாவரும் அறிந்தனர்.

கங்கைச் சமவெளியின் கிழக்குப் பகுதியில் பௌத்தர் களுடைய செல்வாக்கு மிகுந்த போது அவர்களிடையே அரசன் மூலத்தைப் (தொடக்கத்தை) பற்றி வேருெருகொள்கை நிலவிற்று. அவர்களுடைய திக்க நிகாயம் என்னும் புனித சாத் திரப்படி திறமைசான்ற மக்கட்குத் தேவைப்பட்ட ஒரு சிறந்த தலைவனுக்கும் மக்களுக்கும் இடையே ஏற்பட்ட ஒரு ஒப்பந் தப்படி தோன்றியவனே அரசன். இது ஒரு வகைச் சமுதாய ஒப் பந்தக் (Social Contract) கோட்பாடு. ஆனுல், பிராம்மணப் புரோகிதர்கள் ஆதிக்கம் மிகுந்திருந்த கங்கை யமுனை ஆற்றின் இடைப் பிரதேசத்தில் கடவுட்டன்மைக் கோட்பாடே வலிவுற் றிருந்தது. மேற்கூறியதிலிருந்து அரசனுடைய மூலத்தைப் பற்றித் தொடக்க காலத்திலிருந்தே இருவகைக் கருத்துகள்

நிலவிவந்தமை விளங்கும். ஒன்று அவன் கடவுளால் நியமிக்கப் பெற்ற கடவுட்டன்மை வாய்ந்த தலைவன் அதாவது அத்தலைவனை எதிர்த்தால் கடவுளரை எதிர்ப்பதற்கு நிகராகும் என்பது. மற்றொன்று 'சிறந்த திறமை வாய்ந்த தலைவன் ஒருவனுக்கும் சமூகத்திலுள்ள ஏனையோர்க்கும் இடையே எழுந்த ஒப்பந்தம் காரணமாகத் தோன்றியவனே மன்னன் என்பது. இவ்விரு கோட்பாடுகளில் பிந்தியது பெரும்பாலும் இந்திய வரலாற்றுத் தொடக்க கால ஆட்சி மரபுகளை யொட்டியும், நூல்களிலும் காணப் பட்டது. முந்தியதோவெனில் பிற்கால மெல்லாம் நாடெல்லாம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாயிற்று.

# 5. வட இந்தியாவில் வேத காலத்திற்குப் பிறகு தோன்றிய அரசியல் நிலை

வேத காலத்தில் சிறு சிறு நாடுகளாக இருந்த 'ஜனபதங்கள்' கி.மு. ஏழு அல்லது ஆறாம் நூற்றாண்டளவில் தங்கள் நிலப்பரப்பில் மிகுந்து 'மகா ஜனபதங்கள்' என்றாயின. இம் மகாஜனபதங்கள்: (1) அங்கம், (2) மகதம், (3) காசி, (4) கோசலம், (5) வஜ்ஜி, (6) மல்லர், (7) சேதி, (8) வத்ஸ (வச்சம்), (9) குரு, (10) பாஞ்சாலம், (11) மத்ஸ்ய (மச்சம்), (12) சூரசேனம், (13) அஸ்மகம், (14) அவந்தி, (15) காந்தாரம், (16) காம்போஜம் என்பன. இவையெல்லாம் தொடக்கத்தில் குடித்தலைவர்களான 'ராஜன்' களின் தலைமையில் இயங்கி வந்த குடிகள் தம்முட் கலந்து, அரசின் பரப்பளவு மிகுந்து, அரசனின் ஆதிக்க சக்தியும் மிகுந்து நின்ற நிலையில் காணப்படுகின்றன. இவ்வாறு அரசின் பருமை மிக மிக, அதன் பொறுப்புக்களும் அதிகாரங்களும் கூட வளர்ந்தன, அந் நிலையில் ராஜ்யம், வைராஜ்யம், ஸாம்ராஜ்யம் என்னும் பல வகை அரசுகள் பற்றிக் கேள்வியுறுகிறோம். 'அதிராட்' (மிக்குயர்ந்த அரசன்), 'ஏகராட்' (ஒரு குடைக்கீழ் நாடாண்ட மன்னன்) என்னும் அரசியல் நிலையங்கள் தோன்றின. நாளடைவில் சபாக்களும் சமிதிகளும் சிறிது சிறிதாக மறையலாயின. அவற்றின் அரசியல் கடமைகளையும் உரிமைகளையும் மன்னனும் அவனுடைய அமைச்சர்களுமே பகிர்ந்து கொண்டனர். அமைச்சர்களும் அவர்கள் ஆணைக்கடங்கி அலுவல் செய்து குற்றேவலரும் எண்ணிக்கையில் மிகுந்தனர். 'ரத்நின்' என்று பெயர் வாய்ந்த அதிகாரிகளில் புரோகிதனே செல்வாக்கும் அதிகாரமும் மிக்கு விளங்கினான்.

பின் வேத காலத்தைச் சற்றுப் பின்தொடர்ந்து இதிகாச காலம் என்று ஒரு காலம் நிகழ்ந்ததா என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. ஏனெனில், இராமாயணம், மகா பாரதம் ஆகிய இதிகாசங்களில் கூறப்படும் செய்திகள் வரலாற்றுச் செய்திகளா என்பதைப் பற்றிய உண்மை விளங் காமையால் அவற்றில் விளக்கப்படும் அரசியல் மரபுகள் எந்தக் காலத்திற்குப் பொருந்துவன என்பதைப் பற்றிய ஐயப்பாடும் எழுவது இயற்கையே. அவ்விதிகாசச் செய்திகள் வரலாற்றுச் செய்திகள் அல்ல என்று கொண்டோமாயினும், அந்நூல்களை இயற்றிய ஆசிரியர்கள் காலத்திற்கேனும் அவை பொருந்து வன என்று கொள்வதில் தவறிருக்க முடியாது என்பது ஒரு கருத்து, அதையும் அப்படியே கொண்டாலும் இந்நூல்களை ஒரே ஆசிரியர் தாம் இயற்றினர் என்று உறுதியாகக் கூற முடியாது; உண்மையில் மகாபாரதத்தில் பலவேறு காலங் களில் வாழ்ந்த பல ஆசிரியர்களுடைய கைத்திறனும் காணப் படுவது எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. தவிர, மகாபாரதத்தில் உள்ள சாந்தி பர்வம் கூறும் அரசியல் நியதிகள் ஏதோ ஒரு காலத்திற்கு மட்டும் பொருத்தமுள்ள அல்லது தேவைப்படுவன அல்ல, எக்காலத்தும் எல்லா அரசு களாலும் வேண்டப்படும் அறவுரைகளேயாதலால் அவற்றின் கால ஆராய்ச்சி அத்துணை முக்கியமன்று எனலாம். ஆயினும் சாந்தி பர்வத்தில் கூறப்படும் கணங்கள் (குடியாட்சி அரசியல் ஒன்றியங்கள்), முடியாட்சிக்கு மறுதலையான ஆட்சிமுறை யொன்று அக்காலத்தில் அறியப் பட்டமையைக் குறிக்கும். கி.மு. ஆறும் நூற்றாண்டில், பற்பல சிறு சிறு அரசுகள் சேர்ந்து பெரிய அரசாதல் என்னும் முறை கௌடில்யர் தமது அர்த்த சாத்திரத்தில் கூறியுள்ள முறையை ஒத்ததாகும். இவற்றில் வஜ்ஜியர், லிச்சாவியர், விதேசர், சாக்யர், மோரியர் என்பார் ஒவ்வொரு காலங்களில் குடியரசாக விளங்கிய நாட்டினர். இவையெல்லாம் பிற்காலத்தெழுந்த காசி, மகதம் முதலிய அரசுகளுக்கு வடபாலும் மேல்பாலும் அமைந்திருந்தன. இவ் வரசுகள் எல்லாம் எவ்வாறு ஆளப்பெற்றன என்பதைப் பற்றி விரிவான விவரங்கள் யாதொன்றும் கிடைப்பதில்லை. குடியர சின் தலைவர் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர். அவர் கிரேக்க நாட்டு நகர அரசில் ஆண்ட ஆர்க்கன் (Archon) என் பானை நிகர்ப்பர். மக்களாட்சியின் அடிப்படைத் தத்துவங்களைச் சிறிதளவேனும் அக்குடி மக்கள் உணர்ந்திருக்கக் கூடும். ஆயினும், அத்தகைய பழங்கால, வரலாற்றுத் தொடக்க கால மன்றங்களைத் தற்காலம் பாராளுமன்றங்களோடு (சில இந்திய

வரலாற்றாசிரியர் செய்வது போல) ஒப்பிடுதல் வரலாற்று ஆராய்ச்சி முறைக்கு மாறானதாகும்.

கி.மு. 600க்குப் பிறகு வட இந்தியாவில் அரசியலின் வரலாறு குறிப்பிடத்தக்கமுறையில் மாறத்தொடங்கியது. வட இந்திய அரசியல் ஒன்றியமும் பாரசீகத்தில் பேரரசும் ஏறத்தாழ ஒரே சமயத்தில் நிறுவப்பெற்றவை (கி. மு. 6-ம் நூற்றாண்டு) என்பது நினைவு கூரத் தக்கது. வடகிழக்கு இந்தியாவில் மகதத்தில் நிறுவப் பெற்ற பெரிய அரசு அங்க தேசத்தை வென்று கொண்ட சிசுநாகன், பிம்பிசாரன், அஜாதசத்ரு, நந்தி வர்த்தனன், மகாபத்மநந்தன் என்பாருடைய திறமையாலேயே தோன்றி வளர்ந்தது. இவ்வரசு மகாபத்ம நந்தன் காலத்தில் மிகப் பலம் வாய்ந்ததாகவும் அகன்றதாகவும் ஆயிற்று. அந்த நந்தனைக் கவிழ்த்து, ஒரு புரட்சி வாயிலாக மகதத்தைக் கைப்பற்றி மௌரியர் வமிசத்தை அங்கு அரசாள வந்த சந்திரகுப்த மௌரியர் வடமேற்கு இந்தியாவை வென்று தன் ஆட்சியில் உட்படுத்த முடிந்தமைக்கு, அலெக்ஸாந்தர் இந்தியா மீது படையெடுத்து வடமேற்கு இந்தியப் பிரதேசங்களை யெல்லாம் வென்று கொண்டமையும் ஒரு காரணமாகும்.

## கௌடில்யரின் அர்த்த சாத்திரம்

சாணக்கியர் என்னும் மற்றொரு பெயர் உடையவர் என்று 'முத்ரா ராட்சசம்' அறிவிக்கும் கௌடில்யர் என்பார் இயற்றிய அர்த்தசாத்திரம் மௌரியர் வரலாற்றிற்கும் ஆட்சி முறைகளைப் பற்றிய செய்திகளுக்கும் முக்கியமான ஆதார நூல் என்னும் கொள்கை முற்றிலும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று என்பதை மேலே கண்டோம். ஆயினும், இந்நூல் இந்திய இலக்கியம் முழுமையினுமே ஆட்சியியலைப்பற்றி மிக விரிவாகக் கூறும் நூலாகும். தமிழில் குறள் நூலுக்குரிய பெருமை வடமொழியில் இதற்குண்டு. இந்நூலில் கூறியுள்ள கருத்துக்கள் எவையேனும் ஒரு காலத்தில் நடைமுறையில் இருந்த நிலையங்களைப் பற்றியவையா அன்றி நூலாசிரியருடைய கற்பனைக் கருத்துகளா என்பதும் ஆராய்ச்சிக்குரியது.

'அர்த்த சாத்திரம்' என்பது 'நாட்டைக் கைப்பற்றிக் காப்பாற்றும் முறைகளை எடுத்துரைக்கும் இயல்' என்று கௌடில்யர் கூறுவர். ஆதலால், அர்த்த(பொருள்)த்தைப் பற்றிக் கூறும் நூல், தர்மம் (அறம்), காமம் (இன்பம்), மோக்ஷம் (வீடு) என்ப

வற்றைப் பற்றிக் கூறும் பிற நூல்களை விட வேறுனது என்பது தெளிவு. அதனைத் 'தண்டநீதி' என்றும் கூறுவர். தண்டம் என்பது கோல்; முறையே செலுத்தப்படும் தண்டம் 'செங்கோ'லாகும்; முறை தவறிச் செய்யப்படும் தண்டம் 'கொடுங்கோல்'. ஆட்சி முறை முற்றிலுமே 'செங்கோல்','கொடுங்கோல்' என்னும் இரு கோட்பாடுகட்குள்ளேயே அடங்கிவிடும் என்பது கருத்து. இந்நூலில் இந்நூலாசிரியர் காலத்திற்கு முன்பே இயற்றப் பெற்ற வேறு சில அர்த்த சாத்திரங்களைப் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. அந்நூல்களில் கண்ட முடிவுகளில் பலவற்றைக் கௌடில்யர் ஏற்றுக் கொள்வதில்லை. இந்நூல் மூலம் அவ்வாசிரியராலேயே இயற்றப்பெற்ற உரையுடன் விளங்குகின்றது. இந்நூலாசிரியர் பெயர் விஷ்ணுகுப்தர் என்று, இந்நூலிலேயே குறிப்பிடப்படுகின்றது. அவரது பிற பெயர்கள் வாத்ஸ்யாயனர், சாணக்கியர் என்றும் காணப்படுவதோடு அவர் திராவிடாச்சாரியார் என்றும் குறிப்பிடப் பெறுகிறுர். இவரை திராவிடாச்சாரியார் என்று குறிப்பிடுவதால் சிலர் இவரைத் தென் இந்தியர் என்றும், ஒருவேளை காஞ்சிபுரத்தாராயிருக்கலாம் என்றும் கருதுகின்றனர். இவர் குடிலர் மரபினராதலால் கௌடில்யர் என்று பெயர் பெற்றுர் என்பர் சிலர். இவர் பெயரைக் கௌடில்யர் என்பாரும் உளர்.

இந்நூல் பதினைந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு நூற்றைம்பது அதிகாரங்களில் அமைந்துள்ளது. மன்னன், அவனுடைய ஆட்சி உறுப்புக்கள், நீதி, சட்டம், பன்னுட்டு உறவு முறைகள், போர் என்பவற்றைப்பற்றி மிகுதியும் கூறுகின்றது. ஆட்சிமுறை அமைப்பைப் பற்றி விரிவாகக் கூறுவதோடு, பகைவரை எவ்வாறு சூழ்ச்சி செய்து அழிப்பது என்றும் செயற்பாடுகளைப் பற்றியும் இது விவரிக்கின்றது. நூலாசிரியர் எவ்விடத்தில் தனது தனிப்பட்ட கருத்துக்களை எடுத்தோதுகின்றுர். எவ்விடங்களில் வரலாற்று முறையில் நடைமுறைகளைக் கூறுகிறுர் என்கிற வேறுபாடு புலப்படுவதில்லை. பொதுவாக இந்திய இலக்கியத்தில் காணும் அறநூல்கள் உலகியலை மறுத்து ஆன்ம விவகாரத்தை மேற்கொள்ள வேண்டியதன் தேவையை வற்புறுத்துவனவாக அமைந்துள்ளன. இவ் விதிக்கு விலக்காக அமைந்துள்ளவை பொருட்பாலும், (அர்த்தசாத்திரம்), காமத்துப்பாலும் (காமசாத்திரம்). இஃது இவ்வாறமையினும் நூலாசிரியரும் உரையாசிரியர்களும் 'பொருளும் இன்பமும் அறத்து வழிப்படும்'[1] என்பதைச் சுட்டிக்காட்டாமல் இருப்பதில்லை.

புறநானூறு : 31—1, 2.

அதாவது பொருள், இன்பம் என்பவை அறக்கோட்பாடுகளி னின்றும் பிறழாமல் இருத்தல் வேண்டும் என்பது கருத்து. வள்ளுவருடைய குறளும் வாத்ஸ்யாயனருடைய காம சூத்திர மும் இக்கருத்தைப் பின்பற்றுகின்றன வாயினும், கௌடில்ய ருடைய அர்த்த சாத்திரம் அப்பொருள்பற்றி இயற்றப்பெற்ற பிற நூல்களின் கோட்பாட்டினின்று மாறுபடுகின்றது.

கௌடில்யர் தமது நூலில் வழங்கியிருக்கும் சில அறிவுரை கள் லட்சியப்பாதையினின்றும் விலகி, கருவிகளேவிட எய்தும் பொருள் சிறத்தது, வழிமுறைகளேவிடப் பயன்களே சிறந்தவை என்னும் கருத்தை ஆதரிக்கும் முறையில் அமைந்துள்ளன. இதைக் கருத்தில் கொண்டு சில அறிஞர்கள் கௌடில்யரை 'இந்திய மாக்கியவில்லி' என்றழைப்பர். கௌடில்யரையும் மாக்கியவில்லியையும் சமப்படுத்திப் பேசுவது முற்றிலும் நேரிது ஆகாது. உண்மையில் அவ்விருவரும் உலகாயதப் போக்கில், உலகியல் வெற்றிகளேச் சிறந்தவையாகக் கருதினர்; உலகியல் வாழ்க்கையில் வெற்றி பெற உதவுவதே அறம் என்னும் கொள்கை ஒலிக்கும்படி அவர்கள் நூல்கள் கட்டுரைக்கின்றன. அரசனுக்கு வெற்றி போர்க்களத்திலும் அரசியலில் வெற்றி சூழ்ச்சித்திறத்திலும் (தூதர், ஒற்றர் என்பார் செயற்பாடுகளில்) தான் கிடைக்கும். ஆகவே, அவ்விரு களங்களிலும் வெற்றி பெற முயலும் அரசன் மேற்கொள்ள வேண்டிய செயல்கள் அறத்தினின்றும் பிறழ்ந்ததாக இருப்பினும் குற்றமில்லே என் பது இதனின்றும் பெறப்படும். இவ்வளவே கௌடில்யருக்கும் மாக்கியவில்லிக்கும் இடையே உள்ள ஒற்றுமை. ஆனல், கருவி யினும் பயனே சிறந்தது என்ற மாக்கியவில்லி ஐரோப்பா விலும், பிறகு தற்கால உலக அரசியலிலும், பொதுவாக, சமயம், ஆன்மவிசாரம் என்பவற்றைக் காட்டிலும் உலகியலே சிறந்தது என்னும் கருத்துப் பரவி வளர்வதற்கு வித்தாக இருந்தார். 15, 16-ம் நூற்றூண்டில் தோன்றிய ஐரோப்பிய மறுமலர்ச்சிக்கு முக்கிய காரணமாக மாக்கியவில்லி விளங்கினர். கௌடில்யரும் அவர் பெயருக்கேற்றாற் போல,[1] அறத்திற்குப் புறம்பான முறைகளே மேற்கொள்ளுதல் அரசருக்கு உற்ற உரிமை (அல்லது கடமை) என்று கருதுபவர். பகைவர்களே எவ் வழியிலாவது வேரறுக்கலாம் என்பது அவரது அரச நீதியா யிற்று. வெற்றி காண்பதற்கான உபாயங்கள் அவை எவையே யாயினும் அவற்றை மேற்கொள்வதில் தவறில்லே என்பது

[1] 'குடிலர் மரபினர் கௌடில்யர்' என்க: குடிலம்: வளைந்த (கொடிய) மரபுகளே மேற்கொள்பவர்.

அவருக்கு உடன்பாடு. இவ்வொரு ஒற்றுமை அல்லது ஒப்புமை காரணமாகவே அவ்விருவரையும் இணைத்துப் பேசுதல் பொருந்தாது என்பது சிலர் கருத்து. ஏனெனில் இந்திய வரலாற்றில் கௌடில்யர் எடுத்துரைத்த கருத்துகள் அவருக்குப் பிறகு வந்த அறிஞர்களால் மேற்கொள்ளவோ ஏற்றுக்கொள்ளவோ படவில்லை. ஹர்ஷ சரிதம் இயற்றிய பாணர் என்னும் கவி அர்த்த சாத்திரத்தில் கௌடில்யர் கூறியுள்ள அரசியல் செயற்பாட்டு முறைகளை வன்மையாகக் கண்டித்துள்ளார். உண்மையில் கௌடில்யரைப்போல அரசியல் துறையில் கூட எந்த தரும விரோதமான காரியத்தைச் செய்தேனும் வெற்றி கண்டால் போதும் என்று கூறிய அறிஞர் ஒருவரும் அவருக்கு முன்போ பின்போ இந்திய அரசியல் உலகில் இருந்ததில்லை. ஆனால், சில இந்திய ஆசிரியர்கள் 'புத்தரே வந்து அர்த்த சாத்திரம் எழுதினாலும் கூட கௌடில்யரைப் போலத்தான் எழுதியிருக்க முடியும்' என்று கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. ஏனெனில் (பொருட்பால்) இயற்றிய வள்ளுவர் அறக் கோட்பாடுகள் மீறியேனும் உலகில் வெற்றி காண்பதில் குற்றமில்லை என்று கூறவில்லை. அப்பொருள் படவும் எழுதவில்லை.

கௌடில்யர் இயற்றிய நூலில் கூறியுள்ள விவரங்களுக்கும் சந்திரகுப்த மௌரியர் அவைக்களத்தே வந்திருந்த மெகஸ்தனிஸ் என்னும் தூதுவர் இயற்றியுள்ள 'இண்டிகா'வில் கண்ட செய்திகளுக்கும் உள்ள வேற்றுமைகளைக் கண்ணுறும் எவரும் அவ்விருவரும் ஒரு காலத்தவர்தாமா என்று ஐயுறுவது இயற்கையே. கிரேக்க தூதர் இந்தியாவில் அடிமைகளே இல்லை என்று கூறியுள்ளதன் பொருள் கௌடில்யர் நூலிலிருந்து விளங்கவில்லை. பாடலிபுத்திர நகரத்தின் ஆட்சி முறையைப் பற்றி மெகஸ்தனிஸ் விரிவாகக் கூறியுள்ளார். அவ்வாட்சி முறையைப்பற்றி அர்த்த சாத்திரத்தில் யாதொன்றும் கூறப்படவில்லை. இதிலிருந்து மெகஸ்தனிஸ் நடைமுறையிலிருந்த சமூக, அரசியல் பழக்கங்களையும் நிலையங்களையும் நிலைமைகளையும் பற்றி எழுதியுள்ளார் என்றும், கௌடில்யர் ஆட்சி முறை என்றால் எவ்வாறிருக்க வேண்டும் என்பதைத் தன் மனதிற்குப் பட்டவாறு எழுதியுள்ளார் என்றும்அவர் காலத்திய வரலாற்று உண்மைகளை எடுத்துரைப்பது அவருடைய கருத்தன்று என்றும் கருத இடமுண்டு. கௌடில்யர் கூறும் 'சக்ரவர்த்தி' என்னும்சொல் எந்தஅரசரையேனும் தனிப்பட குறிக்கின்றதா?

அன்றி எந்த அரசரையும்[1] அது குறிக்குமா? சக்ரவர்த்தி க்ஷேத்ரம் என்பது மௌரியர் பேரரசைக் குறிக்குமா? இன்னோரன்ன வினாக்களுக்கு விடை காண்பதரிது.

**திக்விசயம் : (திசை வென்றி)**

பேரரசர் மேற்கொள்ளும் திக்விசயம் என்னும் வெற்றி மரபு, எத்திசையிலும் படையெடுத்துச் சென்று படைபலத்தால் வெற்றி கண்ட மன்னரின் 'திசை வென்றி'யைக் குறிக்கும். இது அரசன் படைகொண்டு மற்ற மன்னர்களுடைய நாட்டைத் தாக்கும் பொழுது தன் நாட்டிலிருந்து புறப்பட்டு 'உலகைச் சுற்றி வலம் வந்து' வெற்றி காணவேண்டும் என்பது, வட இந்திய மன்னர்கள் எந்த நாட்டிலிருந்து புறப்பட்டு வலம் வந்து போர் நிகழ்த்தவேண்டும் என்றாலும், கிழக்கே, புறப்பட்டுத் தெற்கே திரும்பி மேற்கே சென்று வடக்கு வாயிலாக மறுபடியும் புறப்பட்ட இடத்திற்குவந்து சேர வேண்டியிருக்கும். அப்படியானால், கிழக்கிலிருந்து தொடங்கித் தெற்கேயும் மேற்கேயும் உள்ள நாடுகளைத் தாக்கி வெற்றி காண்பதே முறையாகும். இந்திய வரலாற்றிலேயே முதன் முதல் இவ்வாறு திக்விசயம் நடத்திப் பேரரசு நிலைபடைத்தவர் சந்திரகுப்தமௌரியரென்பது போதரும். அவருக்கு ஆயிரம் ஆண்டுக்காலத்திற்கு முன்பு இந்தியாவில் நுழைந்த ஆரியர்கள் மேற்கிலிருந்து கிழக்கே வந்தாராதலால், (வலம் வரும்) திக்விசயம் அவர்கள் அறியாததொன்றாகும் எனலாம். அம்மௌரியப் பேரரசுக்குச் சம காலத்தவராயினும் சற்று மூத்தவரான அலெக்ஸாந்தரும் திக்விசயத்தை அறிந்தவரல்லர். அவர் மேற்கிலிருந்து கிழக்கே வந்து, வெற்றிகளை முடித்துக் கொண்டு திரும்பவும் மேற்கே சென்றவராதலின்; அன்றியும் கிரேக்கர் அரசியல், ராணுவ மரபுகளில் இத்தகையமரபு ஒன்று காணப்படுவதில்லை. ஆதலால் 'திக்விசயம்' என்னும் கருத்து சந்திரகுப்த மௌரியர் காலத்திற்குப் பிறகு இந்திய அரசியல்அறிஞரிடையே தோன்றியதாக இருக்கக்கூடும் என்று கருத இடமுண்டு. சந்திரகுப்தர் மகதத்தின் தலைநகரான பாடலிபுரத்திலிருந்து படை கொண்டு தெற்கும் மேற்குமாக ஆக்ரமித்துச்சென்று வடமேற்கு இந்திய நாடுகளைக் கைப்பற்றித் தம் பேரரசில் இணைத்துக் கொண்டு மகதத்திற்குத் திரும்பி வராததாலும், அவருக்கு முன்பு இந்திய வரலாற்றில் அத்தகைய வெற்றியைப் பற்றி நாம் கேள்வியுறவில்லை யாதலாலும், அவர் காலத்தேதான் இம்மரபு தொடங்

[1] உதாரணமாக, சந்திரகுப்த மௌரியரை.

கியிருக்கக் கூடும் என்று கருதலாம். சந்திரகுப்த மௌரியருக்கு ஆயிரம் ஆண்டுகட்குப்பின் இந்திய அரசியலில் தோன்றிய சமுத்ரகுப்தர் என்பார் நிகழ்த்திய திக்விசயம் இந்திய வரலாற்றில் மிகுந்த புகழ் வாய்ந்தது. மௌரியர் காலத்திற்கும் (கி.மு. 4.3-ஆம் நூற்றாண்டுகள்) குப்தர் காலத்திற்கும் (கி.பி. 4-5 ஆம் நூற்றாண்டுகள்) இடையே திக்விசயக் கோட்பாடு உருவாகிப் பேரரசராக விரும்பும் அரசர் ஒவ்வொருவரும் திக்விசயம் செய்து வெற்றிகளைக் கொண்டு தன்னிகரில்லாப் பேரரசராக இயலும் என்னும் கருத்தும் வளர்ந்தது. பிறகு இதனை மிகப் பண்டைக்கால நிகழ்ச்சிகளைக் கூறுவதாக அமைந்துள்ள இதிகாசப் புராணக்கதைகளிலும் பிற்காலப் பௌராணிகர்கள் புகுத்தி அர்ஜுனன் முதலியோர் திக்விசயம் செய்ததாக எழுதலாயினர்.

இனி, மன்னருடைய கடமை யாவை என்று நிறுவிய தரும சாத்திரக் காரர்களும் அவர்களை யொட்டி அர்த்தசாத்திரக் காரர்களும் கூறியவை 'க்ஷத்ரிய தருமம்' என்ப தொன்றை வற்புறுத்தினர். பிராமண தருமம், க்ஷத்ரியதருமம், வைசிய தருமம், சூத்ரதருமம் என்று நான்கு வருணத்தாருக்கும், பிரமசரிய தருமம், கிருகஸ்த தருமம், வானப்பிரஸ்த தருமம், சந்யாசதருமம் என்றெல்லாம் ஒவ்வொரு வருணத்தில் பிறந்தார்க்கும், ஒவ்வொருநிலை (ஆசிரமம்) யில் இருப்பார்க்கும் அவரவர்களுடைய ஸ்வ (சொந்த) தருமம் நிர்ணயிக்கப் பட்டமையால் க்ஷத்ரியர்களுக்கும் ஒரு ஸ்வதர்மம் ஏற்படுத்தப் பெற்றது. கொடியோரை ஒறுத்தலும் நல்லோரைப் போற்றலும் அவர்களுடைய உரிமை, அதாவது கடமை. உற்றார், உறவினர் என்றெல்லாம் கருதும் கருத்துகள் இத்தருமத்திற்குப் பொருந்தா; ஆகையால்தான் கண்ணன் அர்ஜுனனுக்குப் பாரதப்போரில் எடுத்துரைத்ததாகக் கூறப்படும் கீதையில் தொடர்ந்து போரை நடத்துமாறு, அதாவது க்ஷத்ரிய தருமத்தைக் கடைப்பிடிக்குமாறு வற்புறுத்தினர். இவ்வாறு தீயோரை ஒறுத்தல் 'களை கட்டதனொடு நேர்' என்றார் வள்ளுவரும். இந்தத் தருமங்களெல்லாம் உரிமையைக் கூறுகின்றனவா, கடமையை எடுத்துரைக்கின்றனவா என்று ஆராய்வதில் பயனில்லை. ஏனெனில், இத்தருமங்களைக் கூறியவர்களின் கருத்துப்படி உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் வேறுபாடில்லை. கடமையைச் செய்வது ஓர் உரிமை. தங்களுக்கென்று ஏற்படுத்தப் பெற்ற கடமைகளைச் செய்வதற்கு வாய்ப்புக்களும், அவற்றை யாற்றுவதற்கான சூழ்நிலைகளும், அவற்றைச் செய்தபின் ஏற்படும் பயன்களும் கிடைக்கப் பெறின், இவை

யெல்லாம் ஒருவனுடைய உரிமையாகின்றன. க்ஷத்ரிய தர்மத்தைச் செய்வது அரசனுடைய உரிமை; அன்றியும் சமுதாயத்திலுள்ள மற்றவர்களும் தத்தம் (ஸ்வ) தருமத்தை கடைப்பிடிக்குமாறு செய்வதும் அவனுடைய கடமை; அவ்வாறு அவர்கள் செய்யாவிட்டால் அவர்களைச் செய்யுமாறு வற்புறுத்துவதும், அதற்கும் பணியாதவர்களைத் தண்டிக்கவும் அவனுக்கு உரிமையுண்டு. தருமத்தினின்றும் பிறழ்பவர்களைப் பாதுகாக்க அவனுக்கு உரிமையில்லை. உண்மையில் தருமத்தை மாற்ற அவனாலோ மற்றவர்களாலோ இயலாது. தர்மம் என்ன கூறுகிறது என்று அதற்குப் பொருள் கூறி விளங்கவைக்கும் உரிமை பிராம்மணருக்கு உண்டு. ஐயமேற்படும் இடங்களில் தங்கள் மனத்திற்குச் சரி என்று பட்ட முறையில் தர்மசாத்திரங்கட்குப் பொருள்கூறும் உரிமையுள்ள பிராம்மணர்கட்கு ஏனையோரைக் காட்டிலும் தருமசாத்திரக் கூற்றுக்களைத் தங்கட்குத் தேவைப்பட்ட முறையில் தங்கள் நன்மைகளைச் சிறப்பாகக் காத்துக் கொள்ளும் வகையில், பொருள் கூறி விளக்கும் வாய்ப்பு இருந்தது. இதிலிருந்து அவர்கள் அப்படிச் செய்தார்கள் என்பது பொருள் படாது; செய்யும் வாய்ப்பு அவர்கட்கு இருந்தது என்பதே புலனாகும். அதேபோல ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்கக் வேண்டிய அரசனுக்கு க்ஷத்ரியனுக்குத் தேவையான அதிகாரம், சுங்கம், படைபலம் முதலியவை இருந்தன. ஆனால், அவற்றைக் கொண்டு அவன் அந்தத் தருமத்தைத் தருமசாத்திரங்களில் கூறிய முறைப்படி செய்தானா என்பது புலப்படாது. வரலாற்று வாயிலாக மட்டுமே அதை அறிய முடியும்.

கௌடில்யர் இயற்றிய அர்த்த சாத்திரம் அத்தகைய நூல்களில் மிகச் சிறந்தது. ஆயினும், அதிற் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் தனிப்பட்ட வகையைச் சேர்ந்தவை: அக்கருத்துக்களை யொட்டிய ஆட்சி உண்மையில் எந்த நாட்டிலேனும் எவராட்சியிலேனும் நடைபெற்றதா என்றுகூற இயலாது. ஆதலால் வரலாற்றிற்குச் சான்றாகப் பயன்படக் கூடிய நிலை அந்த நூலுக்கு உண்டா என்பது ஐயப்பாட்டிற்குரியது. ஆதலால், மௌரியர் கால ஆட்சி முறைகளைப் பற்றிய ஆராய்ச்சிக்குப் பொதுமை வகையில் இயற்றப்பட்ட கௌடில்யரது அர்த்த சாத்திரத்தை நீக்கிப் பிற சான்றுகளை ஏற்றுக் கொள்வதே சிறந்தது. அத்தகைய பிற சான்றுகளில் சிறந்தவை மெகஸ்தனிஸின் இண்டிகாவும், அசோகரது கல்வெட்டுக்களுமேயாம். மெகஸ்தனிஸ் தாம் நேரே கண்டவற்றையும் தம் காலத்தவர் வாயிலாகத் தாம் கேட்டறிந்தவற்றையும் எழுதி வைத்ததே இண்டிகா என்னும் நூல். அசோகரது கல்வெட்டுக்கள் யாவை

யும் பேரரசர் சொற்படி பொறிக்கப்பட்டவை; அக்கல் வெட்டுக்களில் உள்ள வாசகம் அசோகர் தாமே இயற்றித் தந்து தமது ஆட்சியாளர்களைக் கொண்டு தூண்களிலும் குன்றுகளிலும் பொறித்து வைக்குமாறு பணித்தவை என்றும் சிலர்கூறுவர். ஆதலால் அவ்விரு சான்றுகளை முக்கியமாகக் கொண்டு மௌரியர் ஆட்சி முறையையும் ஆட்சி நிலையங்களையும் இத்தன்மை என்று வரையறுக்க முற்படலாம்.

மன்னனும் நாடும்:—பொருளாதாரத் துறையில் அரசிற்கும் ஆளப்படும் நாட்டிற்கும் அல்லது விளைநிலம் முதலிய நிலப் பகுதிகட்கும் இடையே நிலவும் அல்லது நிலவவேண்டிய உறவு இத்தன்மைத்து என்பது ஓர் பயன்தரும் ஆராய்ச்சியாகும். இவ்வாராய்ச்சியில் நாடு (அதாவது மக்கள் வாழும் நிலப் பகுதிகள், காடுகள், சாகுபடி செய்யப்படும் நிலம், தரிசுகள் முதலியவை) முற்றிலும் மன்னனுக்கு உடைமைப் பொருளா அன்றி அவற்றை அப்பொழுது தமக்கெனக் கொண்டு ஆண்டு பயன்படுத்தி வருவோருடைய உடைமைப் பொருளா என்பது ஒரு முக்கியமான கேள்வியாகும். நிலம் மன்னனுடைய சொந்த உடைமைப் பொருளாயின், அவன் முழு நிலத்தையும் தன் ஒருவனாலேயே சீர்திருத்திப் பயன்படுத்த முடியாதாகையால், அந் நிலத்தைத் தேவைப்பட்டோர்க்கு வேண்டிய அளவில் பகிர்ந்து கொடுத்து அவ்வாறு கொடுத்தமைக்காக அவர்களிட மிருந்து பதிலுக்கு நிலவரி முதலியவற்றைப் பெறும் உரிமை மன்னனுக்கு ஏற்பட்டது என்பது ஒரு கொள்கை. இது உண்மையாயின், அவ்வாறு பகிர்ந்தளிக்கப்பட்ட நிலத்தை எப்பொழுது வேண்டுமாயினும், மன்னன் திரும்ப எடுத்துக்கொள்ளலாம் என்றாகும்; அன்றியும், அவ்வாறு திரும்ப எடுத்துக் கொள்ளும் பொழுது, அதுவரையில் அந்நிலத்தின் உரிமையாளராக இருந்தவருக்கு எந்தவிதமான இழப்பீடு (Compensation)ம் தரத் தேவையில்லை என்றும் ஆகும். ஆனால் பெரும்பான்மை ஆட்சி முறைகளில் மன்னனுக்கென்றே சொந்தமான நிலம் (Royal demesne) இருப்பதுண்டு. அப்படியானால் அந்த நிலத்திற்கும் பிறர் உழுது ஆளும் நிலத்திற்கும், அரசனது உரிமை சம்பந்தப்பட்ட அளவில், என்ன வேறுபாடு என்றால், எவனொருவனுக்கும் தானே நேரிடையாக உழுது சாகுபடி செய்யும் நிலத்திற்கும் குத்தகைக்கு விடும் நிலத்திற்கும் உள்ள வேறுபாடே எனல் வேண்டும்: நிலவரி செலுத்தத் தவறினால் நிலத்தைத் திரும்ப எடுத்துக்கொள்ளும் உரிமை அரசர்க்கு இன்றைக்கும் உள்ளதைக் காணலாம்.

லிச்சாவியர், சாக்கியர் முதலியோர் வாழ்ந்த குடியரசுகளில் பாரம்பரியமாக ஆண்ட, ஆனால் ஒவ்வொரு மன்னனும் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மரபு ஒன்று இருந்தமை மேலே கண்டோம். அந்த நிலையில் குடியரசுத் தலைவனுக்கு (அவர் பாரம்பரியமாக ஆதிக்கம் செலுத்திய போதிலும்) நிலம் முழுவதும் தனிப்பட்ட உரிமையாக இருந்திருக்க முடியாது. ஆனால், பாரம்பரியமாக ஆளும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படாத அரசர்களுடைய நிலை வேறு.

உண்மையில் தற்காலத்திற் போல முற்காலத்திலும் புதையல்கள், தாதுக்கள், கனி (சுரங்கங்கள்) என்பவை அரசுக்குச் சொந்தமானவை. நிலமும் அதனுள் அடக்கமான நிதிகளும், பயன்படு பொருள்களும் அரசுக்கு உரிமையானவை என்பது பெறப்படும். இது இவ்வாறாயின் மற்ற உழவர் நிலங்களுக்கு மட்டும் வேறொரு விதி இருக்க நியாயம் இல்லை.

ஆளப்படும் நிலம் மன்னனுடைய சொத்தாகக் கருதப்படுமா என்னும் வினாவிற்கு இன்னொரு நிலையிலிருந்தும் விடை காண முடியும். எப்போதும் ஒருவருடைய தனி உடைமையான சொத்து அவருக்குப் பின் அவருடைய மகனுக்கு அல்லது மக்களுக்குச் சேரும் என்பது கருத்து. மன்னன் மாண்ட பின் அரசு அவனுடைய மகனைச் சேருவதால் அரசு மன்னனுடைய தனி உடைமையாகக் கருதப்பட்டதாகக் கொள்ளலாம். தனி உடைமைச் சொத்தானால் நாடு மன்னனுடைய எல்லா மக்களிடையேயும் சமமாகப் பிரிபட வேண்டுமே எனின், சில மக்களிடையே (உதாரணமாக இங்கிலாந்தில்) குடும்பச் சொத்து மூத்த மகனுக்கு மட்டுமே உரியது என்னும் சட்டக் கோட்பாடு (The Law of Primogeniture) உண்டு என்பது நினைத்தல் வேண்டும்.

சட்டமும் கோட்பாடுகளும் யாவையே யாயினும், பல பண்டைக்கால மன்னர்கள் நாட்டினைத் தமது உடைமைப் பொருளாகக் கருதி வந்தனர் என்று எண்ண இடமுண்டு. இறைப்பொருளைத் தமது விருப்பம் போல் தம்மைப் புகழ்ந்த புலவர்கட்கும் பாணர்கள், கூத்தர்கள் போன்றவர்கட்கும் வாரி வழங்கிய தாராளம் நாட்டு இறைப் பணத்தைப் பற்றிய பொறுப்பு மிகுந்த மன்னர்கள் செய்திருக்கக் கூடிய காரியமன்று: தமிழ் நாட்டில் (பதிற்றுப் பத்து என்னும் தமிழ்ச் சங்க இலக்கிய நூலில் கூறியுள்ளபடி) பல சேர மன்னர்களும் (பிற நூல்களில் கண்டவாறு) மற்ற மன்னர்களும் புலவர்கட்கும், பிறர்க்கும்

வழங்கி வந்த பரிசில்களைக் காண இவ்வெண்ணம் வலுக்கின்றது. பதிற்றுப் பத்தில் ஓரிடத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னும் சேர மன்னன் ஒருவன், கபிலர் என்னும் புலவரை அழைத்துக்கொண்டு நன்று என்னும் மலை ஒன்றின் மீதேறி, அங்கிருந்து தாமும் புலவரும் கண்ட நாடு முழுவதையும் அவருக்கே ஈந்தான் — தன் மீது. தன்னைப் புகழ்ந்து சில செய்யுட்கள் அவரியற்றியதற்காக—என்பது உண்மையாயின், நாட்டைத் தனது தனி உடைமைப் பொருளாகவே மன்னன் கருதினன் என்பது தெளிவு. பதிற்றுப் பத்து முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ள செய்திகளில் ஓரளவு மிகைக் கூற்றுக்கள் இருக்கக் கூடுமாயினும், அடிப்படையில் வரலாற்று உண்மையை அவை கூறுவதாகவே நாம் கொள்ள வேண்டும்.

மன்னனும் குடிகளும்:— மன்னர்க்கும் குடி மக்கட்கும் இடையே இருக்க வேண்டிய அரசியல் உறவு இத் தன்மைத்தாதல் வேண்டும் என்பதைப்பற்றி வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு கருத்துக்கள் நிலவி வந்துள்ளன. அவற்றில் (1) மக்கள் சார்பில் அவர்களுடைய நன்மைக்காக அவர்களிடமிருந்து அதிகாரம் பெற்று அவர்கள் விரும்பும்வரை அரசியல் ஆதிக்கம் செலுத்துபவர், (2) மக்களை அடக்கி ஆளவும் அவர்கட்குப் பாதுகாப்பளிக்கவும் வேண்டி இறைவனால் தனது பிரதிநிதியாக இவ்வுலகில் நியமிக்கப்பட்டவர். இக்கருத்தை உரைக்கும்போது இறைவன் என்னும் சொல் கடவுளுக்கும் மன்னனுக்கும் பொதுவாகப் பயன்படுத்தப்படுவது (உதாரணமாக, திருக்குறளில்) காண வேண்டும். (3) நிலைமையாலும், தகுதியாலும் சமூகத்தின் தந்தையாக விளங்குபவர், அதாவது குடும்பத்தில் தந்தையின் நிலைமையும் அதிகாரமும், அக்கரையும் யாவையோ அவை சமூகத்திடம் மன்னருக்கு உண்டு என்பவை சில. கடைசியிற் கூறிய இக்கருத்து அசோகர் முதலியவர்களால் மேற்கொள்ளப்பட்டது. மக்கள் என்னும் சொல் குடும்பத்திலுள்ள குழந்தைகளுக்கும் நாட்டிலுள்ள குடிகளுக்கும் ஒரே பெயராக அமைந்திருப்பது நோக்கத் தக்கது. மக்கள் என்றைக்கும் தங்களுடைய நன்மை தீமைகளை முற்றிலும் உணரமாட்டார்கள். அவற்றைஅவர்கட்கு உணர்த்தி அவர்கள்விருப்பத்திற்கு மாறாகக்கூட அவர்களுக்கு 'நன்மை' செய்யவேண்டியது தந்தை நிலைமையில் இருக்கும் மன்னனுடைய கடமை என்பதும் இதிலிருந்து பெறப்படும். இக் கோட்பாடுகள் மக்களாட்சிக் கருத்துக்கள் நிலவும்காலத்திற்குப் பொருந்தா வாயினும், மன்னராட்சியை ஏற்றுக் கொண்ட காலத்தில் இத்தகைய கருத்துக்கள் வழங்கி வந்தமை

வியப்பிற்குரியதன்று. ஆண்மகப்பேறு இல்லாத மன்னர்கள் அம்மகப்பேறுவேண்டி புத்திரகாமேஷ்டி(புத்திரனைவிரும்பிச்செய்யப்படும்) வேள்வியை இயற்றி அம்மகனைப் பெறுதலும் உண்டு என்று இதிகாசமும் பண்டைய வரலாறும் கூறும். இராமாயணத்தில் புத்திரனை விரும்பித் தயரதன் வேள்வி இயற்றிய கதையும், பதிற்றுப்பத்தில் கூறியாங்கு பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேரமன்னன் மகனை வேட்டு வேள்வி இயற்றி இளஞ்சேரல் இரும்பொறையைப் பெற்ற வரலாறும் காண்க. ‘வேள்’ என்னும் பகுதியடியாகப் பிறந்த ‘வேள்வி’ என்னும் சொல்லுக்கு ஏதோஒன்றை விரும்பிச் செய்யப்படுவது என்பதே பொருள்.

மன்னனும் வரிப்பணமும்:—ஒரு ந

தாரத்தின் (Public Finance) அடிப்படைத் தத்துவம் யாதென்று பார்த்தால், மன்னனுக்கும் குடிமக்களுக்கும் உள்ள உறவைப் பற்றியும் மன்னனது கடமை உரிமைகளைப் பற்றியும் சிறிது புலப்படும். மக்களுக்கு மன்னன் அளிக்கும் (அல்லது அளிப்பதாக ஒப்புக்கொள்ளும்) பாதுகாப்பிற்குப் பிரதியாக மக்கள் மன்னனுக்குக் கொடுப்பதே வரிப்பணம் என்பது ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு கோட்பாடாயினும் அதுவும் ஒருவகைச் சமுதாய ஒப்பந்தம் என்று கொள்ளலாம். இப்படி ஒரு ஒப்பந்தக் கொள்கையைப் பண்டைய இந்திய அர்த்த சாத்திர தருமங்களிலிருந்து ஓரளவு வருந்திக் கொள்ளலாமாயினும் பேராசிரியர் ஏ. எல். பாஷம் கூறுவது போல, “பல மூலங்களிலிருந்து மன்னனே தன் அரசிலுள்ள எல்லா நிலத்திற்கும்; நீருக்கும் உரியவன்” என்னும் கோட்பாடே அடிக்கடியும் தெளிவாகவும் தோன்றுகிறது;[1] இதனால் வேளாண்மை மீது விதிக்கப்படும் வரி, குத்தகைக்கு விடப்பட்ட சாகுபடி நிலத்திற்காகக்குத்தகைக்காரரான உழவர் நிலச் சொந்தக்காரருக்குத் தரும் ஒருவகை வாடகை(குத்தகைப்பணம்)க்கு நிகராகும். நிலவரிகொடாத உழவர்களை அந்நிலத்திலிருந்து நீக்கிவிடவும் நிலவரி கொடாதார் நிலத்தைத்தாமே மேற்கொள்ளவும்; வாரிசு இல்லாமல் இறந்து போனவர்களுடைய நிலத்தை அரசு எடுத்துக்கொள்ளவும் இருந்த உரிமைகள் யாவையும் இக்கொள்கையைத் தொடர்வனவாம். இதனால் டல்ஹௌசி பிரபு தமது வார்ஸிலிக் கொள்கையை வெளியிட்ட போது இந்திய மன்னர்களைக் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் ‘குத்தகைக் காரர்களாகக்’ கருதியிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. [illegible]

[1] A. L. Basham : Wonder that was India, P. 110.

மொத்த நிலங்களுக்கு மன்னனே அதிபதி என்ருர். இக்கருத்தைச் சிறிது மாற்றி சார்லஸ் டிரெக்மெயர் என்னும் ஆசிரியர் கீழ்க்கண்டவாறு கூறுவர்:[1] "வேத காலத்தில் நிலம் முழுவதும் சமூகத்தில் எல்லோருக்கும் உடைமையாயிருந்தது. நிலத்தை விற்பதும் வாங்குவதும் சமூகத்தில் எல்லோருடைய மொத்தப் பொறுப்பாயிருந்தது. வேதகாலம் முற்றியகாலத்தில் குடிமக்களில் தனியார்உடைமைக்கும்,அரசர்தனிஉடைமைக்கும் உள்ளவேறுபாடு தெளிவாயிற்று. வேதத்தின் உரைகாரர்களில் அதாவது தருமசாத்திரக்காரர்களில் மநுவைத்தவிர பிறர் தனியார் நிலஉரிமையில்; வரிகொடாத குற்றத்திற்காகவன்றிபிறகாரணங்களுக்காக மன்னர்கள் தலையிடுவதை ஒழுங்கற்றது என்று கருதுகின்றனர்." ஆனுல்; இக்கூற்றினின்று வரிகொடுக்கவேண்டியதின் நியாயத்தைப் பற்றியும், வரிகொடாத குற்றத்திற்காக மன்னர் வரிகொடாதாருடைய நிலத்தைப்பறித்துக் கொள்ளும் உரிமையின் தத்துவத்தைப் பற்றியும் யாதொன்றும் விளங்குவதில்லை. அன்றியும் பண்டைய இந்தியாவில் மநுவையே மற்ற தருமசாத்திரக் காரர்களைவிட முக்கியமானவராகக் கருதினர் என்றும் நினைவு கூரற்பாலது. ஆனுல் சிலப்பதிகாரம் கட்டுரை காதையில் தக்கிணன் என்னும் அந்தணன் ஒருவனை, அவன் கண்டெடுத்த புதையலை அரசினின்றும் மறைத்தமைக்குச் சிறையிலிட்டதைத் தவறென்று கூறுவது காணப்படும்.[2] இதனுல் உழவு நிலம் மன்னருக்கு உரிமையாயினும், அந்நிலத்தில் உட்புதைந்து கிடக்கும் நிதியம் அரசனைச் சாராது, கண்டெடுத்தாரைச் சாரும்' என்று கூறியுள்ளதன் தர்க்க நியாயம் புரியவில்லை.

[1] Kingship and Community in Ancient India: P. 24, 25.
[2] சிலப்பதிகாரம்: XXIII : 90—132

# 6. மௌரியர் ஆட்சி நிலையங்கள்

கயைக்கு அருகிலுள்ள இராஜக்கிரகத்தில் ஒரு சிறு அரசை நிறுவிய சிசுநாகர் என்பார் காலத்திற்குப் பிறகு [கி.மு. 6–ம் நூற்றாண்டிற்குப் பின்] மகத நாட்டில் அரசு பிறப்பிலும் அதிகாரத்திலும் விரிவடையத் தொடங்கிற்று. அப்பொழுது தொடங்கிய மகதர் ஆதிக்கம் மேலும் மேலும் வளர்ந்து நந்தர்களது இறுதிக் காலத்தில் கிழக்கிந்தியாவிலேயே பெரிய அரசு என்னும் நிலைமை எய்திற்று. அலெக்ஸாந்தர் இந்தியாவினின்றும் திரும்பிய பிறகு (கி.மு. 4-ம் நூற்றாண்டின் பிற்பகுதி) சந்திரகுப்தமௌரியர் தமது அரசிற்கு மேற்கேயும் வடமேற்கேயும் அமைந்திருந்த முடியரசுகளையும், குடியரசுகளையும் வீழ்த்தித் தம் ஆட்சியைப் பரப்பிக்கொண்டார். இந்திய வரலாற்றிலேயே முதன்முதலாக அப்பொழுது தான் அத்துணைப் பெரிய அரசு நிறுவப்பெற்றது. ஆதலால், அதுவரை நாடு கண்டிராத புது அரசியல் மரபுகளும், நிலையங்களும் ஏற்படலாயின. நந்தர் காலத்திற்கும் முன்பே பாரசீகப் பேரரசு நிறுவப்பட்டிருந்தது. அதைத்தான் அலெக்ஸாந்தர் வென்று இன்னும் பெரிய அரசாக நிறுவினார். பாரசீகப் பேரரசு மரபுகள் பொதுவாக அதற்குப்பின் தோன்றிய எல்லாப் பேரரசுகளாலும் மேற்கொள்ளப்பட்டன. இம்மரபுகளில் பல கௌடில்யரது அர்த்தசாத்திரத்தில் எடுத்தோதப்பட்டுள்ளன என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். சக்ரவர்த்தி என்னும் கருத்தே டரையஸ் நிறுவிய பாரசீகப் பேரரசின் உதாரணத்தாற் பெறப்பட்டது என்றும், சக்ரவர்த்தி க்ஷேத்ரம் என்று கௌடில்யர் கூறிய (மேல் கடலிலிருந்து கீழ்கடல் வரை பரவியிருந்த) ஆட்சிப்பரப்பு பாரசீகப் பேரரசின் அமைப்பை ஒட்டியது என்றும், கௌடில்யர் விவரித்துள்ள எண்ணிறந்த ஆணையாளர்கள், ஆட்சியாளர்கள், அதிகாரிகள் என்பாரைப் போன்றவர்கள் பாரசீக ஆட்சியிலும் காணப்பட்டனர் என்றும் பேரரசை மாகாணங்

களாகப் பிரித்தல், அரசின் ஆணைகளைத் தூண்களில் கல் வெட்டுக்களாகப் பொறித்தல் முதலிய மரபுகள் பாரசீக ஆட்சி மரபுகளை அடியொற்றியவை என்றும் கருத இடமுண்டு. சந்திர குப்த மௌரியர் ஈரானியருடைய சமயத்தை மேற்கொண்டு பரிதி வழிபாடு செய்தார் என்று ஒரு வரலாறு உண்மையும் இங்குக் காணவேண்டும். சிற்றரசுகளும், சிறு சிறு குடியரசு களும் அழிந்து போய்ப் பேரரசுகள் தோன்றுவதற்கு வட மேற்கு இந்தியாவில் இருந்த சிறு குடியரசுகளை அலெக்ஸாந்தர் வென்றுவிட்டமையே காரணம் என்று சிலர் கூறுவர். இது பொருந்துவதாகத் தோன்றவில்லை. ஏனெனில், அலெக் ஸாந்தர் சிற்றரசுகளோடு பாரசீகம் போன்ற பேரரசுகளையும் அழித்தவர். தவிர, சந்திரகுப்த மௌரியரது பேரரசு ஏற்பட்ட பல நூற்றுண்டுகட்குப் பிறகும் வடகிழக்கு இந்தியாவில் இம யத்தின் அடிவாரத்தில் லிச்சாவியர் போன்ற சிறு சிறு 'குடியரசு' நாடுகள் நடைமுறையில் இருந்து வந்தமையும் நோக்கற்பாலது.

மௌரிய மன்னர்கள் வரம்பற்ற ஆதிக்கம் செலுத்திய வர்கள். அத்தகைய ஆதிக்கம் செலுத்துவதில் அவர்கட்கு எத் தகைய தடையும் இருக்கவில்லை. ஆனல், பண்டைய இந்திய ஆட்சிமுறைகளைப் பற்றி விளக்கம் தரும் சில வரலாற்று ஆசிரி யர்கள் மன்னர்கள் பல கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடந் தனர் என்று கூறுகின்றனர். அமைச்சர், புரோகிதர் என்பா ரது அறிவுரைகளுக்குக் கட்டுப்பட்டு அரசன் ஆளவேண்டும் என்பதுபொதுவிதி. இதனைப்பெரும்பான்மை மன்னர்பின்பற்றி யிருக்கவும் கூடும். ஆனல், தமது விருப்பத்திற்கும் வசதிக்கும் மாருன அறிவுரைகளையும் அரசர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயம் அவர்கட்கு எப்படி இருந்திருக்க முடியும்? ஏனெனில், பிறரை ஒறுக்கும் வசதியும் அதிகாரமும் அரசர்க்கு உண்டே தவிர, அரசரை ஒறுக்கும் அதிகாரமும் வசதியும் மற்றவர்கட்கு இல்லை. தவிர, அமைச்சர், புரோகிதர் போன்ற பிறருடைய அறிவுரைகளை எந்த விஷயங்களில் மன்னர் கேட்பார்? அப்படிக் கேட்டாலும் மன்னனுடைய மனத் திற்குப் பிடிக்காத அறிவுரைகளை அச்சமின்றி எடுத்துரைக்கும் ஆலோசகர்கள் எத்தனைபேர் இருந்திருப்பார்கள்? என்பவை யெல்லாம் வரலாற்று உண்மை வாயிலாக நிர்ணயிக்க வேண் டியவை. அற நூல்களில் விதித்த விதிகளைக்கொண்டு முடிவு கட்டக் கூடாதவை. திருவள்ளுவரைப் போலவே கௌடில் யரும், அமைச்சர் (உழையிருந்தார்)களுடைய அறிவுரை களைச் சிரமேற்கொண்டு ஆட்சி நடத்த வேண்டும் என்று

கூறுவர். ஆசிரியரை மாணவனும், தந்தையை மகனும் பின் பற்றுவது போலப் புரோகிதனை அரசன் பின்பற்ற வேண்டும் என்று கௌடில்யர் கூறுவர். அன்றியும் குடிமக்களது நன்மையையே தனது நன்மையாகக் கருதி நடப்பது அரசருடைய கடமை என்றும் கூறுவர். தந்நலங் கருதி மக்கள் நலத்தைப் புறக்கணித்தல் தவறு என்பர். இக் கூற்றுக்கள் எல்லாம் தந்நலங் கருதியும் தன்னிச்சைப்படியும் நடந்துவந்த அரசர்கட்குக் கூறிய அறிவுரை யாயின், அத்தகைய அறிவுரைக் குத் தேவையிருந்தது என்பது புலப்படும். ஆயினும், பண்டைய இந்தியப் பேரரசுகள் சட்டவரம்பிற்குட்பட்ட ஆதிபத்தியக் குறைபாடுடைய ஆட்சியாளர்கள் இன்றைய பிரிட்டிஷ் அரசர், இந்திய ஜனாதிபதி போன்றவர் என்றெல்லாம் சிலர் கூறுவர். இவ்வாறு உரைப்பவர்களில், இக்கொள்கையை மிகவும் வற்புறுத்திக் கூறுபவர் கே.பி. ஜயஸ்வால் என்னும் அறிஞர். அவர் தற்கால அரசியல் மரபுகளைப் பண்டைக்கால அரசுக்கு ஏற்றிக் கூறுகின்றார் என்பது தெளிவாதலால், அவர் கருத்துக்கள் ஏற்றுக் கொள்ளத் தக்கவையல்ல. அந்தக் காலத்தில் தர்மம், அதை எடுத்துரைப்பவர் என்பன உண்டேயன்றி, சட்டம் அதை மீறினால் அதற்கான தண்டனையளிப்பதற்குத் தகுதியுடைய நிலையம் என்பவையில்லை என்பதை நினைவு கூர வேண்டும். தானாகவே, தன்னிச்சையாகவே ஒரு தர்மத்திற்குக் கட்டுப்பட்டு நடந்துகொள்ளும் மன்னன், தர்மதேவதையின் சினத்திற்கு அஞ்சி அங்ஙனம் செய்வானே யல்லாமல், மக்களால் செயற்படுத்தப் பெறும் நிலையங்கள் வாயிலாக ஏற்படக் கூடிய தண்டனைக்கு அஞ்சி அவன் அங்ஙனம் செய்யான். அன்றியும், அன்றாட அரசியல் வாழ்க்கையில் பண்டைக்கால இந்திய மன்னர்கள் நடந்துகொண்ட விதத்தை எடுத்துரைக்கும் இலக்கிய நூல்கள் நமக்குக் கிடைக்க வில்லை யாதலால், அதைப்பற்றி யாதொன்றும் உறுதியாகக் கூற இயலாது.

மௌரியப் பேரரசர் தாமே யாதொரு அலுவலும் மேற்கொள்ளாமல் தமது அதிகாரிகளைக் கொண்டே ஆட்சியை நடத்திவிட்டுச் சும்மா இருந்த பொம்மை என்று கருதக் கூடாது. ஒவ்வொரு நாளும் விடியற் காலையிலிருந்து நள்ளிரவுவரை ஓய்வு ஒழிவின்றி ஏதேனும் ஒருவகை அலுவல் காத்திருந்தது. ஆட்சிப்பொறுப்பின் சுமையைத் தாங்க முடியாமலே பல மன்னர்கள் சிலகாலம் ஆண்டபின் துறவு மேற்கொண்டனர் என்றும் கருதும் அறிஞரும் உளர். மன்னர்கள் தம் ஆட்சிக் காலத்தை ஓரமயத்தில் முடித்துக்கொண்டு துறவு மேற்கொள்ளும் மரபு பரவலாக இருந்தது உண்மையே. ஆயி

னும், மேற்கூறிய காரணத்திற்காக மட்டும்தான் அவர்கள் அப்படித் துறவு மேற்கொண்டார்கள் என்று கருத முடியாது. வருணாசிரம தருமத்தின்ஏற்பாட்டின்படி எந்த இல்லறத்தானும் (அவன் அந்தணனாயிருப்பினும், அரசனாயிருப்பினும்) வாழ்க்கையின் பிற்பகுதியில் துறவற மேற்கோடல் முறையாதலின், மன்னர்களும் அப்படிச் செய்திருத்தல் கூடும். சந்திரகுப்த மௌரியர் பட்டத்தைத்துறந்து சமண முனிவராகித் தென்னாடு போந்தார் என்னும் வரலாறும், சங்க இலக்கியமான பதிற்றுப் பத்தில் 'ஒடுங்கா நல்லிசை உயர்ந்த கேள்வி, நெடும் பாரதாயனார்முந்துறக்காடு போந்த, பல்யானைச் செல்கெழுகுட்டுவன்[1] என்று கூறியவாறு அச்சேரமன்னன் தனது புரோகிதனை நெடும்பாரதாயனார் முன்பு துறவு மேற்கொண்டு செல்ல அவரைத்தொடர்ந்து தானும் துறந்தான் என்னும் வரலாறும் மன்னர் துறவு மேற்கொண்டதற்கு எடுத்துக்காட்டுக்களாம். அசோகர் பௌத்தக் கொள்கைகளை மேற்கொண்டவராயினும் துறவியாக வில்லை என்பது நினைவுகொள்ளல் வேண்டும்.

அமைச்சர் என்னும் தமிழ்ச்சொல் 'அமாத்ய' என்னும் வட சொல்லிலிருந்து பிறந்தது என்பர். அச் சொல்லின் பொருள் 'பக்கத்தில் இருப்பவர்' என்பது. அருகிலிருந்து கொண்டு தேவைப்பட்டபொழுது மன்னருக்கு அறிவுரை பகர்ந்து உதவுபவர் என்பது பொருள். இதனையே 'உழையிருந்தான்' என்பர் வள்ளுவரும். அத்தகைய அமைச்சர்களில் மௌரிய அரசில் பலர் இருந்தனர். சந்திரகுப்தரால் வெல்லப்பெற்ற நந்தர் ஆட்சியில் 'இராட்சசர்' என்னும் அமைச்சர்பிரான் தலை சிறந்த கடமை உணர்ச்சியோடு அலுவல் பார்த்து வந்தமையும்அவரையும் மனமாற்றம் செய்து சந்திரகுப்தர் பக்கல் சேர்க்கவேண்டிய தன் தேவையைச் சாணக்கியர் உணர்ந்திருந்தார் என்பதும் குப்தர் காலத்தில் இயற்றப்பெற்ற முத்ரா ராட்சசம் என்னும் நூலாற் பெறப்படும். இவ்வமைச்சர்களில் தலையாயவர்களும் பிறரும் இருந்தனர். முதல் அமைச்சர் மன்னனது நம்பிக்கைக்கு முற்றிலும் பாத்திரமாகி மன்னனது நன்மையைக் கருதிச் செயலாற்றுவர். பிறர் அவருக்கு அவ்வேலையில் உதவுவர். அவர்கள் ராஜ தந்திரத்தில் வல்லுநராயிருந்தனர். அதாவது அவ்வாறு இருத்தல் வேண்டும் என்று அரசியல் நூல்கள் கூறின. அக்காலத்தில் (இக்காலத்திற்போல) ராஜதந்திரம் என்பது பெரும்பாலும் 'நண்பரைச் சார்தலும்' 'பகைவரை வெருளலும்' 'நட்டோரை இணைத்தலும்' 'ஒன்னார்ப் பிரித்தலும்'

[1] மூன்றும் பத்து : பதிகம்.

'தம்முள் நட்புப் பூண்டு நிற்கும் பகைவர்களைப் பிரித்தலும்' 'தம்முள் வேறுபட்டு நிற்கும் நண்பர்களைச் சேர்த்தலும்' இன்னோரன்ன செயற்பாடுகளை எவ்வாறேனும் சாதித்துக் கொள்ளுதலும் என்னும் அளவில் நின்றது. பகைவரை ஒழிக்கும் வழிகள் ஆராயப்பட்டன. அவர்களை நண்பர்களாக்கிக் கொள்ளும் முறைகள் மேற்கொள்ளப்படவில்லை. பஞ்ச தந்திரம் என்னும் (குப்தர் காலத்தில் தொகுக்கப்பெற்ற) கதைக் கொத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ள 'மித்ர பேதம்' 'அசம் பிரேட்சிய காரித்துவம்' முதலிய தந்திரங்கள் அரசன் சார்பில் அமைச்சர்கள் மேற்கொள்ளத்தக்கவை என்று கருதப்பட்டது. இதனையே வள்ளுவரும் 'பிரித்தலும் பேணிக்கொளலும் பிரித் தார்ப், பொருத்தலும் வல்லது அமைச்சு,'[1] என்று சுருக்கமாகக் கூறினார்.

புரோகிதர் முதலமைச்சரினும் அவைக்களத்தே செல்வாக்கு மிக்கு விளங்கினர். வேத காலத்திலேயே ராஜனைவிடப் புரோகிதன் ஆட்சியிற் சிறந்து விளங்கினன் என்பதை மேலே கண்டோம். மன்னர்க்குச் செல்வம் மிகுந்திருப்பினும் புரோகிதர்க்குச் செல்வாக்கு மிகுந்திருந்தமைக்குக் காரணம் அக்காலத்து மக்கள் (அரசன் உள்பட) தரும சாத்திரங்களின் உண்மை, அந்தணர்கள்சிறப்பு, புரோகிதர் இன்றியமையாமை, மக்கள் வாழ்க்கையில் கடவுளர் தலையீடு முதலியவற்றில் பெரிதும் நம்பினர் என்பதே. இன்றேல் அத்துணைச் செல்வச் சிறப்பும் படைச்செருக்கும் படைத்த மன்னர்க்கும் புரோகிதரது அறிவுரைகளைப் புறக்கணிக்க இயலாத நிலைமை ஏற்பட்டிராது. மன்னர் தன்னிச்சைப்படி ஆட்சி செலுத்தாமல் அமைச்சர் இச்சைப்படியோ, அந்தணர் இச்சைப்படியோ ஆண்டார் என்பது உண்மையாயின் அவ்வொரு காரணத்தாலேயே ஆட்சி சிறந்தது என்று கருத இடமுண்டாகாது. அரசியல் என்பது உலகியல் வாழ்க்கையோடு மட்டும் தொடர்புடையது என்று இக்காலத்தில் கருதுவது போல, அக்காலத்தில் ஒருவருங் கருதவில்லை. ஆதலால்; சோதிடம் கணிப்பதற்கும், முழுத்தம் (முகூர்த்தம்) பார்க்கவும், ஓரை (நேரம்) நிமித்தம், சகுனம் என்பவை கூறவும் கணி என்னும் அதிகாரி தேவைப்பட்டான். யாகங்கள் செய்யவும் செய்விக்கவும் சமயத் தொடர்புடைய பிற அலுவல்களில் ஈடுபட விரும்பும் மக்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்யப் புரோகிதன் பயன்பட்டான்.

சேனாபதி என்பான் வேத காலத்தில் சேனானி எனப்பட்டான்; சேனை (படை)க்குத் தலைவன்; அவனைச் சேனாதிபதி

[1] குறள் 633.

எனலும் உண்டு. படைத்தலைமை மௌரியர் காலத்தில் மிகுந்த பொறுப்புள்ள கடினமான தலைமையாயிற்று. மௌரியர் பேரரசு படைபலத்தால் நிறுவப்பட்டது. படையின் திறமையால் அது தொடர்ந்து பேரரசாக விளங்கிற்று. சந்திரகுப்த மௌரியர் வடமேற்கு இந்திய குடி, முடியரசுப் பகுதிகளை வென்று அந்நாடுகளை அடிப்படுத்தி அதற்கும் மேல்பால் அமைந்துள்ள இந்துகுஷ் மலைப் பிராந்தியத்தில் இருந்த செலியூகஸ்நிகேடரின் பாரசீகப் பேரரசின் கீழைப் பகுதிகளை வென்று அவ்வரசரோடு தமக்குச் சாதகமான ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு வென்ற வரலாறு இந்திய வரலாற்றிலேயே முதன் முதலாகக் கண்ட வெளிநாட்டு வெற்றி. அன்றியும் சந்திரகுப்தர் மகனை பிந்துசாரர் இந்தியாவின் தென் கோடியும் கலிங்கமும் நீங்கலாகப் பிற பகுதிகளையெல்லாம் வென்றுமாபெரும் சாம்ராஜ்யம்நிறுவியமைவரலாறுஅறிந்தது. அவர் மகனை அசோகரின் படை பலம் கலிங்கத்தில் வெளியாயிற்று. அப்படை அம்மன்னரின் உள்ளத்தை உருக்கி அவர் மனமும் மதமும் மாறும் அளவிற்கு கொடுஞ் செயல்களைப் போர்க்களத்தே புரிந்த வரலாறு அம்மன்னராலேயே அவரது சாசனங்களில் கூறப்பட்டது. 'இனி தர்ம விஜயமே செய்வேன்' என்று உறுதி கூறிய அசோகர் தமது படையைக் கலைக்காமல் வைத்திருந்தமை போற்றத்தக்கது. அப்படை கலைக்கப்படாமலிருந்தமையும், தேவையானல் அதனை எவ்வாறு பயன் படுத்த முடியும் என்பதைக் கலிங்கத்தில் செய்து காட்டிய மன்னர் இன்னும் இருக்கிருர் என்னும் எண்ணமும் கூடி நாகரிக மற்ற பல குடிகள் (borderers) சூழ விருந்த மௌரியப் பேரரசு அமைதியோடு விளங்கிற்று. அவரது சந்ததியாரில் கடைசியில் ஆண்ட பிரகத்ரதர் என்பவர் தமது படைத் தலைவரான புஷ்யமித்ர சுங்கர் என்பவரால் கொலையுண்டமை அப்படையையும் அதன் தலைமையையும் முற்றிலும் நம்பிய மன்னரது கதி என்னவாகும் என்பதைக் காட்டும்.

மன்னர் தம் ஆட்சியில் பேரரசைப் பல பகுதிகளாகப் பிரித்து ஆள வேண்டியிருந்தமையாலும், பேரரசின் ஓரப் பகுதிகள் தலைநகரிலிருந்து நெடுந் தொலைவில் இருக்கக் கூடுமாதலாலும், அவ்வளவு தொலைவில் நம்பத்தக்க அதிகாரிகள் இருக்க வேண்டியது அவசியமாதலாலும் அவர் தமது மக்களை அதுவும் முக்கியமாக மூத்த மகனை யுவராஜனை அத்தகைய அரசியல்அலுவல்களுக்கு ஏற்றபடி பயிற்றுவித்தான். அசோகர் தம் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே காச்மீரத்தில் அரசப் பிரதிநிதியாக அலுவல் பார்த்தமை இதற்கு ஓர் உதாரணம்.

மன்னர் தம் ஆளுகைக் காலத்திலேயே யுவராஜன் என்னும் பட்டத்தை மூத்த மகனுக்குக் கட்டி வைப்பதுண்டு. ஆட்சி அலு வல்களில் ஈடுபட்டு நிர்வாகத்தின் விவரங்களைத் தெரிந்து கொண்ட யுவராஜன் தான் மன்னனாகப் பட்டம் ஏற்கும் பொழுது நாட்டிற்கேற்ற அரசனாக அவன் விளங்கமுடியும் என்பது கருத்து. தொடக்கத்திலிருந்தே அரசனுடைய மூத்த மகனே அரசனுக்கு அடுத்தபடி அரசு கட்டில் ஏறும் மரபு இருந்து வந்துள்ளது. இம் மரபு கொள்கையளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது; ஆயினும், நடைமுறையில் ஒரு படித் தாக மேற்கொள்ளப்படவில்லை. அசோகரைப்பற்றிப் பௌத்தர்கள் தரும் தகவல்கள் உண்மையாயின், அவரும் மௌரியர் பட்டத்திற்குத் தம்மினும் மிக்க தகுதியுடைய உறவி னர் பலரை வன்முறையில் நீக்கிவிட்டு, குருதி வெள்ளத்தில் நீந்தி வந்து, அரசு கட்டிலேறியதாக வரும் வரலாறு கருதத் தக்கதாகும். மௌரியர் ஆட்சி முடிவுற்று ஆறு நூற்றாண்டு கட்குப் பின் நிறுவப் பெற்ற குப்தர் ஆட்சியில் மூத்த மகன் ஆட்சிக்கு வரும் மரபு முக்கியமாக இரண்டு அமயங்களிலேனும் கைவிடப்பட்டது. I-ம் சந்திரகுப்தர் மகனான சமுத்ரகுப்தரும், அவர் மகனான II-ம் சந்திரகுப்தரும் அவரவர் தம் தந்தை யர்க்கு மூத்த மக்கள் அல்லர் என்பது ஈண்டு கவனிக்கத்தக்கது. அன்றியும், கி. மு. ஆறும் நூற்றாண்டிற்கு முன்பே கூட, வட கிழக்கு இந்தியாவிலிருந்த சில மன்னர் குலங்களில் மூத்த மகனை நீக்கி விட்டு, அடுத்த மக்களில் சிறந்தோனைப் பட்டத் திற்குத் தேர்ந்தெடுக்கும் மரபு பயிற்சியில் இருந்தது என்பதை இராமாயணக் கதை அறிவிப்பதாகச் சிலர் கருதுவர். தசரதன் மனைவியரில் ஒருத்தியான கைகேயி என்பாள் கேகயர் குலத் தைச் சேர்ந்தவள். அக்குலத்தவர் கேகயமான மயிலைத் தம் குலமே வழிபடு கடவுளாகவும் அதன் சின்னமாகவும் (Totem) கொண்டிருந்தனர் என்பர். தவிர, கேகயம் தனது முதல் முட் டையை (அல்லது அதனின்றும் ஈன்ற மயிலை) அழித்துவிடும் என்பது விஞ்ஞான உண்மையாக இல்லாவிடினும், மக்களி டையே ஒரு நம்பிக்கையாகவேனும் இருந்தது. இக்கருத்தாலே தசரதனுக்குப் பிறகு இராமனே அரசாள வேண்டும் என்னும் நியதியை மாற்றிப் பரதனும் ஆளலாம் என்று அவள் வாதா டினுள் என்று சிலர் கூறுவர். புராணங்களிலும் இதிகாசங்களி லும் வரும் இத்தகைய எடுத்துக்காட்டுகளைவிட வரலாற்றில் தோன்றும் உதாரணங்களே சிறந்தவை.

முதலமைச்சர், புரோகிதர், சேனுதிபதி, யுவராஜன் ஆகி யோர் யாவருமே அமைச்சர் குழாத்தைச் சேர்ந்தவர்கள். இவர்

களுக்குக் கீழ்ப்படிந்து அலுவல் ஆற்றிய எண்ணிறந்த செயலாளர்கள் பலர் இருந்தனர். இத்தகைய ஏற்பாட்டில் மன்னர் ஆணைக்குக் கீழ்ப்படிந்து இவர்கள் யாவருமே செயலாற்றினர் என்பதும் மன்னர் தவிர வேறு ஒருவரும் தம்மிச்சைப்படி ஆட்சியைப் பொறுத்த முடிவுகள் எடுத்துச் செயலாற்ற முடியாது என்பதும் கருதற்பாலன.

மேற்கூறிய அரசியல் நிலையங்களேயன்றி, ஆட்சி நடைபெறுவதற்குத் தேவையான நிதியை வரிகள் மூலமாகவும் பிறவற்றாலும் திரட்டும் பொறுப்பினை மேற்கொண்ட அலுவலர் இருந்தனர். பொது மராமத்துக் கட்டட வேலைகளைச் செய்து, ஏரிகளையும் சாலைகளையும் பழுது பார்க்கும் துறையினரும் இருந்தனர். ஆட்சியாளர்களில், பேரரசின் பல பகுதிகளில் இருந்து வரும் கடிதங்களுக்குப் பதில் எழுதுவோரும், ஆணைகளைப் பிறப்பித்து ஓலை விடுப்போரும் என அரசியல் உத்தரவுகளைச் செலுத்தி வாங்கும் இலாக்காவினரும் இருந்தனர். இத்தகைய பெரிய முக்கியமான துறைகளைத் தவிர, வர்த்தகத் துறையினர், எடைகள், துலாக்கோல் ஆகியவற்றைச் சரிபார்க்கும் துறையினர், சுங்கம் வசூலிப்போர், நூல் நூற்றல், நெசவு, உழவு, உற்பத்தி, இறைச்சி தயாரித்தல், கணிகையர், நாடு விட்டு நாடு செல்வோர்க்கு அளிக்கப்படும் அனுமதிச் சீட்டுகள், நகராட்சி முதலிய விவகாரங்களை மேற் பார்க்கும் துறையினர் எனப் பல துறையினர் அரசாங்கத்தை நடத்தினர். அரசு தானே மேற்பார்த்து நடத்திய அலுவல்கள் இவற்றில் பலவாயின. அநாதைகள், கைம்பெண்டிர் முதலியோர்க்கு விடுதிகள் நடத்துவதும் அரசின் கடமையாயிற்று. இவ்வளவு அலுவல்களை மேற்கொண்ட அரசு அதிகாரிகள் படையொன்றையே அமைதிக் கால அரசாங்க வேலைக்கு வைத்துக் கொண்டிருந்தது எனலாம்.

அரசின் வருவாய் பெரும்பாலும் சாகுபடி நிலத்திலிருந்தே கிடைத்தது. இதை நிலவரி என்று கூறலாம். இந்த நிலவரி ஆறில் ஒரு பங்கு என்று கொள்கையளவில் நிர்ணயிக்கப்பட்டது. இதனைக் கடமை என்றும் தமிழில் கூறுவர். மேய்ச்சல் நிலம், காடுகள், கனிகள் (சுரங்கங்கள்) என்பவற்றினின்றும் கிடைத்த வரும்படி நிலவரியினின்றும் வேறுபட்டது; இதைத் தவிரச் சுங்க வரியும், வேலைக்காரர்கள், பண்டங்கள், பொருள்கள் தயாரிப்போர், வர்த்தகர்களிடம் வசூலிக்கும் வரியும், சூதாடிகளிடம் பெற்ற வரியும் என வரிகள் பலவாயின. நீதி மன்றங்கள் விதித்த அபராதத் தொகைகள், கட்டாயக் கடன்

கள் சிறப்பாக விதிக்கப்பட்ட சில வரிகள் என்பவை சேர்ந்து மன்னனின் இறைப் பணத்தை மிகுவித்தன. இவையேயன்றி, தோற்கடிக்கப்பட்ட பகைவர்களிடமிருந்து கவரும் பொருள்களில் மன்னனைச் சேர்ந்தவை மிகுதியாகவே இருந்திருக்கும். மற்றும், மன்னனைக் காண வருபவர்கள் கொணரும் பரிசுகள், சிற்றரசர்கள் கட்டும் கப்பங்கள் என்று பலவகையிலும் குவிந்த செல்வம் அரசை (அதாவது அரசனை)ச் சேர்ந்ததே. இவ்வாறு குவிந்த செல்வத்தைப் படைவீரர்கள், போர், பொது (மராமத்து)ப் பணி, எளியவர்க்கு உதவி, சமயத்தொடர்புடைய பொதுச் செலவுகள் (மடங்கள், துறவிகள் போன்ற செலவினங்கள்) என்பவற்றிற்காகச் செலவிட்டனர். ஆனால், இவற்றை எல்லாம் விட, மன்னன் தனக்கும் தனது அரண்மனையில் வசிக்கும் தன் உற்றார், உறவினர் முதலியோர்கட்கும் வேண்டிய செலவையும் இந்த வரும்படியிலிருந்தே செய்தான். அரசாங்க அலுவலர்களுக்குப் பொருள்களாகக் கொடுக்கப்பட்ட ஊதியம் தவிரக் காசாகத் தரப்படும் ஊதியமும் இந்த வரும்படியிலிருந்தே தரப்பட்டது. வரும்படியையும் செலவையும் சரி பார்ப்பதற்கு, ஒரு அரசாங்கத்துறை இருந்தது. அத்துறையினர் மன்னர் விரும்பிய, எதிர்பார்த்த மூலங்களிலிருந்து வர வேண்டிய வரும்படி முற்றிலும் வந்துவிட்டதா என்றும், மன்னன் ஏற்றுக்கொண்ட முறையிலும் துறையிலும்தான் செலவுகள் செய்யப்பட்டனவா என்றும் கணக்கு வைத்தனர். சிலர் இத்துறையினரையும் அவர்கள் அலுவல்களின் தன்மையையும் தற்கால அரசாங்கக் கணக்கர்களோடும் அவர்களது அலுவல்களின் தன்மையோடும் ஒப்பிடுகின்றனர். இவ்வாறு ஒப்பிடுதலில் வரலாற்றியல்—மதிப்பீட்டுக் குற்றம் தோன்றும். ஆழ்ந்து ஆராயாமல் மேலெழுந்தவாறு மட்டும் நோக்குவார்க்கு இவ்வொப்புமை ஏற்றுக் கொள்ளத் தக்கதாயிருக்கலாம். ஆனால், கூர்ந்து ஆராய்ந்தால் இவ்வொப்புமை தவறானது என்பது போதரும். ஏனெனில், பண்டைக்கால மன்னர்கள் எந்தெந்த மூலங்களிலிருந்து அரசாங்க வருவாயைப் பெறவேண்டும் என்று நிர்ணயிப்பதில் எவரிடமிருந்தும் எந்த அளவிற்கும் எக்காரணத்திற்காகவும் எந்தவிதமான கட்டுப்பாட்டிற்கும் அடங்கினவர்களல்லர். தற்கால மக்களாட்சிப் பாராளுமன்றங்கள் நிர்ணயிக்கும் வருவாய்-செலவினை ஏற்பாடு நியாயப்படி நிர்ணயிக்கப் படுகின்றனவா? ஆளுவோர் நன்மைக்காகவின்றி ஆளப்பட்டோர் நன்மைக்காக நிர்ணயிக்கப்படுகின்றனவா? அவ்வாறு நிர்ணயிக்கப்பட்ட வருவாய் பெறப்பட்டதும் எந்தெந்தச் செலவினங்களுக்காக அவை ஒதுக்கப்பட்டனவோ அந்தந்தச் செலவினங்களுக்காகவே அவை செல

வாகின்றனவா? என்று கண்காணிக்கவும் தற்காலக் கணக்கர்களுக்கு அதிகாரமும் உரிமையும் உண்டு. ஆனால், இத்தகைய அதிகாரங்கள் பண்டைக்காலக் கணக்கர்களுக்கு இல்லை. ஏனெனில், இன்று ஆட்சியின் ஒழுங்குகளும் நடவடிக்கைகளும் பொதுவாக, மக்களால் ஏற்றுக் கொள்ளத் தக்கவையாயிருக்க வேண்டும். மக்கள் பிரதிநிதிகளால் நிறுவப்பெற்ற சட்டங்களுக்கு உட்பட்டு வருவாயும் செலவும் இருக்க வேண்டுவது இன்றைய மரபு. ஆனால், பண்டைய வரம்பிலா அதிகாரமுள்ள மன்னராட்சி மரபில் சட்டப்படி மன்னர் தான் செய்யும் காரியங்களுக்குப் பிறர் குற்றச்சாட்டுக்கோ குறைக் கூற்றுக்கோ பதில் கூற வேண்டிய நிலையில் இல்லை. அதாவது அத்தகைய மன்னராட்சி பொறுப்பாட்சியன்று. இன்றைய ஆட்சி பொறுப்பாட்சி. பொறுப்பாட்சி ஏற்பாட்டில் கணக்கர் அலுவல்களின் தன்மைக்கும் பொறுப்பில்லாத மன்னராட்சி ஏற்பாட்டில் அத்தகைய அலுவல்களின் தன்மைக்கும் ஏராளமான வேறுபாடு உண்டு. ஆகையால், பண்டைக்கால வரவு செலவுக் கணக்கர்களைத் தற்காலக் கணக்கர் தலைவர் (Auditor–General) களுக்கு ஒப்பிடுதல் தவறான ஆராய்ச்சி முறையாகும்.

அக்காலத்தில் நிலவரி எவ்வளவு வசூலிக்கப்பட்டது? பிற வரிகளின் சுமை எவ்வளவு? ஒரு குடிமகன் தனது மொத்த வருவாயின் எவ்வளவு பகுதியை இறைக்குத் திறைப்பணமாகக் கொடுக்க வேண்டும்? என்னும் வினாக்களுக்குச் சரியான விடை காண்பது அரிது. குடிமகன் மன்னனுக்கு இருக்க வேண்டிய வரி ஆறில் ஒன்று என்பது ஒரு பொதுவான கருத்து. இப்பகுதி எதன் பகுதி? அதாவது ஒரு நிலச்சுவான்தாருக்கு அவனது நிலத்திலிருந்து விளைந்து வரும் மொத்த வருவாயில் ஆறில் ஒரு பங்கா? அன்றி பிற மூலங்களிலிருந்தும் அவனுக்குக் கிடைக்கும் வருவாய்களையும் நிலவரும்படியோடு சேர்த்து அந்த மொத்தத்தில் ஆறில் ஒரு பங்கா? என்று உறுதியாகக் கூறுவதற்கான சான்றுகள் நமக்குக் கிடைக்கவில்லை. திருவள்ளுவர் 'தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தானென்று ஆங்கு, ஐம்புலத்தாறு ஓம்பல் தலை,[1] என்று கூறியவிடத்து அதற்குப் பொருள்கூற வந்த பரிமேலழகர் "அரசனுக்கு இறைப்பொருள் ஆறில் ஒன்றாயிற்று. இவ்வைம்புலத்திற்கும்" (அதாவது தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்னும் ஐந்திற்கும்.) "ஐந்து கூறு வேண்டுதலான் என்பது அறிக"[2] என்று கூறினர். இது நூலாசிரியர் (அவர் காலத்தில் நடைமுறையில்

குறள் : 43. குறள்—43 பரிமேலழகர் உரை.

இருந்த மரபை யொட்டிக் கூறிய) கருத்தா? அன்றி உரையாசிரியர் (தம் காலத்தில் தாம் கண்ட மரபை யொட்டிக் கூறிய) கருத்தா? என்னும் ஐயப்பாடு ஒருபுற மிருக்க, இக்கருத்து உண்மையாயின், மொத்த வருவாயில் ஆறில் ஒரு பங்கு என்றே தோன்றுகிறது. ஆனால், இவ் ஆறில் ஒரு பங்கு என்னும் ஏற்பாடு மனு முதலிய சாத்திரங்கள் விதித்தது. கௌடில்யத்திலும் காணப்படுகிறது. ஆனால், அவர்கள் கூறும் முறைப்படி ஆறில் ஒன்று நிலவருவாயில் ஆறில் ஒரு பங்கு என்றே காண்கிறது. பிற்காலத்தில் இது பிறழ உணரப்பட்டு மொத்த வருவாயில் ஆறில் ஒரு பங்கு என்னும் எண்ணம் பிறந்திருக்கக் கூடும். நிலவரி மட்டுமல்லாமல் மொத்தத்தில் ஆறில் ஒரு பங்கு வரிபெற்று எந்த ஆட்சியும் நடத்துவது இயலாது. பண்டைக் கால ஆட்சியில் அரசின் முயற்சியாலேயே எல்லா நன்மைகளும் மக்களுக்கு எய்த வேண்டும் என்னும் கோட்பாடு பிறக்கவில்லை. ஆதலால், அரசு நாட்டையும் அதன் தருமத்தையும் மட்டும் அவற்றை வெல்லவோ கெடுக்கவோ முயல்வாரிடமிருந்து காக்க வேண்டும், அஃதன்றிப் பிற ஆட்சி முயற்சிகளில் ஈடுபட வேண்டாம் என்று கருதப் பட்டமை இயற்கையே. இன்றைக்கு அரசுகள் செய்யும் மிகப் பரவலும் மிகுதியுமான அலுவல் சட்ட மியற்றுதல் என்பது. அவ்வலுவல் பண்டைக்கால அரசுகட்கு இல்லையாதலால், அவர்களுடைய செலவினங்களும் குறைவாகவே இருக்கும். அத்தகைய செலவினங்களுக்கு அவ்வளவு வரிப்பணமே போதுமாக இருந்திருக்கலாம்.

மௌரியர் ஆட்சி முறையில் நமது வரலாற்றிலேயே முதன் முதலாகச் சில அரசியல் நிலையங்களைப்பற்றிக் கேள்வியுறுகிறோம். மக்கள் தொகைக் கணிப்பு என்பதைச் சென்ற ஒன்று இரண்டு நூற்றாண்டுகளில்தான் உலகில் எல்லா நாட்டு அரசாங்கங்களும் மேற்கொண்டுள்ளன. இந்தியா முழுவதற்கும் (அதை ஒரே நாடாகக் கருதி) மக்கள் தொகைக் கணிப்பு முதன் முதல் மேற்கொள்ளப்பட்டது 1861-ல் அதாவது இந்தியக் கலகத்திற்குப் பின், அதற்குப் பிறகு ஒவ்வொரு பத்தாண்டிற்கும் ஒரு முறை இத்தகைய கணிப்பு ஒன்று நடந்து வந்துள்ளது. மக்கள் தொகையல்லாமல் சாகுபடி நிலங்கள், வீட்டு விலங்கினங்கள் முதலியவற்றைப் பற்றிய கணிப்புகளும் செய்வதுண்டு. கி. பி. 1081-ல் இங்கிலாந்தில் ஆண்ட I-ம் வில்லியம் அந்நாடு முழுவதற்குமான அத்தகைய கணிப்பு ஒன்றை நடத்த உத்திரவிட்டார். அதனால் எடுக்கப்பெற்ற கணிப்பு 'டூம்ஸ்டே ஸர்வே' (Domesday Survey) என்று பெயர் பெறும். அக்கணிப்பின் விவரங்கள் குறித்துள்ள புத்தகங்கள்

இன்றும் அந்நாட்டில் காப்பாற்றி வைக்கப்பட்டுள்ளன. அதே ஆண்டில், தமிழ் நாட்டில் ஆண்ட I-ம் குலோத்துங்கர் ஏறத்தாழ அதே போன்ற ஒரு கணிப்பு நடத்தினர். ஆனால், அதைப் பற்றிய விவரங்கள் நமக்கொன்றும் கிடைக்கவில்லை. மக்கள் தொகைக் கணிப்பு பண்டைய ரோமானியர் அறிந்தது ஒன்றேயாம். கி. மு. ஆரும் நூற்றாண்டில் ஸர்வியஸ் டல்லியஸ் என்னும் மன்னர் ஆட்சிக் காலத்தில் இத்தகைய கணிப்புத் தொடங்கிற்று. கி. மு. முதல் நூற்றாண்டில் ஜூலியஸ் சீசர் முறைப்படி ஒரு மக்கள் தொகைக் கணிப்பு நடத்தினர்.

மௌரியர் ஆட்சியில் மக்கள் தொகைக் கணக்கு எடுக்கப் பெற்றது. அரசியல், பொருளாதாரக் காரணங்களுக்காக இக்கணக்கு எடுக்கப்பட்டது. உள்நாட்டு வெளிநாட்டு, மக்கள் இடப் பெயர்ச்சியைக் கட்டுப்படுத்தவும், பேரரசின் எதிர்காலம் படை பலத்தை நிர்ணயிக்கவும், நாட்டின் செல்வாதார நிலைமையைத் தெரிந்துகொண்டு வரி விதிப்புக் கொள்கைகளைச் சரிவரக் கடைப்பிடிக்கவும் இக் கணிப்பு முறை மேற்கொள்ளப்பட்டது, கிராம அதிகாரிகள் மக்கள் தொகையைக் கணக்கெடுத்தனர்; மக்களுக்கு அவர்களுடைய சாதி, தொழில் என்பவற்றின் அடிப்படையில் எண்கள் தரப்பட்டன. அடிமைகள், சுதந்திர மக்கள், இளையர், மூத்தோர், ஆடவர், மகளிர் முதலியோரை அவ்வத் தலைப்புக்களில் கணக்கெடுத்து அவர்களுடைய இயல்பு, வருவாய், செலவு என்பவை குறிக்கப் பெற்றன. அவர்கள் ஒவ்வொரு வீட்டிலும் வளர்க்கப்பட்ட விலங்கினங்களின் கணக்கையும் எடுத்தனர். நகர ஆட்சி அலுவலர்கள் நகர்களில் வந்து உறையும் வெளியார்களின் தொகையைக் கணக்கிட்டனர். இதற்காகச் சத்திரங்களிலும், பரதேசிகளை உண்டியளித்துப் போற்றிய வீடுகளிலும் விசாரணை செய்து கணக்கெடுத்தனர். இங்ஙனம் கிராம அதிகாரிகளும் நகர ஆட்சி அலுவலரும் நடத்திய கணிப்பை மேலதிகாரிகள் சரி பார்த்தனர்; இக் கணக்கு விவரங்களை ஒற்றர்கள் ஒற்றிச் சேகரித்துத் தந்த விவரங்களோடு ஒப்புப் பார்த்து முடிவு கட்டினர். மக்களைப் பற்றியும், விலங்குகளைப்பற்றியும் கணக்கெடுப்பு ஆண்டு முழுவதும் எப்பொழுதுமே நடைபெற்றது. அது ஒரு நிரந்தர அரசியல் நிலையமாக விளங்கிற்று. தற்காலத்தில் பெரும்பாலும் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு பத்தாண்டுகளுக்கு ஒரு முறை தான் மேற்கொள்ளப்படுகின்றது.

படை. மௌரியர் ஆட்சி படை பலத்தால் நிறுவப் பெற்றது. அவ்வாறு அது நிறுவப்படவில்லையாயினும், பிற எந்த

ஆட்சியைப் போல படை பலத்தைக் கொண்டே நிலைத்து நிற்க வேண்டிய அவசியம் அதற்கும் இருந்திருக்கும். உலகில் எக் காலத்திலும் எந்நாடும் முடிவில் தனது படை பலம் ஒன்றை நம்பித்தான் வாழ முடியும். பிற நாடுகள் தங்கள் பலத்தை முற்றிலும் உணராத காரணத்தாலோ அன்றிப் படை பலத்தால் சாதித்துக்கொள்வதை வேறு சுலபமான வகையில் சாதித்துக் கொள்ள முடியும் என்று நினைப்பதாலோ போரைத் தவிர்க்க முடியலாம். ஆனால் வேறு வழியில்லாவிடில் இறுதியில் எந்த ஒரு நாடும் சுதந்திரமாக வாழ முடியுமா? அன்றி, பிறருக்கு அடங்கி யிருத்தல் தேவையா? என்னும் வினாக்களுக்கு விடை கூறக் கூடியது படை பலம் ஒன்றுதான். பன்னாட்டு உறவு இக்காலத்தில் சட்ட வழியில் சர்வதேச உடன்பாடுகள், ஒப்பந்தங்கள் முதலி யவற்றின் வாயிலாக ஓரளவு போரைத் தவிர்க்கக் கூடிய சூழ் நிலையை உருவாக்கியுள்ளது. ஆனால், பண்டைக் காலத்தில் போர் ஒன்றே நாடுகளிடையே உள்ள பிரச்சினைகளைத் தீர்க்கும் மருந்தாக இருந்தது. அன்றியும், அக்காலத்தில் நாடுகளிடையே எழுந்த பிரச்சினைகள் தற்காலத்தில் போலல்லாமல், எக்காரணத் தாலோ ஒரு நாட்டு மன்னர் இன்னொரு நாட்டின் மீது ஆக்கிர மிப்புச் செய்யத் தீர்மானித்து விட்டால் எழும் நிலை ஒன்றாகவே யிருந்தது. இதற்கு ஒரு நிமித்தமாகவே அண்டை நாட்டு ஆநி ரைகளைக் கவர்ந்து வந்து அந்நாட்டு மன்னரைச் சினமூட்டிப் போருக்கிழுத்தல் என்பது ஒரு மரபாயிற்று. இதனையே மகா பாரதத்தில் துரியோதனாதியர் விராட நகரத்து ஆநிரைகளைக் கவர்ந்து சென்றமையும், அருச்சுனன் அவற்றை மீட்டமையும் போர் நிகழ்ச்சிகளாகக் குறிப்பிட்டனர். தமிழ் இலக்கியத்தில் நிரை கவர்தலைப் பற்றி விரிவாகக் குறிப்பிடுகின்றனர். இதற்கு வெட்சி என்பது பெயர். நிரை மீட்டலைக் கரந்தை என்றும் குறிப்பர். போரைத் துவக்குவதற்கு இது ஒரு வழி. மற்றொரு வழி, பிற நாடுகளை வெல்லக் கருதும் மன்னன் தன் நாட்டிலி ருந்து பெருத்த காவல் பலத்தோடு ஒரு குதிரையைத் தான் வெல்ல விரும்பிய நாடுகள் வழியே விரட்டுவது. இக்குதிரை அடக்குவாரின்றி அது புறப்பட்ட நாட்டின் தலை நகருக்கே திரும்பிவிட்டால் அக்குதிரை சென்ற நாடெல்லாம் அக் குதி ரைக்கு உரிய மன்னனது உடைமையாகிவிடும் என்பது கருத்து. பிறகு அக்குதிரையை வைத்து ஒரு வேள்வி நடத்தப்பெறும். அதனையே அசுவமேத யாகம் அல்லது பரி வேள்வி என்பர். இதை வெற்றிகரமாக நடத்திய மன்னன் பேரரசுப் பட்டத்திற்கு உரியவன். இத்தகைய கருத்துக்களும் அவற்றால் உந்தப் பெற்ற செயற்பாடுகளும் மிகுந்த பண்டைய இந்தியாவில் ஓய்ச்சல் ஒழிவின்றிச் சண்டைகள் நிகழ்ந்து வந்ததில் வியப்பில்லை

அன்றியும், எக்காரணத்திற்காக வேனும் போரிடுதலும், பிறர் நாட்டை வவ்வுதலும் மன்னர் பெருமையோடு ஈடுபடற்குரிய செய்கைகள் என்று கருதப்பட்டதும் நோக்கற்பாலது. பிறர் மண் வவ்வும் செம்மல் என்றமையும் மன்னனுக்கு, 'பூபுக்' என்னும் பெயர் உண்மையும் காண்க. போரில் இறந்தோர் வீர சுவர்க்கம் அல்லது துறக்கம் எய்துவர் என்னும் நம்பிக்கையும் நிலவி வந்தது. போர்க்களத்தே பகைவனது அம்பு தனது மார்பில் தைத்த காரணத்தால், பகைவனை நோக்கியவாறே உயிர் நீத்தவனது பெருமை இலக்கியத்தில் பேசப்படுகின்றது. இக்காரணத்தாலும் இது போன்ற பிற காரணங்களாலும் போர் பல்கிற்று.

பொதுவாகப் பண்டைய காலத்து நிலை இதுவாயினும் மௌரியர் ஆட்சியே போர்முயற்சியால் ஏற்பட்டதாதலின், சந்திர குப்தரும் அவரது சந்ததியார்களும் படையைப் பெருக்கிப் பல நாடுகளை வென்று அடக்கி அரசோச்சியமையில் வியப்பில்லை. நந்தர்களை வீழ்த்துவதற்குச் சந்திரகுப்தன் படையைப் பயன் படுத்தியதிலிருந்து கலிங்கத்தை அசோகன் வென்றமை வரை மௌரியப் படை எங்ஙனம் இயங்கிவந்தது என்பது அப்படை கலிங்கத்தில் நடந்து கொண்டவிதத்திலிருந்து நாம் அறியலாம்.

மௌரியர் படை வரன் முறையாக வந்த எந்த எந்த இந்தியப் படையையும் போல நான்கு உறுப்புக்கள் (அங்கங்கள்) கொண்டது. அவற்றை அக்காரணத்தால் 'சதுரங்க சேனை' (அதாவது 'நான்கு உறுப்புக்களைக் கொண்ட படை') என்பர் வட நூலார். அவை ரதம் (தேர்), கஜம் (யானை), துரகம் (பரி), பதாதி (காலாள்) என்பன. இவற்றில் தேர் குதிரை கட்டியது. ஆரியர் தொடக்க காலத்தே குதிரை கட்டிய தேரை அறிந்திருந்தன ராதலின் அவர்கள் வட இந்தியாவில் குடி புகுந்த பிறகு அத்தகைய தேர் போர்க்களத்தில் மிகவும் பயன்படுத்தப் படலாயிற்று. யானை ஆப்பிரிக்காவிற்குப் போல் இந்தியாவிற்கும் உரித்தானஒரு விலங்கு. அதன் அஞ்சத்தக்க உருவமும் வலியும் போரில் பயன்படுத்தப்படல் வேண்டும். அவ்வாறு யின் அதிகமாக யானைகளைப் போரில் ஈடுபடுத்துவோர்க்கே வெற்றி கிட்டும் என்று இந்திய மன்னர்களும் சேனைத் தலைவர்களும் கருதினர். குதிரை மிகப் பண்டைக்காலத்தில் இந்தியாவில் காணப்பெற்ற விலங்கு அன்று என்பது அறிஞர் கருத்தாயினும் வேதகாலத்திற்குப் பிறகு அது மிகுதியும் போரிலும் அமைதிக்காலத்திலும் பயன்படலாயிற்று. குதிரையைத் தேரில்

கட்டிப் பயன்படுத்துவதும் குதிரைமீது இவர்ந்து போரிட்ட இவுளி வீரரைப் போரில் ஈடுபடுத்துவதும் என இருவகையில் குதிரைகள் பயன்பட்டன. வலுவிற்குக் கரியும் விரைவிற்குப் பரியும் போரில் சிறந்தன என்று கண்ட பண்டைய இந்தியப் படைகள் பொதுவாக, குதிரைகளைவிட யானைகளையே நம்பின என்று கருத இடமுண்டு. போரஸ் மன்னன் ஹைடாஸ் பஸ்ஸில் அலெக்ஸாந்தரோடு பொருத பொழுது கரிகளை நம்பிப் போரிட்டு அவற்றின் உட்தாக்குதலாலேயே தன் படை சேதப்படுத்தப் பெற்றுப் பகைவர்களின் திறமை மிக்க குதிரைப் படையால் தோற்கடிக்கப் பெற்றமை வரலாறு கண்டது. ஆனால், பிற்காலத் தெழுந்த இந்து மன்னர் படைகள் இந் நிலையினின்றும் தாங்கள் ஒருவகை உண்மையையும் உணர வில்லை; தொடர்ந்து யானைப் படையை நம்பியிருந்தனர். கி.பி. 1565-ல் நடைபெற்ற தலைக் கோட்டைப் போரிலும், அதற் குப் பிறகு நடந்த இரண்டாம் பானிபட் போரிலும் இந்தியா வின் சார்பில் யானைகள் பெரும்பாலும் பயன் படுத்தப் பெற் றமையும் எதிரிகள் பீரங்கிப் படை, குதிரைப் படைகளை அதிக மாக நம்பினர்கள் என்பதும் வரலாறறிந்தது. இவற்றின் முடிவாக, விளைந்த வெற்றி தோல்விகளின் தன்மையும் வெளிப் படை. இந்து மன்னர்கள் தம் முன்னேர்கள் யானைப் படை யையே பெரிதும் நம்பித் தோல்விகள் அடைந்த வரலாற்றினல் யாதொரு பயனையும் பெறவில்லை.

நாற்படை (சதுரங்கம்) சேர்ந்தது மன்னருடைய போர்ப் படை என்னும் கருத்து இந்தியாவிற்கே உரியது. இதை வைத்து அமைக்கப் பெற்ற ஒரு விளையாட்டும் சதுரங்கம் என்று பெயர் பெற்றது. இவ்விளையாட்டையும் அதன் பெய ரையும் ஷட்ரங்க் என்று பாரசீகரும் பிற்காலத்தே மேற்கொண் டனர் என்பதும் கருதத்தக்கது. இந்நிலப் படையோடு, கடற் படையும், போர்ச்சாதனங்களை போர்க் களத்திற்குக் கொண்டு செல்லும் சாதனங்களும் அவற்றை மேற்பார்ப்போரும் என்னும் இரு துறையினரும் சேர்ந்து படையின் பகுதிகள் ஆறங்கங்க ளாயின. படையின் அமைதிக்கால, போர்க்கால அலுவல்களை மேற்பார்க்க ஆறு குழுக்கள் இருந்தன. ஒவ்வொரு குழுவிலும் ஐந்து உறுப்பினர் இருந்தனர். அதாவது ஒவ்வொரு குழுவினை யும் ஒரு பஞ்சாயத்து என்று கூறலாம். ஐவர் அடங்கிய குழுக் களை நாட்டின்(கிராமத்தின்)பொது அலுவல்களைப் பார்ப்பதற்கு நியமிக்கும் மரபு மிகப் பண்டையது என்பது இதினின்றும் விளங்கும். அவ்வுறுப்பினர் எந்தக் கொள்கைப்படி நியமிக்கப் பட்டனர் என்று கூறஇயலாது; ஆனல், ஒவ்வொரு குழுவினரும்

படையின் செயற்பாடுகளில் ஒவ்வொரு துறையைப் பற்றியும் மேற்பார்த்தும் ஆலோசனைகூறியும் வந்தனர் என்று கருதலாம். இப்பகுதிகள் யாவையும் திறமை ஒன்றையே மனத்திற் கொண்டு செம்மையாக அமைக்கப் பெற்றமையால் அவை நல்ல முறையில் செயற் பட்டன என்றும் கருதலாம். குழு உறுப்பினர் கட்கும், படைத் தொழிலாளர்கட்கும்; சேனைத் தலைவர் முதலிய உயர் அதிகாரிகட்கும் அரசு போதிய சம்பளம் கொடுத்து மன அமைதியோடு அவர்கள் தங்கள் அலுவல்களை மேற்கொள்ளும் சூழ்நிலையை ஆக்கிக் கொடுத்தனர்.

கோட்டைகள் கட்டுவதிலும் அவற்றைச் சுற்றி இயற்கை செயற்கையாகிய அரண்களை அமைப்பதிலும், அரண்களைச் சுற்றி அகழிகள் வெட்டிப் பகைவர்கள் எளிதில் கோட்டையை அடையாமல் தடுப்பதிலும், கோட்டைமதில்கள் மீது பகைவர் களை அழிப்பதற்காகப் பொறிகளை அமைப்பதிலும் மகதத்து வீரர்கள் வல்லுநராயிருந்தனர். கடற்படை (கரையையொட் டிச் செல்லும் ஆயுதம் தாங்கிய படகுகள்) ஒன்று இருந்ததா யினும் கடற்போர்கள் நிகழ்ந்தமையைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் கிடையா.

பொதுவாகப் போரில் சில நாகரிக விதிகளை அவர்கள் வகுத்துக் கொண்டனர். போரில் காயம் பட்டவர்களையும், படையிழந்தவர்களையும் கொல்வதில்லை. இவ்விதிகள் எவ்வளவு தூரம் உண்மையில் அனுசரிக்கப் பட்டன என்று கூறுவதற்கு போதிய வரலாற்றுச் சான்றுகள் இல்லை. ஆயினும், கலிங் கத்தில் அசோகர் இட்ட போரையும், கி.பி. முதல் இரண்டு நூற்றூண்டுக் கால அளவில் தமிழகத்தில் இடப்பட்ட போர் களைப் பற்றிப் புறநானூறு, பதிற்றுப் பத்து ஆகிய நூல்கள் கூறும் போர் முறைகளையும் காண்போர்க்கு அவர்கள் வகுத் துக் கொண்ட விதிகளுக்கும் அவர்களுடைய போர்களின் நடத் தைக்கும் அகன்ற வேறுபாடு இருந்தமை புலப்படும். ஏறத் தாழ எப்போதுமே நாட்டில் பெரும்பாலும், எல்லா இடங்களி லும் போர்கள் நிகழ்ந்து வந்தமையாலும், அக்காரணத்தால் விவசாயமோ, கைத் தொழில்களோ, வியாபாரமோ, மற்ற மக்களுடைய நடமாட்டங்களோ எந்த விதத்திலும் பாதிக்கப் பட்டதாகத் தெரியவில்லை யாதலாலும் அப் போர்களால் சமூ கத்தின் அமைதிக்காலநிகழ்ச்சிகள் என்றும் அதிகமாகப் பாதிக் கப் படவில்லை என்று கொள்ளலாம். க்ஷத்திரியர் என்னும் போரிடும் கூட்டத்தினரும், வைசியர், வேளாளர் என்னும் மற்றவர்களும் தத்தம் காரியங்களைச் செய்து வந்தமையால்

அல்லது செய்து வரும் உரிமையுடையரா யிருந்தமையால் இந்த நிலைமை ஏற்பட்டது என்று கருதலாம். அன்றியும், நாட்டின் செல்வாதாரம், பொருளாதாரம் ஆகியவற்றைப் பாதிக்கும் வகையில் போர் நிகழாமல் இயன்றவரை பார்த்துக் கொண்டனர் போலும். நகர, நாட்டு மக்களையும் உழவர்களையும் எந்த விதத்திலும் அவர்கள் பாதிக்க வில்லை. ஆனால்; அரசுகளிடையே நிலவிய உறவு அர்த்த சாத்திரத்தில் கௌடில்யர் வற்புறுத்தியுள்ள முடிவுகளைப் பின்பற்றிற்று. பகைவர்களது அழிவை எவ்வாறாயினும் சாதித்துக் கொள்வது என்பதே முறையாயிருந்தது. கூடயுத்தம் அல்லது 'துரோகப் போர்' (நேர்மையல்லாத வழிகளைப் பின்பற்றி யிடப்படும் போர்) பயிற்சியிலிருந்ததாதலின், எப்போதும் அறப்போரே பயிலப்பட்டது எனல் பொருந்தாது.

சட்டம், நீதி :—குற்றங்களுக்கு மிகு தண்டம் அளிக்கப் பட்டமை மௌரியர் நீதி ஆட்சியின் இயல்புகளில் ஒன்று. கொலை, தொழிலாளியைத் துன்புறுத்துதல், நீர்த் தேக்கங்களைச் சிதைத்தல், நாற்பது பணம் அல்லது முப்பது ரூபாய்க்கு மேல் உள்ள தொகையைத் திருடுதல் முதலிய குற்றங்களைத் தலையாய குற்றங்களாகக் கருதினர். இக்குற்றங்களைச் செய்தார் சிர நீக்கம் செய்யப் பெற்றனர். இவற்றிலும் எளிய குற்றங்களுக்கு அபராதம், சவுக்கடி, உறுப்புக்குறைத்தல் முதலிய தண்டனைகள் அளிக்கப்பட்டன. ஆதலால், குற்றச் சட்டம் மௌரியர் ஆட்சியில் மிகவும் கடுமையாக இருந்தது; கொடியதாக இருந்தது என்றும் கூறலாம். சிலர் 19-ம் நூற்றாண்டின் தொடக்க காலத்திற்கூட இங்கிலாந்தில் குற்றச் சட்டம் மிகவும் கொடியதாயிருந்தது என்பதை இந்நிலையில் எடுத்துக்காட்டுவர். அவர் கூற்று உண்மையே யாயினும் 19-ம் நூற்றாண்டு இங்கிலாந்தில் குற்றச்சட்டம் கடுமையாயிருந்த காரணத்தால், கி.மு. 3-ம் நூற்றாண்டில் மௌரியர் ஆட்சியில் நடைபெற்ற குற்றச்சட்டத்தின் தன்மை மாறிவிடும் என்று இவர்கள் கருதுகின்றனரா என்பது விளங்கவில்லை. உண்மையில் மௌரியர் குற்றச்சட்டத்தை கி. மு. 5, 4-ம் நூற்றாண்டில் மகதத்தில் பேரரசு குப்தர் நடத்தி வந்த ஆட்சி முறையோடு ஒப்பிடுவதே நேரிதாகும். அப்படி ஒப்பிடும் போது பேரரசு குப்தர்கள் மௌரியர்களைவிட எவ்வளவோ மடங்கு நாகரிக அரசியலை நடத்தி வந்தனர் என்பதும் அதோடு ஒப்பிடும் போது மௌரியர் குற்றச்சட்ட ஆட்சிமுறை கொடூரமானது என்பதும் போதரும்.

## மௌரியர் ஆட்சியில் நாடும் அதன் பிரிவினைகளும்

சந்திரகுப்தர் ஆட்சியில் அவரது பேரரசு நான்கு மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. (1) மகதம் அல்லது கீழை நாடு): மத்ய தேசம்; பாடலிபுத்ரம்; இங்கு இருந்து பேரரசர் இப்பிரதேசங்களை நேரடியாக ஆண்டார். (2) வடமேற்கு மாகாணம்: தக்கசீலம்; (3) மேற்கு மாகாணம் அல்லது மாளவம்: உஜ்ஜயினி; (4) குஜராத்: கத்தியவார் இந்நாட்டிலிருந்து புஷ்ய குப்தர் என்னும் அரசப் பிரதிநிதி ஆண்டார். மாகாண ஆட்சித் தலைவர்களாக அநேகமாக அரச குடும்பத்தினரே நியமிக்கப்பட்டனர்.

பாடலிபுத்ர நகரம் இவ்வாறு ஆளப்பெற்றது, நகராட்சி அமைப்பு இப்படி யிருந்தது என்பதைப்பற்றி மெகஸ்தனிஸ் குறிப்பிடுகிறார். பாடலிபுத்ர நகர ஆட்சியை மேற்பார்க்க ஆறு நகராட்சிக் குழுக்கள் இருந்தன. அவை முறையே (1) கைத் தொழில்கள்; (2) வெளியார், பரதேசிகள், (3) மக்கள் தொகை கணக்கெடுப்பு; (4) வியாபாரம், (5) பயன்படு பொருள்கள் உற்பத்தியும் அவற்றை விற்பனை செய்தலும்; (6) விற்பனை வரிகளை விதித்து, வசூலித்தல். இருந்த, இறந்த ஆகிய இருவகை வெளியார்களைப் பற்றிய அவ்வாட்சியாளர் அக்கறை கொண்டு கணக்கு வைத்தமையும் வெளி நாட்டிலிருந்து வந்திருந்தவர்களுடைய வசதிகளை மேற்பார்த்தமையும் நோக்கற்பால. நகரத் தலைவருக்கு 'நகரகர்' என்பது பெயராயிற்று; அவருக்கு, மேற்கூறிய அலுவல்களைக் கவனிக்க வேண்டி யிருந்தமையால், அளவிறந்த வேலை இருந்திருக்க வேண்டும். ஆகையால், இவ் வலுவல்களை அவர் ஆற்றுவதில் உதவுவதற்குப் பல கீழ்நிலை அதிகாரிகள் இருந்தனர்.

இவ்வாறு நகரகராட்சியைப்பற்றிய பல குறிப்புக்கள் மெகஸ் தனிஸ் எழுதிவைத்துள்ள இண்டிகாவிலிருந்து நமக்குக் கிடைக்கின்றன. இவ்விவரங்கள் கௌடில்யரது அர்த்த சாத்திரத்தில் குறிக்கப்படவில்லை. மெகஸ்தனிஸ், அர்த்தசாத்திரம் என்னும் இரு ஆதாரச் சான்றுகளில் இவ்வொரு வேறுபாடு தோன்றுவதாலேயே அவை வெவ்வேறு காலத்தவை என்றுகூறி விடலாகாது என்று சில வரலாற்றாசிரியர்கள்கூறுவர். கௌடில்யரும் பஞ்சாயத்து ஆட்சிமுறையை அறிந்தவரே. மெகஸ் தனிஸ் விவரித்திருப்பதும் அவ்வகை ஆட்சி முறையினின்றும் வேறானதன்று. ஆதலால், அவ்விருவரும் ஒரு காலத்தவராகவே இருந்திருக்கலாம் என்கின்றனர். ஆனால் இக்காரணத்திற்காக

அவர்களை வேறு காலத்தவர் என்று கூறுவதில்லை. அர்த்த சாத்திரத்தில் எடுத்தாளப் பட்டுள்ள பல சொற்களும்; அந் நூலாசிரியர் கூறும் பல கருத்துக்களும் கி.மு. 3–ம் நூற்றுண்டிற்குப் பிறகு நடைமுறைக்கு வந்தவை யாதலால், அந் நூல் அக்காலத்ததாக இருக்க முடியாது என்பதே அக்கூற்றிற்கு ஆதாரம். இவ்வாதாரங்களைப் பேராசிரியர் ஏ. எல். பாஷம் அவர்கள் செவ்வனே எடுத்துக் கூறியுள்ளனர்.[1]

நகர ஆட்சி மேற்கூறிய முறையில் அமைந்ததாக, கிராம ஆட்சி கிராமத் தலைவர்களான கிராமணிகளால் நடத்தப் பெற்றது. அவர்களுக்கு ஆட்சியில் உதவுவதற்குப் பஞ்சாயத்தார் இருந்தனர். அவர்களுடைய மேலதிகாரிகள் 'கோபர்' எனப்படுவர். அவர்கள் அதிகாரத்தின் கீழ் 5 முதல் 10 வரை கிராமங்களின் ஆட்சி அமைந்தது. ஸ்தானிகர் என்பவர் இதனினும் பரந்த பிரதேசத்தின் ஆட்சியாளராக இருந்தார். இவர்கள் யாவருக்கும் மேல் மாவட்ட அலுவலரும் மாகாணத் தலைவர்களும் 'அதாவது பிரதேசிகர்களும், ராஜுகர்களும் அலுவல் பார்த்தனர். ராஜுகர்கள் மகாமாத்ரர் தகுதியுடையவர்கள்.

மாத்ரர் என்பவர்கள் மந்திரி நிலையிலிருப்பவர்கள். மகா மாத்ரர் தலைமை அமைச்சர் நிலையினர்: அத்தகைய அமைச்சர்களுடைய ஊதியத்தைப் பெற்றுக்கொண்டு அவர்களுடைய அதிகாரத்திற்குச் சமமான அதிகாரத்தை நிர்வகித்துக் கொண்டிருந்தவர்களே மகாமாத்ரர் எனப்பட்டனர் என்று கூறலாம். தலைநகரிலிருந்து மிகத் தொலைவிலிருந்த மாகாணங்களை ஆளத் தகுதியான ஆட்களை நியமிப்பதில் பேரரசர்கள் மிகுதியான அக்கறை காட்டினுர்கள். முற்றிலும் நம்பக் கூடிய ஆட்களை அங்ஙனம் நியமிக்கப்பட்டால் அரசின் அதிகாரத்தை எதிர்த்துக் கலகங்கள் நேரிடக்கூடும். எப்பொழுது அரசன் பலவீனமாகின்றுன், எப்பொழுது தாங்கள் தங்கள் மாகாணத்தின் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்தலாம் என்று தக்க தருணத்தை எதிர் நோக்கியிருப்பது மிகத் தொலைவிலிருந்த மேலதிகாரிகளின் சாதாரண இயல்பு. இந் நிலையில் அவ்வளவு தொலைவில் அலுவல் பார்த்த அரசப் பிரதிநிதிகளும் பேரதிகாரிகளும் முற்றிலும் நம்பத்தக்கவர்களாகவே இருக்கவேண்டும் என்று அரசர்கள் விரும்பியதில் வியப்பில்லை. ஆதலாலே தான், அசோகனும் தான் இளவரசனுயிருந்த காலத்தில் பாடலி

[1] V. A. Smith, Oxford History of India; P. 96, 97.

புத்ரத்திற்கு அதிக தொலைவிலிருந்த காஷ்மீரத்தில் அரசப் பிரதிநிதியாக வீற்றிருந்தான், அவ்வாறு பேரரசின் தலைநகரிலிருந்து மிகத் தொலைவில் அலுவல் பார்த்த அரசப்பிரதிநிதிகளுக்கு 'அந்த (இறுதியில் உள்ள) மகாமாத்ரர்' என்னும் பெயராயிற்று.

சந்திரகுப்த மௌரியர் காலத்திலும் அவர் மகன் பிந்துசாரர் காலத்திலும் நடை முறையில் இருந்த ஆட்சி முறையே மேலே விவரிக்கப் பெற்றது. இவ்வாட்சி முறையில் சில மாறுதல்களை (அவற்றில் சில மிக முக்கியமானவை) அசோகர் செய்தார். ஆயினும், அடிப்படையிலும் கட்டுக்கோப்பிலும் பொதுத் தன்மையிலும் அவ்வாட்சி முறை அசோகர் காலத்திலும் ஏறத்தாழ மேற் கூறியவாறே அமைந்திருந்தது. அமைதிக்கால ஆட்சிக்கென ஒதுக்கப்பெற்ற சிவில் நிர்வாகத் துறையின் அலுவல்களையும், இராணுவ அதிகாரிகளின் அலுவல்களையும் தனிப்படுத்தி இரு வேறு பிரிவுகளாக்கி ஒவ்வொன்றிற்கும் தனிப்பட்ட நிர்வாகக் குழுக்களை ஏற்படுத்தி ஆட்சி புரிந்த பெருமை மௌரியர்களுக்கு உண்டு. இவ்விரு துறைகளையும் கிட்டத் தட்ட ஒன்றுபடுத்தி நிர்வாகத்தில் குழப்பமும் அதன் காரணமாகத் திறமையின்மையும் 16–ம் நூற்றாண்டில் கூட காண முடிந்தது (அக்பர் ஆட்சிக் காலத்தில் அவர் புகுத்திய மன்சப்தாரி நிலையத்தின் வாயிலாக) என்று சிலர் கூறி மௌரியர் ஆட்சி முறையைப் புகழ்ந்து கூறுவர். இது ஓரளவு உண்மையேயாயினும், சிவில் இராணுவத் துறைகளை ஒன்றுக்க முயன்ற தவறு அக்பருடையதேயன்றி அவருக்கு முன் திறமையோடு அரசாண்ட ஷெர்ஷா, அலாவுதீன் கில்ஜி போன்றவர்கள் இந்நிர்வாகக் குற்றத்தைச் செய்யவில்லை என்பதை இந்நிலையில் நினைவு கூர்தல் வேண்டும்.

## ஒற்றர்கள்

மௌரியர் ஆட்சி சந்திரகுப்தர் காலத்தில் சில துறைகளில், உதாரணமாக. மக்கள் தொகைக் கணக்கெடுப்பு, நகராட்சி முறை – தற்கால ஆட்சிக்கு நிகரான நிர்வாகம் ஒன்றை அமைத்திருந்தனர் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டுமாயினும்; பலவேறு கோணங்களிலிருந்து அவ்வாட்சியின் தன்மையை ஆயும் பொழுது பெரிய குறைபாடுகள் பல காணப்படுகின்றன. உதாரணமாக, பேரரசுஅதிகாரிகளேயன்றிப் பொதுவாக மக்களுடைய நடவடிக்கைகளையும் பேச்சு வார்த்தைகளையும் அறிந்து வந்து தமக்குக் கூற வேண்டி ஏராளமான ஒற்றர்

படையை வைத்திருந்தனர். ஒற்றர்களால் பொதுமக்களுடைய சுதந்திரங்களில் பலவற்றுக்கு நாள் தோறும் இடையூறு தோன்றியிருக்குமென்று எளிதில் நம்பலாம். அன்றியும். கௌடில்யர் அர்த்த சாத்திரத்தில் எடுத்தோதியுள்ள 'அற'க் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு ஆட்சி நடத்தியவர்கள் அன்றாட நிர்வாகத்தில் 'செங்கோல்' செலுத்தியிருப்பார்கள் என்று நம்ப மிகுதியும் இடமில்லை என்பது காண வேண்டும். மௌரிய மன்னர்கள் மக்களது வாழ்க்கைப் பிரச்சினைகளில் பெருமளவு குறுக்கிட்டனர் என்பது, மிகக் கொடியதொரு (இரக்கமற்ற) குற்றச் சட்டத்தை நிர்வாகம் செய்தனர் என்பதாலும், ஒற்றர்களை ஏவி மக்கள் தம்முள் என்ன பேசிக் கொண்டனர், என்ன செய்தனர் என்பவற்றை எல்லாம் கூட அம் மன்னர்கள் அறிந்துகொள்ள விழைந்தனர் என்பதாலும் உணரலாம்.

சந்திரகுப்த மௌரியர் புரட்சி வகையில் ஆட்சிக்கு வந்தவராகையால் மக்கள் தம்மை ஆதரிக்கின்றனரா, இல்லையா என்பதையறிய, எளிய நேரடியான வாய்ப்புக்கள் அவருக்கு இல்லை. அன்றியும், இன்று போல் பொதுமக்களது கருத்துக்களை யாவரும் அறிய வெளிப்படையாக எடுத்துரைக்கும் தகுதியும் உரிமையும் உடைய அரசியல்வாதிகளோ பத்திரிகைகளோ, பொது மேடைகளோ இலவாதலின் மக்கள் தனது ஆட்சியைப் பற்றி என்ன நினைக்கிறார்கள், ஏற்றுக்கொள்ளுகிறார்களா, வெறுக்கிறார்களா என்பவற்றை உணர ஒற்றர்களையே ஏவ வேண்டியதாயிற்று. இன்றைய மக்கள் ஆட்சிகளும் ஓரளவு அவ்வாறு செய்கின்றனவாயினும் பொதுமக்கட்குத் தங்கள் கருத்துக்களைப் பொது மேடைகளில் எடுத்துரைக்க வாய்ப்புண்டு. மொத்தத்தில் இன்றைய அரசாங்கங்கள் பண்டைய மௌரிய அரசினை விட மக்கள் நன்மையில் அதிக நாட்டமுடையன என்று உறுதியாகக் கூற இயலாதாயினும், தங்கள் உரிமைகள் பறிபோகும் காலத்தில் சட்டத்திற்குட்பட்டுக் கூச்சலிடும் உரிமை இன்றைக்கு உள்ளது போல அன்றைக்கு இல்லை என்பதை உணர வேண்டும். இஃதேயன்றி அமைக்கப்பட்ட ஓர் அரசைப் படை பலம் கொண்டு உள்நாட்டுப் புரட்சி செய்து கவிழ்த்து அதன் அதிகாரத்தைப் பறித்துக்கொண்ட ஒருவன் தன் அதிகாரத்தையும் அவ்வாறே பிறர், தன்னினும் அதிக படை பலம் கொண்டு (கௌடில்யனினும் மிக்க சூழ்ச்சித் திறன் கொண்டான் துணை கொண்டு) இன்னுமொரு புரட்சி செய்து ஆட்சிப் பீடத்திற்கு வரக் கூடும் என்னும் அச்சத்தால் உந்தப் பெற்று 'ஒற்றராட்சி'யில் ஈடுபட்டு மக்களை ஓர

ளவு வன்மையாகவே அடக்கி ஆள முற்பட்டதில் வியப்பில்லை. இந்த நிலையில் ஒன்று மன்னன் கொடுங்கோலனாகி மக்களை அடக்கி ஆள வேண்டும் அல்லது மக்கள் திரண்டு மன்னனை ஆட்சி நீக்கம் செய்ய வேண்டும். இவ்விரண்டில் எது நிகழ்கிறது என்பது அவ்வவர்களுடைய அவ்வக்காலப் படை பலத்தைப் பொறுத்திருக்கும் என்னும் அரசியல் உண்மைகள் வெளிப்படும்.

## வெளி நாட்டு உறவுகள்

மௌரிய மன்னர்கள் காலத்தில் மகதத்திற்கும் வெளி நாடுகளுக்குமிடையே அரசியல் ராஜதந்திர உறவுகள் இருந்தன என்பதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. டரயஸ் மன்னன் காலத்தில் பாரசீகம், வடமேற்கு இந்தியா மீது படையெடுத்தமையே நாம் அறிந்த வரையில் வெளி நாட்டார் இந் நாட்டின் மீது முதன் முதல் நிகழ்த்திய இராணுவ நடவடிக்கையாகும். அதன் பிறகு இந்தியப் போர் வீரர்கள் பாரசீகப் படையில் காணப் பட்டமை நூல்களில் அறியக் கிடக்கின்றது. அலெக்ஸாந்தர் படையெடுப்புக்குப் பிறகு வெளி அரசுகளுக்கும் இந்திய அரசுகளுக்கும் இடையே தொடர்பு மிகுகின்றது. அலெக்ஸாந்தர் படையெடுப்பின் போது தக்ஷசீல மன்னரான அம்பீஸ் என்பவர் படையெடுத்த மன்னரோடு நட்புறவு பூண்டமை ஒரு வகை வெளி நாட்டுறவாகும். அப்படையெடுப்பை எதிர்த்துப் போர் புரிய போரஸ் தீர்மானித்தது மற்றொரு வகை வெளிநாட்டுறவாம். கிரேக்க வரலாறுகள் கூறுவது போல அலெக்ஸாந்தர் ஹைடாஸ்பஸ் போரை வென்ற பின் சந்திரகுப்த மௌரியர் அவ் வெற்றி வீரரையணுகி மகதத்தில் நந்தரை வீழ்த்தித் தமக்கு அரசு கிட்டுவதற்கு உதவ வேண்டும் என்று வேண்டியிருப்பாராயின் அது இன்னுமொரு வகை வெளிநாட்டு உறவாகும். இவ்வுறவுகள் யாவையும் ஓரளவு கௌடில்யர் விதித்த அரசியல், ராஜதந்திர பாரம்பரியத்தை ஒட்டியவையாகவே அமைந்துள்ளன. சந்திரகுப்தர் செலூகஸ் நிகேடரை வென்று மகதத்திற்குச் சாதகமான உடன்படிக்கை ஒன்றை ஏற்படுத்திக்கொண்டமை இந்நாட்டிற்கும் வெளி நாட்டு அரசு ஒன்றற்கும் இடையே முதன் முதல் ஏற்பட்ட உடன்படிக்கை என்று கொள்ளலாம். பிந்துசாரர் மன்னராயிருந்த காலத்தில் சிரியா தேசத்து அரசரான ஆண்டியோகஸ் I என்பாரை மகதத்து மன்னர் சொந்த உபயோகத்திற்கு இனிய மதுவும், உலர்ந்த அத்திப் பழங்களும் தமது அவைக்களத்தை அலங்கரிக்க ஒரு கிரேக்க அறிஞரும் தேவை என்று வேண்டி

னர். இவ் வேண்டுகோளை ஓரளவு ஏற்றுக்கொண்ட ஆண்டி யோகஸ் முதலிருவகைப் பொருள்களையும் அனுப்பிவைத்து விட்டு, அறிஞர்களை விற்கும் அரிய மரபு கிரேக்கர்களிடையே இல்லை என்று விடையிறுத்தார். இவ்வாறு மன்னர்களிடையே அரசியல், ராஜ தந்திர உறவுகள் இருந்து வந்தமை காண லாம். அசோகர் ஆட்சிக் காலத்தில் வெளிநாட்டு மன்னர்க ளோடு மிக நெருங்கிய உறவு வேறு விதங்களிலும் தோன்றின. கலிங்கத்துப் போருக்குப் பின் அவர் பௌத்தத்தின் தர்ம விஜ யக் கொள்கைகளைப் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் உறுப் பினராக இருந்தமையால், சிரியா, எகிப்து, மாசிடோனியா, இலங்கை முதலிய நாடுகளுக்கும் தமது சமயத் தூதுவர்களை அனுப்பி அம் மதத்தை அந்த நாடுகளில் பரப்ப ஏற்பாடு செய் தார். அசோகர் காலத்தில் அவ் வெளிநாட்டு உறவு வழக்கத் திற்குச் சற்று மாறுகவே அமைந்தது. பௌத்தத்தைப் பரப்ப வேண்டிய தேவையும் இருந்தமையால், 'தர்ம மகாமாத்ரர்களை நியமித்து அரசியற்கும் மேம்பட்ட நிலைமையும் அதிகாரமும் அவர்களுக்கு அமைத்து நாட்டின் அரசியல் எல்லைகளையும் தாண்டி ராஜ தந்திர மரபுகளுக்கு உட்பட வேண்டிய தேவை யின்றிச் செயற்படும் வசதிகளையும் அளித்துப் பிற நாடுகளோடு சமயம்(அல்லது தருமம்) என்னும் உயர் நிலையில் அசோகர் உறவு பூண்டார். ஆதலால் அரசியல் கணக்குப்படி அசோகர் ஆணைக்கு உட்படாத நாட்டவரும் சமயத் துறையில் அவரது மதத் தூதுவர்களின் போதனைக்குச் செவி சாய்த்தனர். அவர் களைத் தம் நாட்டில் தங்க வசதி செய்து கொடுத்தனர்.

அரசவைக் களங்கள் அரசியல் தூதுவர்களைப் பரி மாறிக் கொள்ளுதல் என்னும் மரபு அக்காலம் தொட்டே இந்தியாவிலும் பிற நாடுகளிலும் நடைமுறையில் இருந்தது. மெகஸ்தனிஸ் என்னும் கிரேக்கதூதர் செலியூகஸ் நிகேடரால் சந்திரகுப்த மௌரியரது அவைக்கு அனுப்பப் பெற்றர். எகிப்து நாட்டு மன்னரான டாலமி II என்பார் டயனீஸியோஸ் என்பவரைப் பாடலிபுத்ரத்திற்குத் தூதுவராக அனுப்பினர். தமிழ் நாட்டில் பாண்டியர் அவைக் களத்திலிருந்து ரோமானி யப் பேரரசரான அகஸ்டஸின் அவைக்குச் சில தூதுவர்கள் இரு முறை சென்றனர் என்னும் விவரம் ரோமானிய வரலாற் ருளர்கள் நூல்களில் நாம் அறிகிறோம். மேலைச் சாளுக்ய மன்னரான II புலிகேசியின் அவைக்குச் சில பாரசீகதூதுவர்கள் வந்து சென்றமையை அஜந்தா ஓவியங்களில் ஒன்று சித்திரிக் கின்றது என்பர் சிலர். இவையெல்லாம் பிற நாடுகளோடு பண்டைக் காலத்தில் மன்னர்கள் கொண்டிருந்த அரசியல் உறவுகளில் சிலவற்றைக் குறிக்கின்றன.

## அசோகர் புகுத்திய ஆட்சித்திருத்தங்கள் :

சந்திர குப்த மௌரியரால் நிறுவப்பெற்ற ஆட்சி முறையை அசோகர் சில அம்சங்களில் மாற்றியமைத்தார். இவற்றை நாம் அசோகரது கல் வெட்டுக்களால் அறிகிறோம். தமது ஆட்சி அமைப்பை, புத்த மதத்தையும் தார்மிகக் கொள்கைகளையும் பரப்புவதற்கு ஒரு கருவியாகப் பயன் படுத்திக் கொண்டார். பாறைக்கல் வெட்டு மூன்றில், பேரரசர் தமது அதிகாரிகள் யாவரையுமே தர்மத்தைப் பரப்ப முயலுமாறு உத்திரவிட்டார். மற்றொரு கல்வெட்டு தர்மத்தைப் பரப்புமாறு அனுப்பப் பெறும் உத்திரவுகளை நேரடியாக ராஜுகர்களுக்கு அனுப்ப வேண்டும் என்கிறது; இந்தராஜுகர்கள் தருமத்தை மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும்; ஒவ்வொருவரும் தத்தம் உறவினர்க்கு விளக்கவேண்டும் என்றும் விதித்தார். இவ்வலுவலை மேற்கொள்ள 256 தனிப்பட்ட அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அவர்களுக்குத் தரும மகாமாத்ரர் என்பது பெயர். அவர்களுக்கு உதவுவதற்காக அடுத்த படியாக, தர்மயுக்தர்கள் என்போர் நியமிக்கப்பட்டனர். இவர்கள் தருமத்தை வலுக்கட்டாயமாகவே நடைமுறைப்படுத்தினர். விலங்குகளுக்குத் துன்பம் செய்பவர்களுக்குத் தண்டனை யளிப்பதும், தருமத்தை வேறு வழிகளில் மீற முயல்வோரை ஒறுப்பதும், அவர்களுடைய அலுவலாகக் கருதினர். மௌரியர் குற்றச்சட்டம் மிகக் கொடூரமானது என்பதை மேலே கண்டோம். அதன் கடுமையைத் தடுப்பதற்காக அசோகர் பல நெறிகளைக் கையாண்டார். வயது மிகுந்தோர், குடும்பப் பொறுப்பு மிக்கோர் எனச் சிலவகை மக்கட்கு அரசு ஓரளவு சலுகை காட்ட வேண்டும் என்று வற்புறுத்தப் பெற்றது.

அசோகர் பேரரசு மிகப் பருத்து இமயத்திலிருந்து மைசூர் வரையிலும் ஆப்கனிஸ்தானத்திலிருந்து வங்காளம் வரையிலும் பரவி யிருந்தது. இவ்வளவு பெரிய அரசை அக் காலக்கணக்குப்படிக்கூட ஓரளவு திறமையோடு ஆளுவது என்பது பெரிய அரசியல் காரியமாக இருந்திராது. அரசியல் ஆட்சி அலுவல்களை அரசப் பிரதிநிதிகள் எப்படி மேற்கொள்ள வேண்டும் என்பதற்கான ஆணைகளை அவ்வப்பொழுது பிறப்பித்துக் கொண்டே இருந்தார். அவர் அரசில் இருவகைக் குடிமக்கள் இருந்தனர். (1) பேரரசின் பழைய பகுதியில் வாழ்ந்து வந்த நாகரிக மடைந்த குடி மக்கள்; (2) அரசின் எல்லைப் பகுதியில் வாழ்ந்த முற்றிலும் நாகரிகயடையாத மக்கள். இவ்விருவர்களையுமே தர்மத்தின் கோட்பாடுகளை நினைவிலிருத்திக்

கொண்டே நிருவாகம் செய்ய வேண்டும் என்பது அசோகரின் கருத்தாயினும், நாகரிகம் குறைந்த எல்லைப்புற மக்களை அச் சுறுத்தி வைப்பதற்கே தனது பெரும்படையைக் கலைக்காமல் வைத்திருந்தார் என்று கருத இடமுண்டு.

தமது குடிமக்களைத் தமது சொந்த மக்களைப் போலவே கருதவும் நடத்தவும் வேண்டும் என்பதும், தாம் அவர்களுடைய தந்தைபோல் கருதப்படவேண்டும் என்பதும் அசோகருடைய அரசியற் கோட்பாடு. இதனை வெளிப் படையாக அவர் தமது கல்வெட்டுக்களில் கூறியுள்ளார். கலிங்கத்து முதற்கல்வெட்டில் நாகரிகம் முற்றாத எல்லைப்புறமக்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, "எல்லா மனிதர்களும் என்னுடைய பிள்ளைகளே. என்னுடைய மக்கள் எல்லா வசதிகளோடும் நன்மைகளோடும் வாழவேண்டும் என்று நான் விரும்புவது போல, எல்லா மனிதர்களும்கூட அவ்வாறே வாழ வேண்டும் என்பது எனது அவா. இந்த உண்மையை எனது பிரதி நிதிகள் மக்களுக்கு அறிவிக்க வேண்டும்" என்று குறிப்பிடுகிருர். கலிங்கத்து இரண்டாம் கல்வெட்டிலும் அவர் "எல்லா மனிதர்களும் எனது மக்களே" என்று குறிக்கிருர். குடிமக்களை ஆளுபவர்கள் தங்களுடைய சொந்த மக்களாகக் கருதுதல் மக்களாட்சிக் கோட்பாட்டிற்கு நேர்மாருனது என்று கூறத் தேவையில்லை. மக்கள் எப்போதுமே தாங்கள் எது நல்லது என்று தெரிந்து கொள்ள முடியாதவர்கள், அவர்களை நல்வழிப் படுத்தச் சிறுர்களைப் பெற்ரேரர்கள் போற்றி வளர்ப்பது போலக் கவனித்துக் கொள்வதற்கு எல்லோரையும்விட எவ் வாருே அதிக அறிவும் திறமையும் படைத்து விட்ட அரசன் ஒருவன் தேவை என்பது பொதுவாக அக்காலத்துக் கொள் கையே யாயினும், அசோகரைப் போல அத்துணை வெளிப் படையாக இதனை எடுத்துக் கூறியவர்கள் பலர் இலர்.

அசோகர் காலத்தில் பேரரசினைப் பல பெரு மாகாணங் களாகப் பிரிக்கும் பழக்கம் மேலும் மேற்கொள்ளப் பட்டது. சந்திரகுப்த மௌரியர் ஆட்சியிலேயே மகதம், தக்ஷசீலம் உஜ்ஜயினி, கிர்னுர் என்னும் அரசப் பிரதிநிதி மண்டலங்கள் அமைக்கப் பெற்றிருந்தன. பிந்துசாரர் தக்காணத்தை வென்ற பின் சுவர்ணகிரி (மாஸ்கி அருகிலுள்ள)யை ஐந்தாவது மண் டலமாக அமைத்தார். கலிங்கத்தை வென்றபின் அசோகர் தோசாலி என்னும் ஆருவது மண்டலத்தை நிறுவினுர். அரசு மிகவும் பரந்திருந்த போதிலும் ஆட்சிப்பொறுப்பும் அரசியல் முடிவுகளை ஆக்கும் உரிமையும் முற்றிலும் பேரரசரிடமே

குவிந்திருந்தன. ஆகவே, மௌரியர் ஆட்சி 'விரிந்த' ஆட்சி அன்று; 'குவிந்த' ஆட்சி எனலாம்.

ஆறும் பாறைக் கல்வெட்டில் அமைச்சர் குழுவைப் பற்றிய குறிப்பு ஒன்று வருகிறது. மூன்றும் பாறைக் கல்வெட்டு ஐந்தாண்டுக் கொருமுறை அதிகாரிகளை இடமாற்றம் செய்யும் ஆட்சிமுறையினைக் குறிக்கின்றது. இவ்வகை இடமாற்றம் அவ்வதிகாரிகள் தர்மத்தைப் பல்வேறிடங்களில் பரப்புவதற்கு வழியாக இருப்பதற்காக மேற்கொள்ளப்பட்டது என்று காண்கிறது. நான்காண்டிற்கு ஒரு முறையும் ஈராண்டிற்கு ஒரு முறையும் கூடச் சில அதிகாரிகள் இடமாற்றம் செய்யப் பெற்றனர். குற்றச் சட்டத்தை நிர்வாகம் செய்யும் முறையில் சில மாற்றங்கள் செய்யப்பட்டன: "குற்றச் சட்டம் நாடு முழுவதும் ஒரே வகையில் நிர்வகிக்கப் படவேண்டு மாதலால், கீழ்க்காணும் ஆட்சி விதிகள் அமைக்கப் பெறுகின்றன: மரண தண்டனையளிக்கப்பட்டு அத்தண்டனை நிறைவேற்றப்படுமுன் சிறையில் அடைபட்டிருக்கும் குற்றவாளிக்குத் தண்டனை நிறைவேற்றத்திற்கு முன் மூன்று நாள் இடையீடு தருதல் வேண்டும். அவ்விடையீட்டுக் காலத்தில், குற்றவாளி என்று தீர்மானிக்கப்பட்டவர்களுடைய உறவினர்கள் தண்டனைக் குரியவர்கள் சார்பில் அத்தண்டனையின் கடுமையைக் குறைக்கவோ அவர்களுக்கு முற்றிலும் மன்னிப்புப் பெறவோ முயற்சிகள் செய்ய வசதி இருக்க வேண்டும். அந்த மூன்று நாட்காலத்தில் குற்றவாளிகளின் நன்மையைக் கருதும் அவர்கள் உறவினர் அக்குற்றவாளிகள் அரசால் அளிக்கப் படும் மரணதண்டனையை ஏற்றுக்கொண்டு இறந்தபின் அவர்களுடைய ஆவி நன்னிலையடைவதற்காக, தான தருமங்கள் செய்யவும், உபவாசம் (உணவின்றி யிருத்தல்) மேற்கொள்ளவும் வசதியளிப்பது எமது நோக்கம். தண்டனை தவறாது அளிக்கப்படும் நிலையிற்கூட உறவினரின் நன் முயற்சியால் அவர்களுடைய ஆவி தூய நிலை பெறுவதால் இவ்வேற்பாடு விரும்பப்படுவதே; அன்றியும் மக்களிடையே தான தருமங்கள் செய்யும் பழக்கமும் உபவாசம் இருக்கும் பழக்கமும் மிகும். அதுவும் நன்றே" என்று புதிய தொரு ஆட்சித்திட்டத்தை வகுத்துள்ளார். மௌரியர் ஆட்சி தொடக்கத்திலிருந்தே சிறையிலிடப்பட்ட குற்றவாளிகளை ஆண்டிற் கொருமுறை சிறைவிடு செய்யும் பழக்கம் இருந்து வந்தது. அசோகர் அதைத் தொடர்ந்து மேற்கொண்டார். இச் சிறைவிடு பெரும்பாலும் அரசரது பிறந்த நாளன்று செய்யப்படும் போலும்.

ஆட்சியின் நிருவாகம் மிகுந்த பயன் அளிப்பதற்கு ஆட்சி அலுவலருடைய திறமையும் தகுதியுமே முக்கியமாகக் கவனிக்கப் பட வேண்டியவை என்பதை மன்னர் உணர்ந்திருந்தார். சுறு சுறுப்பாக ஆட்சி அலுவர்களை மேற்கொள்ள வேண்டியதன் தேவையையும் அரசாங்க வேலைகளைத் தவக்கம் செய்யக் கூடாது என்னும் கொள்கையையும் வற்புறுத்தினர். "நான் எவ்விடத் தில் எந்த நிலையில் இருப்பினும், மக்களுடைய தேவைகளைப் பற்றிய குறிப்புக்களோ விண்ணப்பங்களோ என்னிடம் தரப் படலாம். அவற்றைக் கவனித்து உடனே தேவை, ஆவன செய் வேன்" என்று அவர் குறிப்பிடுகிருர். மன்னரும் ஐந்தாண்டிற் கொரு முறை அரசு முழுவதும் ஆட்சி அலுவல் காரணமாகச் சுற்றி வரும் பழக்கத்தை அசோகர் ஏற்படுத்தினர். வர்த்தன ரான ஹர்ஷர், மொகலாய அவுரங்கசீபு, பிரஷ்ய மன்னர் பிரெ டரிக் என்போர் இவ்வாறு ஆட்சி நிருவாகத்தைப்பற்றிய கருத் துக்கள் கொண்டிருந்தனர் என்பது நினைவு கூரற்பாலது.

பொதுமக்களுக்குப் பயன்படும் முறையில் பல சீர்திருத்தங் களை ஆட்சியிற் செய்த பெருமையும் அசோகருக்கு உண்டு. விலங்குகளுக்கும் எத்தகைய தீங்கும் செய்யக் கூடாது என்று பௌத்தர் கொள்கைப்படி எண்ணிய அப்பேரரசர், வேட்டை யாடி விலங்குகளைக் கோறலையும், உணவுக்காக அவற்றைக் கொல்லுதலையும் நீக்குமாறு மக்களை வற்புறுத்தியதோடு அமை யாது, தாமும் இப் புது மரபுகளை மேற்கொண்டார். கொல்லக் கூடாத விலங்குகள் எனச் சிலவற்றைத் தனிப்படுத்திக் கூறிய தன் காரணம் அவ் விலங்குகளையும் பறவைகளையும் சில இனத்த வர்கள், குடிகள் ஆகியோர் தங்களுடைய மரபுச் சின்னமாக (Jotem)க் கொண்டிருந்தமை காரணமாக இருக்கலாம். பறவை களும் விலங்குகளும் கொல்லப்படாமல் இருந்தால் மட்டும் போதாது; அவற்றைப் போற்றியும் பாதுகாக்க வேண்டும் என்னும் எண்ணத்தோடு, அவற்றிற்கு மருத்துவ நிலையங்க ளுக்குத் தடையின்றி மருந்துகளும் மூலிகைகளும் கிடைக்குமாறு செய்ய, மூலிகைத் தோட்டங்கள் போடப்பட்டன. பொதுவாக, நல்ல சாலைகளை அமைத்தலும், சாலைகளின் இரு புறமும் நிழல் தரு மரங்களை நட்டு வைத்தலும், வழிப்போக்கர்கள் தங்கி இளைப்பாறச் சாவடிகளைக் கட்டி வைத்தலும் அவரது ஆட்சி யின் சில சிறப்பியல்புகள்.

**அடிமை நிலை:** மௌரியர் அவைக்காலத்தில் கிரேக்க தூதராக அமர்ந்திருந்த மெகஸ்தனிஸ் என்பார் அவர் காலத் தில் இந்தியாவில் (அதாவது அவர் கண்ட மகதத்தில்) அடிமை

நிலை என்று ஒன்று இல்லை என்று கூறியுள்ளார். இக் கூற்று அவர் காலத்தில் மகதத்தில் நிலவிய சமூக நிலையை அவர் தவருகப் புரிந்துகொண்டதின் விளைவு என்பது போதரும். அக் காலத்தில் கிரீஸிலும் சற்றுப் பிற்காலத்தில் ரோமிலும் இருந்த அடிமை நிலை இந்தியாவில் எக்காலத்திலும் இருந்ததில்லை என்று கூறலாம். ஆனால், அக்காரணம் பற்றி இந்தியாவில் அடிமை நிலையே இல்லை என்று கூறுதல் மிகைக் கூற்று என்று கொள்ளவேண்டும். அரிச்சந்திரன் அடிமையானதும் அவன் தன் மனைவியை மற்றொருவனுக்கு விற்றுவிட்டமையும், பஞ்ச பாண்டவர் சூதாடித் தமது சுதந்திரத்தை இழந்தமையும் புராணங்களால் பெறப்படுவன. அடிமைகளை விற்கவும் வாங்கவும் பெருவாரியான பொதுச் சந்தைகள் இருக்கவில்லை என்று கூறலாமேயன்றி அடிமை நிலையே யில்லையெனல் பொருந்தாது. அடிமை என்னும் சொல் உண்மையே இதற்கு ஒரு சான்று.

# 7. அர்த்த சாத்திரத்திலும் பிற பொருள் நூல்களிலும் கண்ட மன்னனும் அவன் நிலையும்

'கௌடில்யர் சந்திர குப்த மௌரியருடைய காலத்தவரல்லராதலால் அவர் இயற்றிய அர்த்தசாத்திரத்தில் மௌரியர் ஆட்சியைப் பற்றிய குறிப்புக்கள் இரா' என்னும் சிலர் கொள்கையை ஒப்புக்கொள்வோமாயினும், அவர் கி. மு. முதல் நூற்றுண்டையேனும் சேர்ந்தவர் என்று கருதவேண்டும். அவ்வாருயின் அவரது நூலில் மன்னனையும் அவனது நிலையைப் பற்றியும் அவர் யாது கூறியுள்ளார் என்பதை ஆராய வேண்டும். மன்னனுடைய நிலையைப் பற்றி அவர் கூற்றினின்றும் நாம் தெரிந்து கொள்ளக் கூடியவை கீழ்க்கண்டவாறு:—

மன்னன் சமூகத்தைப் பாதுகாப்பவன். இப் பாதுகாப்பு என்னும் வேலையை அவன் செய்யும் போது அவன் 'அரசு' ஆகின்ருன். இவ்விடத்தில் மன்னன் ஒரு அதிகாரி (மனிதன்); அரசு ஒரு ஆதிக்க நிலையம் என்னும் வேறுபாட்டை யுணர வேண்டும். மன்னனுடைய வேலை அவனது அரசினை வெளியார் தாக்குதலினின்றும் பாதுகாக்க வேண்டும்; அத்துடன் உள் நாட்டுப் பகையினின்றும் மக்களுடைய உயிர், சொத்து, பாரம்பரியம் என்பவற்றையும் காக்கவேண்டும். அவன் சாதியையும் வருணத்தையும் பாதுகாத்து அவற்றை மாற்றினுரை ஒறுத்தான். பிறனில் விழைந்தாரைத் தண்டித்துக் குடும்பத்தின் தூய்மையைக் காத்தான். இதையே வள்ளுவரும் பிறனில் விழையாமை என்னும் அதிகாரத்திற் கூறினுர்; மணிமேகலையாரும் 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவல் இன்றெனின் இன்று,'[1] என்ருர். குடும்பச் சொத்து

[1] மணிமேகலை : XXII : 208, 209.

சரியான முறையில் வாரிசுகளுக்குப் பகிர்ந்து தரப்படுகிறதா என்று மேற்பார்க்கும் பொறுப்பும் மன்னனுடையதே. களவு, கொள்ளை என்பவற்றை அடக்கிச் செல்வந்தரை ஏழைகளிடமிருந்து காப்பதும் மன்னனுடைய கடமை; மிகு தண்டம், வறியோரைச் செல்வர் வாட்டுதல் என்னும் குற்றங்கள் நிகழாவண்ணம் எளியோரைப் பாது காத்தலும் அவன் கடமை. தருமத்தின் பகுதியான சமயத்தைப் பாதுகாக்க வேண்டிய மன்னன் கோவில்களையும், பிராமணர்கள், கிராமணிகள் என்போரையும் தாராளமான நன்கொடைகள் கொடுத்துக் காத்தான். நல்கூர்ந்தாரது வறுமையை நீக்குதல், வற்கடம் நேர்ந்த காலத்தில் அதை நீக்கத் தானம் செய்தல், வாணிகர்களுக்கும் வேளாளர்களுக்கும் ஆதரவு அளித்தல் என்னும் பல நற்செயல்களில் ஈடு பட்ட மன்னன் என்றென்றைக்கும் நின்று நிலவ வேண்டும் என்று முன்னோர் நிறுவிய வரன்முறைகளைத் தாமும் மாற்றுமல் பிறரும் மாற்ற முடியாமல் தடுத்து வருவதே முக்கிய கடமையாகக் கொண்டான்.

மன்னன் சுறு சுறுப்பாகத் தனது அலுவல்களைக் கவனிக்க வேண்டும் என்பதோடு அவன் அலுவல்களும் அளவிறந்தவை என்பதையும் உணரவேண்டும். ஒரு நாளைக்கு 16 மணி நேரமாயினும் மன்னன் இராச்சிய வேலைகளைக் கவனிக்க வேண்டிய படி அவனுடைய தினசரி ஏற்பாடு இருந்தது. சந்திரகுப்த மௌரியர் எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் போதும் அரச விவகாரங்களைக் கவனித்துள்ளார் என்று மெகஸ்தனிஸ் கூறுவார்; அப்படியே, அசோகர் அந்தப்புரத்தி லிருந்தபடியே அரசியல் அலுவல்களையும் ஆராய்ந்தார். சோழமன்னர்கள் ஆட்சியியலைப் பற்றி விவரிக்கும் ஒவ்வொரு நூலும் வழக்குக்குக் கொணர்வாரை நேரிற் கண்டு நீதி வழங்குவதற்கும் அரசியல் வேலைகளைப் பார்ப்பதற்கும் மன்னன் எப்போதும் தயாராக இருக்கவேண்டும் என்பது அவர்களுடைய தருமம் என்று கூறும். சங்க காலத் தமிழ் நூல்களில் மன்னர் அரண்மனைக்கு முன் ஆராய்ச்சி மணி என்று ஒரு மணி கட்டிய சங்கிலி தொங்க விடப்பட்டமை கூறப்படும். மன்னனிடம் முறை வேண்டி விண்ணப்பம் செய்ய விரும்பியவர்கள் இம் மணியை யசைத்தால் போதும், அவர்களை அரண்மனைக்குள் எளிதிற் புகவிட்டு முறை செய்து அவன் காப்பாற்றினன் என்பது தமிழரசு நீதி வழங்கும் மரபைப் பற்றிச் சிறிது அறிவிக்கின்றது. இம்மரபு இந்தியாவின் பிற பகுதிகளில் நடைமுறையில் இருந்ததா என்பதை யறியோம். பிற்காலத்தில் (16-ம் நூற்றாண்டில் தோன்றிய மொகலாயர் ஆட்சியில் ஜஹாங்கிரின்

அரண்மனை வாயிலிலும் இத்தகைய ஆராய்ச்சி மணி ஒன்று கட்டப் பட்டிருந்தது நோக்கற்பாலது. இவ்வாராய்ச்சி மணி எல்லா அரண்மனை வாயிலிலும் கட்டப்பட்டிருந்தது என்பது பொருள் அன்று. அரசனைச்சுற்றி எண்ணிறந்த ஏவல் ஆட்கள் எப்போதும் சூழ்ந்திருந்தனர்; ஆதலின் அவர்கள் புறத்தாரை எளிதில் உட்புக விட மாட்டார்கள் என்று எதிர் பார்க்கலாம். புறநானூற்றில் ஒரு பாட்டில் பிசிராந்தையார் என்னும் புலவர் கோப்பெருஞ் சோழன் என்னும் மன்னனிடம் அன்னச் சேவல் ஒன்றைத் தூது அனுப்பினர் என்றும், அப் போது அதனிடம் 'அரண்மனை வாயில் காவலர் நின்னைத் தடுத்தாலும் அதனைப் பொருட் படுத்தாமல் உள்ளே சென்று நான் விடுத்த செய்தியை மன்னனிடம் கூறுவாய்' என்று கூறி அனுப்பியதாகவும் கூறப்பட்டுள்ளது.[1] இதனின்றும் அரண் மனை வாயில் காவலர்களைத் தாண்டி உட்புகுதல் அத்துணை எளிய சாதனையன்று என்பது போதரும்.

அரண்மனையில் மன்னனது குடும்பத்தாரைத் தவிர எண் ணிறந்த வேலை ஆட்களும் அவர்களை நம்பிப் பிழைப்போரும், பரிசில் பெற வந்தோரும், விருந்தினராய்த் தங்கினோரும் எனப் பெருங்கூட்டம் இருப்பது எதிர் பார்க்கக் கூடியதே. விடியற் காலையில் மன்னரைத் துயில் எழுப்புவோரிலிருந்து இரவில் இன்னிசை பாடி அவரை உறங்க வைப்போர் வரை பலவகை அலுவலர் இருந்தனர். அவரை மகிழ்வூட்டுவோரும், சினம் தணிவிப்போரும், புகழ் பாடுவோரும், கூத்து ஆடுவோ ரும் என்பாரும் ஒரு புற மிருக்க, அரசியல் அலுவலராகவே நாட்டு நடப்புக்களை அவ்வப்பொழுது மன்னனுக்கு வந்து கூறுவோர் (ஒற்றர்கள்) இருந்தனர். இந்த ஒற்றர்கள் மன்ன னுடைய கண்களும் செவிகளுமாக விளங்கினர். மௌரிய மன் னர்கள் அரண்மனையில், முக்கியமாகச் சந்திரகுப்த மௌரியர் அவைக்களத்தில் மன்னனுடைய சொந்த வசதிகளைக் கவனிப் பதற்கே ஏராளமான வேலையாளர்கள் அமர்த்தப்பட்டிருந் தனர் என்றும் இவர்களில் பலர் மகளிர் என்றும் அறிகிறோம். மன்னனுடைய அரண்மனைக் காவலர்களும் போர்ப்படை தாங்கிய மகளிரே.

சந்திரகுப்தன் புரட்சி வாயிலாக அரசியல் ஆதிக்கம் பெற்றவனாகையால், தனது நலனைக் கெடுக்கப் பகைவர்கள் பலர் தம்மை மாறு வேடத்தில் சூழ்ந்திருக்கக் கூடும் என்று

[1] புறநானூறு: 67.

அவன் இயல்பாகவே எதிர்பார்த்துப் பல ஒற்றர்களைக் கொண்டு நண்பர், பகைவர் என்போர் யாவர் என்பதைத் தெரிந்து கொள்ள முயன்றான். அன்றியும், பகைவர்கள் பல வகையிலும் தனக்குத் தீங்கிழைக்க முற்படுவர் என்பதை எண்ணி, தாம் முழுவதும் நம்பக் கூடிய ஏவல் மகளிரைக் கொண்டு தனது நலனைப் போற்றிக் கொண்டான். அவர்கள் மன்னன் உண்பதற்குமுன் அவன் உணவைத் தாம் உண்டு பரிசோதிப்பதுண்டு; அன்றி, அதனைப் பூனை, நாய் முதலிய வற்றிற்கு இட்டு அவை நஞ்சு கலந்தவையா என்று அறிவர். மன்னன் ஒரு நாள் படுத்துறங்கிய அறைக்கு மறுநாள் செல்வ தில்லை. இத்தகைய முன்னேற்பாடுகளும் எச்சரிக்கைகளும் சந்திரகுப்தனைப் போலப் புரட்சி வாயிலாக அரசு கட்டில் ஏறி யவர்களுக்குத் தேவையே. இந்திய வரலாற்றில் இஸ்லாமியர் ஆண்ட இடைக் காலத்திலே யல்லாமல், அதற்கு முன்பு இந்து பௌத்த மன்னர்கள் ஆண்ட போதும் மூத்தோரிருக்க ஆள வந்த இளையோர்களும், புரட்சி முறைகளைக் கொண்டு ஆட்சி யைக் கைப்பற்றியவர்களும் பலராவர். உதாரணமாகப் புஷ்ய மித்ர சுங்கர், வாசுதேவ கண்வர், நந்திவர்மர் பல்லவ மல்லர் என்போர் புரட்சி வாயிலாக அரசெய்தியவர்கள்; பேரரசுக் குப் தர்களான சமுத்ரகுப்தர், சந்திரகுப்தர், II என்போர் மூத்தோ ரிருக்க இளையோன் அரசாண்டமைக்கு எடுத்துக் காட்டுக்கள். பௌத்தர்களுடைய நூல்களில் கூறியுள்ள விவரங்களை உண் மையென்று கொண்டால் அசோகனும் அரசாட்சி யெய்துவ தற்கு முன்பு, அவுரங்க சீபைப் போலத் தனக்குப் போட்டியாக வரக் கூடியவர்கள் யாவரையும் கொன்று குவித்தவன் என்பது பெறப்படும். அஃதிவ்வாறாயின்; அரண்மனை வாழ்க்கையில் அசோகனும் சந்திரகுப்த மௌரியனைப் போலவே அஞ்சி அஞ்சி வாழ்ந்திருக்க வேண்டும்.

மன்னனுடைய அவைக்களத்தின் பொதுத் தன்மையைப் பற்றிக் கூறுவோர் ஆடம்பரமும் படாடோபமும் ஆரவாரமும் மிகுந்திருந்தமையைக் குறிப்பர். புரோகிதரும், அவருக்கு உதவப் பிற அந்தணர் பலரும் இருந்தனர். சூதர், மாகதர் வைதானிகர், விதூடகர் என மன்னனைப் புகழ்வோரும், அவ னைக் களிப்பூட்டுவோரும் பலர் அவைக் களத்தில் இருந்தனர். சூதரும், விதூடகரும் மன்னனுடைய நண்பராயுமிருந்தனர். தரும சாத்திரங்களும் அறநூல்களும் வேண்டா எனத் தடுத் துக் கூறியவற்றை மன்னர்கள் நடைமுறையில் கையாண்டு வந்தமையும் சில சான்றுகளால் பெறப்படும். கவருடலை வள்ளுவர் கண்டித்திருந்தும் சங்க காலத்துச் சோழ மன்னர்

இளவல் ஒருவன் ஒரு புலவரோடு கவறாடிய வரலாறு புறநானூற்றில் பெறப்படும். கள்ளுண்ணுமையின் பெருமையை வள்ளுவர் கூறுவர்; ஆனால், ஔவையார் அதியமானோடு கள்ளுண்டலின் இன்பத்தை விவரித்துக் கூறுவர். வடமொழி இலக்கியத்திலும் நளன், தருமன் என்போர் சூதாடித் தம் அரசை இழந்தமையும் காண்க. வேட்டையாடி விலங்குகளைக் கோறல் பண்டைக் காலந்தொட்டு மன்னரது தொழில்களில் ஒன்று என்பது யாவரும் அறிந்தது.

மன்னன் பல மகளிரை மணத்தலும், அவனது அந்தப்புரத்தில் அவர்கள் பட்டமகிஷி என்னும் முதல் அரசியின் தலைமையின் கீழ் வாழ்வதும் பெரும்பாலும் அம்முதல் அரசியின் மகனே அரசனுக்குப் பின் பட்ட மெய்துதலும் மரபு. அந்தப்புரக் காவலர்களும் அரசனது மெய்க்காப்பாளரும் சட்டையணிந்த வீரர்களாதலின் கஞ்சுக மாக்கள் எனப்பட்டனர். இதிலிருந்து மன்னர் உள்பட நம் நாட்டில் ஒருவரும் அக்காலத்தில் சட்டை அணிவதில்லை என்பது பெறப்படும்; 'உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்' ஆதலினாலும் இது உண்மை என்று அறியலாம். 13-ம் நூற்றாண்டில் தென் இந்தியாவிற்கு குறிப்பாகப் பாண்டி நாட்டிற்கு வந்த மார்க்கோபோலோ என்னும் இத்தாலியர் இந்நாட்டில் தையற் காரர்களே இல்லை போலும் என்று கூறியுள்ளமைக்கும் இதுவே காரணமாதல் வேண்டும். பிற்காலத்தில் வியாபார நிமித்தம் இந்தியாவிற்கு வந்த மேற்கு ஐரோப்பியர்களை நம் நாட்டவர் சட்டைக்காரர்கள் என்று பெயரிட்டழைத்தமைக்கும் இது ஒரு காரணம் போலும்.

அரசர் என்னும் சொல் ராஜன் என்னும் வட சொல்லின் விகாரம் என்பதை மேலே கண்டோம். இச்சொல் ஆளுபவரைக் குறிக்கும். ஆனால், க்ஷத்ரியர் என்னும் ஒரு சொல் உண்டு. க்ஷத்ரியர் என்போர் பிராமணர்; க்ஷத்ரியர், வைசியர், சூத்ரர் என்னும் ஆரியர் வகுத்த பாகுபாட்டில் இரண்டாமவர். அவர்கள் அரசுரிமை பெற்றவர்கள். பிராமணர்கள் வேத வேள்வி செய்தற்குரியவர் என்பது போல. ஆனால் 'அரசர்' என்பது க்ஷத்ரியர் ஆயினும் ஆகாவிடினும் அரசுத் தொழில் பார்ப்போர் யாவர்க்கும் பொருந்தும் ஒரு சொல். சந்திரகுப்த மௌரியர் தொடங்கி இந்நாட்டில் ஆண்ட இந்து; பௌத்த மன்னர்களில் பெரும்பாலோர் (ஏன்? ஒருவருமே என்றும் கூறலாம்) க்ஷத்ரியர்களல்லர். சந்திரகுப்தன் அரசு கட்டில் ஏற உரிமையில்லாத 'க்ஷத்ரியனல்லாதவன்' என்னும் காரணத்தால்

நந்தர்களால் புறக்கணிக்கப்பட்டுப் பிறகு புரட்சி வாயிலாக அரசெய்தியவன்; மௌரியர் வமிசத்தைக் கவிழ்த்து அரசனைக் கொலை செய்து ஆதிக்கம் எய்திய புஷ்ய மித்ர சுங்கர், பிராம்மணர் என்று சிலரும் அவர் பிராம்மண மதத்தில் நம்பிக்கை கொண்டு பௌத்தர்களை எதிர்த்தவரேயன்றி பிராமணரேயல்லர் என்று பலரும் கூறுவர்; இவ்விரு கூற்றுக்களில் பிந்தியது வலுவுடைத்து. அது எதுவாயினும், அவர்கள் அவர்களை யழித்து, பின் பெழுந்த கண்வாயனர்களைப் போலவே க்ஷத்ரியர்களல்லர், அரசர்களே என்பது பெறப்படும். பேரரசுக் குப்த வமிசத்தவர்களும் ஹர்ஷரும் வைசியர்கள். சாதவாகனர் முதலியோர் ஆந்திர பிருத்யர்கள்; தமிழக மன்னர்களோ வேளாளர்களோடு மகட் கொடை கொண்ட வேளாளர்களே யன்றி க்ஷத்ரியர்கள் அல்லர். முஸ்லிம் தாக்குதல்களை எதிர்த்துக் கிளம்பிய விசயநகரப் பேரரசையும் பிறகு மகாராட்டிரத்தையும் ஆண்ட கிருஷ்ணதேவராயர் போன்ற நாயக்கர்களும் சிவாஜி போன்ற பான்ஸ்லேக்களும் நான்காம் வருணத்தினரேயன்றி இரண்டாம் வருணத்தினரான க்ஷத்ரியர்களல்லர். ஹர்ஷர் ஆட்சிக் காலத்திற்குப் பின்பு ராஜபுதனத்தில் சிற்றரசு பலவற்றை அமைத்துக் கொண்டு ஆண்ட ராஜபுத்ரர்கள் தங்களை க்ஷத்ரியர்கள் என்று கூறிக் கொண்ட போதிலும், அவர்கள் மத்ய ஆசியாவிலிருந்து இந்தியாவினுட் புகுந்து இந்தியர்களோடு கலந்து தோன்றிய ஒரு கூட்டத்தினர் என்பது வரலாறு ஏற்றுக்கொண்ட கோட்பாடு. இந்நிலையில் அரசபதவியை எய்துவதற்குத் திறமையும், துணிவும், வாய்ப்பும் கிடைத்தவர்கள் யாவரையும் சில சாங்கியங்களின் வாயிலாக க்ஷத்ரியர்களாகச் செய்யும் தகுதி பிராமணர்களுக்கு இருந்தது.

பெரும்பாலும் மன்னனுடைய மூத்தமகனே அரசெய்தினன். ஆயினும், நாம் மேற்கண்டவாறு இளைய மக்கள் அரசெய்தியமை பல இந்திய அரச வமிசங்களில் காணப்படுகின்றது. மன்னனின் மகள் அரசாளுதற்கு அர்த்த தரும சாத்திரங்களில் எவ்வித உரிமையும் பேசப்படவில்லை. சிற்சில சமயங்களில், வயது நிரம்பாத ஆண் சிறுரான அரச குமாரர்களின் சார்பில் குடும்பத்து மூத்த மகளிரில் ஒருத்தி ஆட்சியலுவல்களை மேற்பார்த்தல் உண்டு. வாரங்கல் நாட்டு அரசியான ருத்ராம்பாள் என்பாள் ஓர் ஆண்மகனைப்போல் பட்டம் தரித்து ஆட்சி நடத்தியதும் மகளிர் ஆட்சிக்கு உரியவரல்லர் என்று அக்காலத்தவர்கள் கருதியமையே வற்புறுத்தும். பிரபாவதி குப்தா, ராணி மங்கம்மாள், மீனாக்ஷி; பிற்காலத்தில் ஜான்ஸி ராணி

போன்றவர்கள் வயது நிரம்பாத சிறுர்க்காக ஆட்சியை மேற் பார்த்தவர்களே. ஹர்ஷரது சகோதரியான ராஜ்யஸ்ரீயும், ராஜராஜ சோழனுடைய தமக்கையான குந்தவையும் அரசிய லில் ஈடுபட்டுத் தத்தம் சகோதரருக்கு ஆட்சியில் உதவியவர் கள்; சாளுக்ய மன்னர் ஜயசிம்மர் II-ம் உடைய சகோதரியான அக்காதேவி என்பார் ஒரு மாகாணத் தலைவியாக அலுவல் பார்த்தவர். அக்காதேவி, ருத்ராம்பா, உமாதேவி ஹொய்சள வீரவல்லாளர் II-ம் உடைய ஜான்ஸிராணி என்போர் போர்க் கோலம் பூண்டு பகைவரோடுபோர்க்களத்தே பொருதவர்கள். இக் குறிப்புக்கள் யாவற்றினின்றும் மகளிர்க்குப் பண்டைக்கால இந்திய அரசியலில் ஈடுபாடு இருந்தது என்பது பெறப்படுமே யல்லாமல் அவர்களுக்கு அரசுரிமை எய்தத் தனியுரிமை இருந்தது என்பது பெறப்படாது.

மன்னர் இறந்தால் அவருக்குப்பின் அரசு கட்டில் யார் ஏறுவது என்னும் வினு பண்டைக்காலம் தொட்டே இருந்து வந்துள்ளது. இதற்கு அரசனது மூத்த மகன்தான் அவ்வுரிமைக்கு உரியன் என்று நாம் எளிதில் கூறுவோம். ஆனுல், இங்ஙனம் கூறுதற்கு அத்தகைய பாரம்பரியத்தில் நாம் பழகி விட்டோம் என்பது தான் முக்கிய காரணம். ஆனுல், அப்பாரம்பரியம் நியாயமானதாகவும் காண்கிறது. ஏனெனில், மிக அதிக காலத்திற்கு மன்னனுடனே அரண்மனை யிலேயே உறைந்து மன்னனது ஆட்சி முறைகளைக் கண்டு அவற்றிற்கான அறிவுரைகளைக் கேட்டு ஆட்சியாளர்களோடு நெருங்கிப் பழகி வரும் மிகுதியான வாய்ப்பு அரசனுடைய மூத்த மகனுக்கே இருக்கும் என்பதை மறுக்க முடியாது. இதை யொட்டியே முதல் அமைச்சனுடைய மூத்த மகனே அடுத்த முதல் அமைச்சனுக அமர்தல் வேண்டும் என்னும் நியதியும் இருந்து வந்தது. ஆனுல், சில சமயங்களில் இந்த விதி மாற்றப்பட வேண்டி வருவதுண்டு. தீராத நோயால் (உதாரணமாகத் தொழு நோயால்) வருந்தியவர்களும், அந்த கர்களும் (கண்பார்வை எக்காரணத்தினுலேனும் இழந்தவர் களும்) அரசாளக் கூடாது என்பது சாத்திர விதி. இவ்விதி முஸ்லீம்கள் ஆட்சி மரபிலும் உண்டு. ஆதலாலே, டெல்லியி லாண்ட சுல்தான்கள் காலத்தில் அடுத்து வரும் சுல்தான் தமக்குப் போட்டியாக வருபவர்களையெல்லாம் கொன்று குவிப் பதையும், வென்று விரட்டுவதையும் விட தக்க செயல் அவர் களது கண்களை வாங்கி விடுவதே என்று எண்ணி அவ்வாறே செய்த செய்தி கேட்கப்படும். மகாபாரதத்தில் மூத்தவனுன திருதராஷ்டிரன் ஆட்சிக்கு வரமுடியாமல் போனமைக்குக்

காரணம் அவன் பிறவிக் குருடன் என்பதே; அஃது அவ்வாறு யின் அவன் தம்பி பாண்டு என்பான் பாண்டு நோயால் பீடிக்கப்பட்டிருப்பினும் அவரது அண்ணன் சார்பில் ஆட்சி புரிந்தது எவ்வாறு என்பது விளக்கப்படாத ஒரு அரசியல் நிலை. தீக்குணம் படைத்தவன் அரசு கட்டில் ஏறக் கூடாது என்று அர்த்த சாத்திரம் கூறுகின்றது. இவ்விதியை ஒட்டியே பேரரசு குப்தர்களிடையே சமுத்ர குப்தரால் ஆட்சி பீடத்திற்கு வர முடிந்தது என்று எ. எல். பாஷம் கூறுவார்: ''மன்னர்கள் சில சமயங்களில் தங்களுடைய வாரிசுகளை நியமிப்பதுண்டு; அவ்வாறு நியமிக்கப் படாவிட்டால் யார் அரசுரிமை எய்து வரோ அவர் தீயநெறியினர் என்று பட்டால் அவரை நீக்கிப் பிறரை நியமிப்பதுண்டு; இவ்வாறே சந்திர குப்தர் I-ம் மற்ற வாரிசுகளை நீக்கி விட்டு சமுத்ர குப்தரை தம் வாரிசாக நியமித்தார். இம்முடிவெடுத்தபின் மன்னர் முடி துறந்தார் என்று தோன்றுகிறது'' என அவ்வறிஞர் கூறுகிறார். ஆனால், நீக்கப் பட்டவர்கள் எந்த வகையில் தீக்குணத்தவர்கள் என்று முடி வெடுக்கப்பட்டது என்பது எங்கும் குறிக்கப்படவில்லை. குடும்பத் தகராறுகள் காரணமாக மூத்த மகன் பட்டத்திற்கு வருதல் என்னும் பழக்கம் ஒவ்வோர் சமயங்களில் தளர்த்தப் பட்டது. இத்தகராறுகளின் விளைவாக அரசுகள் பலவீனப் பட்டன; அரசியல் அமைதியின்மை பெறுகிறது.

மன்னன் ஆட்சியிலிருக்கும் போதே அவனுக்கு அடுத்தாற் போல ஆள வருபவர் யாவர் என்பது தீர்மானிக்கப்பட்ட பின் யுவராஜனையும் ஓரளவு ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள் ளச் செய்வதுண்டு. இம் மரபு வடமேற்கு இந்தியாவில் ஆண்ட சாகர்கள், பகலவர்கள் என்பாரிடையேயும், தென்னாட்டில் ஆண்ட சோழர்களிடையேயும் பெரும்பாலும் காணப்பெற்றது. சாகர், பகலவர் என்பார் வெளியிட்ட அரசுக் காசுகளில் முன் புறம் ஆளும் மன்னனின் பெயரும், பின்புறம் யுவராஜனை அடுத்து வரும் மன்னனின் பெயரும் பொறிக்கப்பட்டன. சோழ நாட்டில் பேரரசுச் சோழர்களிடையே இளவரசனையும் பட்டம் கட்டுவித்து மன்னர்க்குரிய உரிமை, பெருமைகள் யாவற்றையும் தந்து சட்டப் பட்டயங்களையும் தம் பெயராலேயே வெளியிடும் தகுதியையும் ஆக்கினர். ஆனால், இம் மரபு பரவலாக மற்ற இடங்களில் காணப்படவில்லை.

இளவரசர்கட்கு இவ்வளவு சலுகைகள் கொடுக்கப்பட்டி ருந்தும், தாங்கள் ஆட்சிக்கு வரும் காலம் நீட்டிக்கப்படுவதாக அவர்களுக்குத் தோன்றினால் தந்தையைக் கொன்று பட்டம்

எய்துமளவிற்கு அவர்கள் ஆற்றுமை அவர்களைத் தூண்டிய சந்தர்ப்பங்கள் நமது அரசியல் வரலாற்றிற் பல காணப் பெறும். மகதத்தை ஆண்ட அஜாதசத்ரு முதலாகப் பல அரசர்கள் தந்தையரைக் கொன்று பட்டம் எய்தியவர்கள். மனைவி மக்களிடம் அஞ்சியே வாழ்நாளின் இறுதிக்காலத்தைக் கழிப்பர் மன்னர். "இளங்கோக்கள், நண்டுகளைப் போல, தமது பெற்றோரையே விழுங்கி விடுவர்" என்பது ஒரு பழமொழி. தமிழ் நாட்டில் சோழர் பரம்பரையில் கோப்பெருஞ் சோழனை எதிர்த்து அவன் மக்கள் போரிட்டமை ஈண்டு காணத்தக்கது. தகப்பன் இயற்கையாக இறந்து போகும்வரை பொறுத்திருக்க விரும்பாத மக்களைக் காக்க வைக்க விரும்பாத மன்னர்கள் தமது வயோதிக காலத்தில் அரசு துறந்து செல்வது ஒரு மரபு. இவ்வாறு துறந்து சென்ற மன்னர்கள் சில சமயங்களில் சந்திரகுப்த மௌரியன் முதலியோரைப் போலச் சாங்கியமாகத் தற்கொலை செய்துகொள்வதுமுண்டு. பாடலிபுத்ரத்தில் அரசு துறந்த சந்திரகுப்தன் தென்னாட்டிலுள்ள மைசூருக்குப் போந்து சமணர்களுடைய சமய மரபுப்படி உண்ணாவிரதம் இருந்து உயிர் துறந்தார் என்பது ஒரு வரலாறு. சாளுக்கிய சோமேஸ்வரர் வாழ்க்கையை வெறுத்து அரசு துறந்து துங்கபத்திரையில் மூழ்கி இறந்தமையும் கூறப்படும்.

சங்க காலத்துத் தமிழகத்தில் தந்தைக்குப் பின் மகன் அரசை எய்துதல் என்பதே மரபாக இருந்தது. ஆனால், கி. பி. 12-ம் நூற்றாண்டிற்குப் பிறகு மருமக்கட்டாயம் என்னும் மரபு ஏற்பட்டு ஆளும் மன்னனுக்குப் பின் அவனது மருமகன் (சகோதரி மகன்) மன்னனாவது என்னும் வழக்கம் மலையாள நாட்டில் ஏற்பட்டது. சமீப காலம் வரையில் திருவாங்கூர் முதலிய மலையாள அரசுகளில் அதுவே பழக்கமாக இருந்தது. இன்னும் சிற்சில சிறு ராஜ்யங்களில் மருமக்கட்டாயம் வழக்கமாக இருந்திருக்கக் கூடுமாயினும், பெரிய அரசுகளில் இம் மரபு மேற்கொள்ளப் பட்டதாகத் தெரியவில்லை. சிலர் சாதவாகன மன்னர்களில் ஒரு சிலர் கௌதமிபுத்ரசாதகர்ணி, வாசிஷ்டிபுத்ரசாதகர்ணி முதலிய பெயர்களை இட்டுக்கொண்டமையை மனத்தில் வைத்துக்கொண்டு அங்கெல்லாம்கூட மருமக்கட்டாய மரபு பரவி இருந்தது என்று எண்ணுவர். அப்படி அவர்கள் பெயர்கள் வைத்துக்கொண்டதற்குக் காரணம் கீழ்க்கண்டவாறு இருக்கலாம் என்று தோன்றுகின்றது. கௌதமி புத்ரசாதகர்ணி என்னும்போது கௌதமி என்பாருடைய மகள் சாதகர்ணி என்று பொருள்படும். வாசிஷ்டி புத்ர சாத கர்ணி என்னும்போது வாசிஷ்டி என்பாருடைய மகன் சாதகர்ணி என்று பொருள்

படும். இதற்குக் காரணம் கௌதமியும் வாசிஷ்டியும் சாதகர்ணி யின் தாயராக இருந்ததோடு அந் நாட்டு அரசியல் தலைவராக வும் இருந்தனர் என்று கருதலாம். ஆனால் இயல்பாகவே இச் சொற்களுக்கு வேறு பரம்பரையை யொட்டிய பொருளும் கூற லாம்; அதாவது மன்னருடைய மகனைப்பற்றிக் குறிப்பிடும் போது அம் மன்னருக்குப் பல மனைவியர் இருப்பராதலால் இவ்விளவரசன் எந்த மனைவியின் மகன் என்று எளிதில் அறிவ தற்காக அவ்வாறு பெயரிட்டிருக்கக்கூடும் என்பதே பொருத்த மாகக் காண்கிறது.

தமக்கு அடுத்தாற்போல அரசுரிமை பெறுதற்கு ஒருவரு மின்றி மன்னர் இறந்துபோயின், அவைக்களத்தில் குழுமியிருக் கும் அமைச்சர், புரோகிதர் முதலானோர் தற்காலிகமாக வேனும் ஆட்சியைக் கைப்பற்றுவர். அவர்கள் புதியதொரு மன்னனைத் தெரிந்து எடுத்துக்கொண்டு மறுபடியும் தத்தம் பழைய நிலையில்அமர்ந்து அவரது ஆட்சியை ஆதரிப்பதுண்டு. உதாரணமாக, கன்யாகுப்ஜத்தை (கனோஜை)ச் சார்ந்த பிரபுக் கள் கிருஹவர்மன் என்னும் மன்னன் இறந்த பின் ஹர்ஷனை வரவேற்று மன்னனுக்கியமை காணலாம். நந்திவர்மன் பல்லவ மன்னனும் இங்ஙனமே தெரிந்தெடுக்கப்பட்டதாக ஒரு வரலாற் றுக்கொள்கையுண்டு. வங்காளத்தையாண்ட பால மன்னர் களுள் முதல்வனை கோபாலன் என்பானை அரசனைத் தேர்ந் தெடுத்தவர்கள் அந்த நாட்டுப் பிரபுக்கள்தாம்.

# 8. பேரரசுக் கோட்பாடும் படை மானியத் திட்டமும்

இந்திய வரலாற்றை இயற்றப் புகுவோர் பலர் பண்டைய இந்தியப் பேரரசுகளைப் பற்றி விரித்துரைப்பர். பழைய ஐரோப்பிய ரோமானியப் பேரரசு, அண்மைக் காலத்துப் பிரிட்டிஷ் பேரரசு என்பவற்றின் வரலாற்றைத் தெளிதின் உணர்ந்தோர்க்கு பண்டைய இந்தியப் பேரரசுகளைப் பற்றிக் கேள்வியுறும்போது சற்று வியப்பு ஏற்படுவது இயற்கையே. ஏனெனில், அருகிலுள்ள பல நாடுகளை வென்று தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டு அல்லது வெல்லப்பட்ட அரசரிடமிருந்து திரைப்பணம் பெற்றுக் கொண்டு அரசு புரிந்து வந்த மன்னர்களைப் பேரரசர் என்றோ அவர்கள் அரசை பேரரசு என்றோ கூற முடியுமா என்பது ஒரு கேள்வி. இதற்கு 'முடியாது' என்று விடையிறுப்பதே நேரிது என்று தோன்றுகிறது. இந்தக் கேள்வி அதற்குரிய முறையில் புரிந்து கொள்வதற்கு முன் இந்திய அரசியல் ஏற்பாட்டில் ஏதேனும் ஒரு வகை படை மானிய ஒப்பந்தத் திட்டம் இருந்ததா என்பதை அறிய வேண்டும்.

படை மானியம் என்னும் திட்டத்தின் பொருள் என்ன என்பதை விவரிப்பதில் கருத்து வேறுபாடு மிகுதியும் உண்டு. பெரும் பான்மை வரலாற்றாசிரியர்கள் அச்சொல்லுக்குப் பொருள், இடைக்கால ஐரோப்பிய வரலாற்றில் அக்கண்டத்தில் அரசியல், நிலஉரிமை, போர்த்திறன் ஆகிய துறைகளில் நிலவிவந்த சமூக ஏற்பாடுதான் படைமானியத் திட்டம்; அதினின்றும் வேறுபடும் எந்தத் திட்டமும் படை மானியத் திட்டம் அன்று என்று உறுதியாகக் கூறுவர். வேறு சிலர் அவர்களில் இந்திய ஆசிரியர்கள் பலர் உண்டு. ஐரோப்பியப் படைமானியத் திட்டத்தை ஏறத்தாழ ஒத்திருப்பினும் அதையும் படைமானியம் என்றே கருதலாம் என்று கூறுவர். இத்திட்டத்தில்

நிலத்தை எந்த ஏற்பாட்டின் அடிப்படையில் நிலச் சொந்தக்காரர்களும், அதை உழுபவர்களும் அனுபவிக்கின்றனரோ அந்தத் திட்டம் சற்றேனும் ஐரோப்பியர் படை மானியத் திட்டத்தை ஒத்திருந்தால் இதையும் அப்பெயர் கொண்டே அழைக்கலாம் என்பது அச்சிலர் கருத்து. பேராசிரியர் ஆர். எஸ். சர்மா முதலிய சில அறிஞர்கள் இந்திய அரசியல் ஆட்சி ஏற்பாடுகளில் படைமானியத் தோற்றம் காணப்படுவதாகக் கருதுவராயினும், ஏனைய அறிஞர்களில் பெரும்பாலோரும் பொதுவாக, பிரிட்டிஷ் வரலாற்றுசிரியர்களும் இந்திய வரலாற்றில் படை மானிய அம்சங்கள் காணப்படவில்லை யென்றே கருதுவர். பண்டைய இந்திய அரசியல் ஆட்சி அமைப்பில் நாம் கண்ணுறுவது படை மானியத் திட்டம் அன்று; அது போன்ற தொன்று என்றே கருதுவர்.

பண்டைய இந்தியாவில் நில உரிமை ஏற்பாடுகள் அமைந்திருந்த விதம் அவற்றைப் 'படை மானியப் போலி' திட்டம் என்று கருதும் வகையில் உள்ளது. இடைக்கால ஐரோப்பியப் படைமானியத் திட்டத்தின் அடிப்படை நிலஉரிமை போர்த்தொழில். இவ்விரு துறையிலும் ஒருமிக்க தோன்றிய 'குடியானவன்—பிரபு—படைஞன்' உறவு முறைகளின் முழுமையாகும். இத்தகைய சமூக உறவு முறைகள் இந்திய வரலாற்றில் எப்பொழுதும் தோன்றியதில்லை. மொகலாயர்கள் புகுத்திய மன்சப்தாரி முறை, விஜயநகர மன்னர்கள் காலத்தில் தோன்றிய நாயக்கர் ஆட்சிமுறை, ராசபுத்திரர்கள் ஆட்சியில் அவர்களுடைய அரசர்களுக்கும், குடிகளுக்கும் இருந்த ஒருவகை போர்த்தொழில் ஏற்பாடுகள்—இவையெல்லாம் அரசன்—பிரபு—வில்லென்—நைட் என்பாரிடை ஐரோப்பிய வரலாற்றில் காணப்படும் படைமானிய அம்சங்களோடு மேலெழுந்தாற்போலன்றி வேறுவகையில் ஒப்புமை பெறு.

எந்த ஆட்சி முறையிலும் 'அரசியல்—மேலோர்' என்றும் 'அரசியல்—கீழோர்' என்றும் அமைவது இயற்கையே. மன்னர்—மந்திரி;—கணக்கர்;—அலுவலர்; புரோகிதர்—கணி;—படைத்தலைவர்—காலாள் என்று இன்னோரன்ன பாகுபாடுகள் இருந்தே தீரும். ஆணைகள் பிறப்பிப்பாரும் அவற்றை நடப்பிப்பாரும் ஏற்று நடப்பாரும் என்று பலர் இருத்தல் இயல்பே. இங்ஙனம் 'மேலோர்—கீழோர்' எனப் பலவகையினர் இருப்பதைக் கொண்டே படைமானியத் திட்டம் ஒன்று நடை முறையில் இருப்பதாகக் கருதுவது தவறு.

வடமொழியில் சாம்ராட் என்றும் அதிராஜர் என்றும் வரும் பெயர்கள் 'பேரரசர்' (Emperor) என்று பொருள்படா. பல சிற்றரசர்களை வென்று தமது ஆதிக்கத்தை அவர்களை ஏற்றுக் கொள்ளச் செய்து ஒரு 'மேலரச' ராகத் திகழ்ந்த மன்னர் 'பேரரச'ராவாரா? என்னும் வினவை மேலே எழுப்பினோம். ஐரோப்பிய முறைப் பேரரசுக்கு சில தனிப்பண்புகள் உண்டு. அவையாவன ; (1) ஆட்சியை ஒரு முகப்படுத்தல் (2) ஆட்சி அதிகாரங்கள் யாவற்றையும் அரசின் தலைநகரிலுள்ள ஆட்சியாளரிடம் குவித்தல், (3) அரசின் அடிப்படை (அ) ஆட்சித் தத்துவத்தையும், (ஆ) மொழியையும்; (இ) ஆட்சி நிறுவனங்களையும் புதிதாக வென்று சேர்க்கப்பட்ட பல வெளிப்பகுதிகளுக்கும் பரப்பி நிறுவுதல் என்னும் பல மரபுகள் சேர்ந்தவையாம். இவற்றை ரோமானியப் பேரரசு பிரிட்டிஷ் பேரரசு ஆகிய பேரரசு நிலையங்களில் காணலாம். லத்தீன் மொழியும், ரோமானியக் குடியாட்சி மரபுகளும், ரோமானியரின் அரசியல் கொள்கைகளும் சட்டங்களும் பேரரசின் பிற பகுதிகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டு பேரரசை இறுகக் கட்டிய ஒரு பிணையாக நின்றன. அஃதே போல பிரிட்டிஷ் பேரரசையும் ஆங்கில மொழி, பிரிட்டிஷ் ஆட்சித் தத்துவங்களான மக்களாட்சிப் பண்புகள், பிரிட்டிஷ் அரசியல் நிறுவனங்களான பாராளுமன்றம் முதலியவைகளோடு ஆங்கிலேயர் சட்ட மரபுகள் என்பவை யாவையும் சேர்ந்து ஒரு மாபெரும் நிலையமாக இணைத்தன. இத்தகைய அரசியல் மரபுகள் இந்திய அரசுகளிடை நிலவினவா என்னும் வினவிற்கு இல்லை என்றே கூற வேண்டும். இஃதாயின், இந்திய வரலாற்றில் பேரரசுகளைப் பற்றிப் பேசுவது நமது மரபிற்குப் பொருத்த மில்லாப் பேச்சு என்பது பெறப்படும் இந்நிலையில் இந்திய ஆட்சி நிறுவனங்களைப் பற்றி ஆராய்வார் மனத்திலிருத்த வேண்டிய மற்றொரு கருத்தும் காணவேண்டும். ஐரோப்பிய படை மானிய சமூக ஏற்பாட்டில் சட்டரீதியில் 'ஒப்பந்த' (Contract)க் கொள்கை சமூகத்தில் பல நிலைகளில் இருப்பவர்களை இணைத்தது. இந்திய சமூக நிலையில் தனி ஒருவர் தகுதி, ஒப்பந்தம் என்னும் கருத்துக்களுக்கு இடமில்லை; பிறப்பாலோ பிற 'தகுதி'களாலோ சமுதாயத்தில் ஒருவன் வகிக்கும் நிலையே அவனது சமூக மதிப்பை நிர்ணயிக்கும் அளவுகோல் என்பது இந் நாட்டுப் பண்பாட்டு அடிப்படைக் கோட்பாடு. ஆதலால், ஒரு வல்லரசர் வலி குன்றிய பிறரை (மெல்லரசரை) வென்றால் பிற்கூறினோர் போர்க்களவெற்றி காரணமாக முற்கூறினோர்க்குக்கீழ்ப்படிவரே யன்றி, அவ்விருவகை மன்னருக்கும் அவரவர் நிலையை நிர்ணயிக்கும் சட்ட ஒப்பந்தம் ஒன்று இராது. அர்த்த சாத்திரக்

கொள்கைப்படி பலவீனனான ஓர் சிற்றரசன் வல்லரசன் ஒருவன் தன்னைப் போர்க்களத்தே வென்று அடிப்படுத்து முன்பு தானே கீழ்ப்படிந்து விடுதல் நல்லது. இவ்வாறு செய்யினும் அது ஒப்பந்தமாகாது. இது 'வலியறிந்து' அதற்கு ஏற்ப நடந்து கொள்ளுதலாகவே அமையும். இப்படிச் செய்வதால் போரும் அதனால் ஏற்படும் துன்பங்களும் தவிர்க்கப்படும் என்பது உண்மையே யாயினும் இது ஒப்பந்தமாகி விடாது.

'தர்மவிஜயம்' என்னும் சொல் வென்ற நாடுகளைத் தனது அரசில் சேர்த்துக் கொள்ளாமல் வெல்லப்பட்ட சிற்றரசர் அல்லது மன்னனிடமே அதைத் திருப்பிக் கொடுத்து விட்டு அவரிடம் கப்பம் மட்டும் பெற்றுக் கொண்டு அமைவது என் பதேயாம். இதில் எவ்வளவு தர்மம் உள்ளது என்பது வேறொரு பிரச்சினை. ஆனால், அரசியல் வாயிலாகப் பார்க்கும் பொழுது குறைந்த செலவில் மிகுந்த பயன் பெறுவது இம் முறை என்பது புலப்படும். வெற்றி கண்ட மன்னன் தனது அரசைப் பேரரசாக்க முயன்றால் ஆட்சியை மையப்படுத்தித் தனக்குப் பழக்கப்பட்ட நிலையங்களைப் புதிதாக வென்று கொண்ட பிற தேசங்களுக்கும் பரப்ப வேண்டிவரும்; அன்றியும் அவ்வாறு பரப்ப வேண்டுமானால் அதற்கு மிகப் பெரிய எண்ணிக்கையில் தகுதியும் பொறுப்பும் வாய்ந்த அதிகாரிகளை நியமிக்க வேண்டி இருக்கும். அதற்குச் செலவும் பிடிக்கும்; மன்னனது பொறுப்பும் மிகும். ஆனால், 'தர்மவிஜய'ப்படி மன்னனுக்கு அந்தப் பொறுப்பெல்லாம் இல்லை. கப்பத்தைப் பெற்றுக்கொண்டு ஆட்சிப்பொறுப்பைத் தோற்ற அரசரிடமே விட்டுவிடுவது அவர்கள் கோணத்திலிருந்து அறிவுடைமை. இந்திய முகம்மதிய அரசர்களில் டெல்லியிலிருந்து ஆண்ட சுல்தான்கள் முக்கியமானவர்கள். அவர்களில் கில்ஜி வம்சத்தைச் சேர்ந்த அலாவுதீன் என்பார் தமது சிறந்த படைத் தலைவரான மாலிக்காபூர் என்பார் துணைக்கொண்டு இந்தியாவின் பெரும் பகுதியை வென்று சூறையாடினதோ டல்லாமல் தக்காணத்திலோ, தென்னிந்தியாவிலோ அவர் வென்ற நிலப் பகுதிகளைத் தமது சுல்தானியத்தோடு இணைத்துக் கொள்ள வில்லை. பேரரசு குப்த மன்னர்களில் சிறந்தவராகக் கருதப் படும் சமுத்ரகுப்தரும் இவ்வாறேதான் திக் விஜயங்களால் வெற்றி கொண்ட நாடுகளைக் கைப்பற்ற வில்லை என்பதும் அவர்கள் தம்மை 'சாம்ராட்' என்று ஏற்றுக் கொண்டு கப்பம் கட்டினால் போதும் என்று கருதியமையும் நோக்கத் தக்கவை. ஆனால்; சமுத்ர குப்தரும் சில பகுதிகளில் தமது அரசைப் பரப்பினார்; அவர் மகன் சந்திரகுப்தர் II சிறிது அதிகமாகவே

அரசைப் பரப்பினர். இவர்கள் வென்ற நாடுகளைத் தமது அரசில் சேர்த்துக் கொண்ட அளவிற்கு இந்தியப் பாரம்பரியத்திற்கு மாறாக நடந்து கொண்டார்கள் என்றும், அவ்வாறு செய்யாமல் விட்ட அளவிற்கு அப்பாரம்பரியத்திற்குட்பட்டு நடந்து கொண்டார்கள் என்றும் கருதவேண்டும். அசோகர் தமது கல்வெட்டுக்களில் தர்மவிஜயத்தைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். அச்சொல்லை அவர் எந்தப் பொருளில் பயின்றிருந்த போதிலும் கலிங்கத்தில் அவர் கண்ட வெற்றி தர்மவிஜயமன்று என்பது தெளிவு. ஏனெனில், அவ் வெற்றிக்குப் பிறகு அவர் அந் நாட்டைத் தமது பேரரசில் இணைத்துக் கொண்டார் என்பது வரலாறு.

நியாயப்படியும், முறைப்படியும், சிற்றரசர் என்பவர் பேரரசருடைய ஆணைக்கு எல்லா வகையிலும் அடங்கி நடந்து கொள்ள வேண்டும் என்பது விதி. எதிர்பார்க்கப்படும் கப்பத்தைத் தவறாமல் கட்டிவிடவேண்டும்: போர்க்களத்தில் பணமும் ஆளும் அவர்க்குக் கொடுத்து உதவ வேண்டும். முக்கியமான நாட்களில் அரசருடைய அவைக்களத்திற்குச் செல்ல வேண்டும்; அவரது 'அடிமீது தமது முடியை வைத்து'த் தமது கீழ்ப்படிதலை வெளிப்படுத்த வேண்டும். சிற்றரசர்கள் சாசனங்களும் பட்டயங்களும் வழங்கும் போது அவற்றில் தமது பெயருக்குமுன் தமது பேரரசருடைய பெயரையும், பட்டத்தையும் பொறிக்க வேண்டும் என்பது ஒரு மரபு. சிற்சில சமயங்களில் பேரரசருடைய பிரதிநிதி ஒருவர்சிற்றரசரவையில் நிரந்தரமாக இருப்பதுண்டு. சிற்றரசருடைய இளவரசர்கள் பேரரசருடைய மக்களோடு சேர்ந்து படைக்கலப் பயிற்சி ஆகியவற்றை மேற்கொள்ளலும் உண்டு; சிற்றரசர் மகளை பேரரசர் தமது அந்தப்புரத்திற்கு வேண்டுதலும் உண்டு. இதனைப்போலும் பாரிமகளிரை முடிமன்னர் மூவரும் வேண்டினர். சிற்சில சமயங்களில் சிற்றரசர் பேரரசருடைய அமைச்சராக அமைதலும் உண்டு; அன்றியும் சிறந்த அமைச்சர்களுக்கு ஓரளவு நிலப்பரப்புக்களை ஆளக் கொடுத்து சிற்றரசராக்குதலும் உண்டு. இம்மரபுப்படிதான் மாகாண ஆளுநராக நியமிக்கப்படுவோர் பேரரசர் பலவீனம் கண்டு தங்களுடைய சுதந்திரத்தை விளம்பரப்படுத்தி விடுவதுண்டு. இந்த முறையைப் பின் பற்றித்தான் மௌரியர்களுடைய தக்காணத்து மாகாண ஆளுநராய் இருந்தவர்கள் சாதவாகனர் என்னும் பெயரில் தனி அரசோச்சத்தொடங்கினர்; விஜயநகர மன்னரது மதுரை ஆளுநர்களாய் அமர்ந்த நாகம நாயகர் தனிக்கொடி உயர்த்தியதும் இவ்வழியைப் பின்பற்றியதே.

மகாசாமந்தர் என்றும் சிறப்புப்பெயர் கொண்ட சிற்றரசர் வலுமிக்க அரசியல் அதிகாரி. அவர் தன் இச்சைப்படி ஆட்சி நடத்தியதோடு தனக்கெனப் போர்ப்படைகளும் வைத்திருந்தார். கட்டுக் கடங்காமல் மன்னனை எதிர்த்துப் போரிடத் துணியும் சிற்றரசரை விடப் பேராபத்து வேறொன்றும் மன்னனுக்கு இல்லை. பேரரசர் சற்றுப் பலவீனமடையும் போது சிற்றரசர்களும் பலசாலிகளாக விளங்கினால் சிற்றரசர் பேரரசராகமாறி பேரரசர் சிற்றரசராக இழிந்து விடுவது தக்காணத்தில் அடிக்கடி நிகழ்ந்து வந்த அரசியற் செய்தி. கி.பி. 6-ம் நூற்றாண்டிற்குப் பிறகு நிகழ்ந்த தக்காணத்து வரலாற்றினை ஆராய்வார்க்கு இது தெற்றென விளங்கும். புலிகேசி I காலத்திலிருந்து வாதாபியிலிருந்து மேலைச் சாளுக்கியர் ஆண்டு வந்தனர். ஒரு காலத்தில் அதாவது புலிகேசியின் II ஆட்சிக் காலத்தில் தக்காணம் முழுவதையும் ஆண்டதோடு ஹர்ஷ வர்த்தனரை நர்மதை நதியைக் கடந்து தக்காணத்தில் உட்புக விடாமல் தடுத்து காஞ்சிபுரத்துப் பல்லவ மன்னர்களையும் அச்சுறுத்தி வந்தனர். இவ்வளவு வலுவோடும் சிறப்போடும் ஆண்டு வந்த வாதாபிச் சாளுக்யரை தந்திதுர்க்கன் என்னும் ராஷ்டிரகூட மன்னனொருவன் கி.பி. 8-ம் நூற்றாண்டில் கவிழ்த்து விட்டுத் தனது அரசை நிறுவிக் கொண்டான். அவன் நிறுவிய அந்த ராஷ்டிரகூட அரசும், இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு அதே சாளுக்யருடைய சந்ததியாரால் கவிழ்க்கப்பெற்று இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகவே சாளுக்யர்கள் திரும்பவும் மேலைத்தக்காணத்தில் கல்யாணியிலிருந்து ஆட்சி புரிந்தனர். 12-ம் நூற்றாண்டுக் கடைசியில் இவர்களுடைய சிற்றரசர்களில் சிலரான யாதவரும் காகதீயரும், ஓய்சளரும், தத்தம் பிரதேசங்களில் முடிமன்னர் நிலையை எய்திவிட்டமை வரலாறறிந்தது. ஆதலால் பேரரசர் யாவரும் எப்போதும் வலுவுள்ள சிற்றரசர்களிடம் ஐயப்பட்டும் அஞ்சியும் நடந்துவந்திருக்கவேண்டும் என்று காண்கிறது.

பல சமயங்களில் அரசர்கள் ஏராளமான பட்டங்களைப் புனைந்து கொள்வதுண்டு; அதிராஜர், மகாராஜாதி ராஜர் திரிபுவன சக்ரவர்த்தி, மகாமண்டலேசுவர் என்னும் பட்டங்கள் ஒலியளவில் பெருமையோடு விளங்கினவேயன்றிப் பெரும்பாலும் பொருளற்றிருந்தன. பேரரசு குப்த மன்னரான சமுத்ரகுப்தர், அவர் காலத்தில் இலங்கையை ஆண்டுவந்த மேகவர்ணத்தனது சிற்றரசர் என்று கூறிக்கொண்ட போதிலும் பிற் கூறியவர் தனி அரசு ஓச்சியவர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. பேரரசர்கட்கும் சிற்றரசர்கட்கும் இத்தகைய குழப்பமான உறவு முறைகள் நிலவி வந்தமையால் நாட்டிலேயே அடிக்கடி போர்கள் நிகழ்ந்ததோடும், அரசியல் நிலையின்மையும் அராஜகமும் மிகுந்திருந்தன.

# 9. ஆட்சி வகைகள்

பண்டைய இந்தியாவில் முடியாட்சியே பெரும்பாலும் நிகழ்ந்த ஆட்சி வகை. ஆயினும் ஆங்காங்கு பண்டைக் குடிகள் சில அவ்வப்போது தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவராட்சியில் அமைந்திருந்தன. இவற்றைச் 'சிலவராட்சி' (oligarchies) என்பர்; மற்றுஞ் சிலர் 'குடியரசுகள்' (Republic) என்றும் கூறுவர். இவற்றைக் குடியரசு என்று கூறுதலிற்குற்றமின்று என்று பேராசிரியர் ஏ. எல். பாஷம் போன்றோர் கருதுவராயினும், குடியரசு என்னும் சொல் தற்காலத்தில் என்ன பொருள் பயக்கின்றதோ அப்பொருள் அக்காலத்திய சில குடிகளின் சிலவராட்சிக்குப் பொருந்தாது என்பது வெளிப்படை.

வைதிக இலக்கியத்தில் இத்தகைய அரசுகளைப் பற்றிய குறிப்புக்கள் காண்கின்றன. அவற்றைக் கணங்கள் (கூட்டங்கள்) என்பர். பௌத்தர்களுடைய இலக்கியங்களில், வடகிழக்கு கங்கைச் சமவெளியில் இமயத்தின் அடிவாரத்தின் அருகே பல குடியரசுகள் விளங்கி வந்தமை கூறப்படும். இக்குடியரசுகள் அருகேயிருந்த பேரரசர்களுக்கு ஓராற்றான் உட்பட்டவையாயிருப்பினும், உள்நாட்டு விவகாரங்களில் அவை பெரும்பாலும் சுதந்திரமாகவே இருந்தன. புத்தர் பிறந்த சாக்யக் குடி இத்தகைய குடியரசுகளில் ஒன்று. சாக்யர் குடியரசு இந்திய நேபாள எல்லையில் இருந்தது. புத்தருடைய தந்தையான சுத்தோதனரைப் பிற்கால வரலாற்றாசிரியர்கள் பெரிய மன்னராகவும் புத்தரை ஒரு இளவரசராயும் வருணித்துள்ளனராயினும், உண்மையில் சுத்தோதனர் ஒரு குடித்தலைவராகவே இருந்திருக்க வேண்டும். அத்தலைமைப் பதவியை அவர் சாக்யக் குடி அவ்வப்போது தெரிவிக்கப்பட்ட மக்களுடைய ஆதரவோடுதான் ஏற்று நடத்தியிருக்க முடியும். இவ்வாறு குடியின் பொது விவகாரங்களை விவாதிக்கப் பல குடும்பத் தலைவர்கள் ஒன்று கூடி ஆலோசித்து முடிவு காண்பதுண்டு.

மௌரியர் ஆட்சி மகதத்தில் தொடங்கியதற்கு முன்பே அதற்கு வடபால் அமைந்திருந்த சிலவர் ஆட்சிகளில் மிக வன்மை வாய்ந்தது விரிச்சியர் குடிக்கூட்டமே (Tribal Confederacy) யாம். இக் கூட்டத்தில் மிக முக்கியமானது விச்சாவியருடையதே. இவ்விச்சாவியரைத் தமது ஆதிக்க மண்டலத்திற்குள் அடக்க மகத மன்னர் அஜாத சத்ரு நெடுநாள் முயன்றார். விச்சாவியர் 'சிலவராட்சி'யில் ஏழாயிரத்து எழுநூற்று ஒரு மன்னர்கள் இருந்ததாக ஒரு சான்று கூறும். இதற்குப் பொருள் அவர்கள் குடியில் அத்துணைக் குடும்பங்கள் இருந்தன. அவற்றின் தலைவர்களும் அத்துணைப் பேர், அவர்கள் யாவரையுமே அந்நாட்டு மன்னர் என்று அவர்கள் கணக்கிட்டனர் என்பதே. முப்பத்தாறு குடித்தலைவர்கள் சேர்ந்து விச்சாவியர், மல்லர் முதலிய குடிகளின் விவகாரங்களை மேற்பார்த்தனர் என்று சில சான்றுகள் கூறும். இக்குடியாட்சித்தலைவர் ஆயுட் காலத்துக்குத் தலைவர் என்று தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பர்; பெரும்பாலும் பெருத்த ஆட்சேபணை யாதொன்றுமில்லையாயின், அவ்வரசு அவருடைய மகனையே சார்ந்திருக்கும்.

கௌதம புத்தர் சாக்யர் குடியைச் சார்ந்தவர் என்பதைக் கண்டோம். அவ்வகைக் குடியாட்சிகள் அக்காலத்தில் சுற்றுப்புறத்தில் பரந்திருந்த சமூக, பொருளாதார நிலைமையால் பெரிதும் பாதிக்கப்பட்டுப் பிற பெரிய அரசுகளால் விழுங்கப்படாமல் இருப்பதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து வந்தன. சாக்யர்களும் விரிச்சிகளும் புத்தர் இறந்த பின் அருகிருந்த பேரரசுகளால் வெல்லப்பட்டுத் தம் சுதந்திரத்தை இழந்து விட்டனர்.

வடமேற்கு இந்தியாவில் இருந்த குடியாட்சிகள் கிழக்கிந்தியக் குடியாட்சிகளைப் போலல்லாமல், பேரரசுகளால் தாக்கப்படாமல் தப்பிப் பிழைத்துச் சில காலம் வாழ்ந்தன. இத்தகைய குடியாட்சிகளை ஒழிப்பதற்குச் சிறந்த வழிகளை அர்த்த சாத்திரத்தில் கௌடில்யர் விவரித்துள்ளார். அக்குடியிலுள்ள குடும்பத்தலைவர்களிடையே உட்பகைகளைக் கிளப்பிவிட்டு ஒற்றுமையைக் குலைக்கும் துரோகச் செயல்களைச் செய்தேனும் அவற்றின் வலுவை ஒடுக்க முயலலாம் என்பது அர்த்த சாத்திரத்தின் அறிவுரை. வடமேற்கு இந்தியாவில் கி. மு. நான்காம் நூற்றாண்டில் அலெக்ஸாந்தரால் வெல்லப் பெற்ற மிகப் பல குடியினர் இவ்வகைக் குடியாட்சியினரே. அவற்றையெல்லாம் அர்த்த சாத்திரக் கோட்பாட்டின்படித் தான் மாசிடோனிய மன்னர் வென்றாரா என்பது கிரேக்க வரலாற்றாசிரியர்கள் நூல்களிலிருந்து அறிய முடியவில்லை. நேரடியாகப் போரிட்டுப் போர்த் திறத்தி

ளுலேயே அவர்களை அம்மன்னர் வென்ற வரலாறே வெளிப்படு கின்றது. அஜாதசத்ரு என்னும் மகத மன்னருடைய அமைச்சர் வர்ஷகர் என்பவர் விரிச்சியர் நாட்டை அடிப்படுத்து முன் அம் மக்களிடையே உட் பகைகளை வளர்த்து அவர்களைப் பல வீனப்படுத்திய வரலாறு பௌத்தர் கதைகளில் வெளிப்படு கின்றது.

இத்தகைய குடியாட்சிகள் கி. பி 5-ம் நூற்றுண்டு வரை ஆங்காங்கு நடை முறையில் இருந்தன என்பது பல சாசனங்களாலும் சில கல் வெட்டுக்களாலும் அறியக் கிடக்கின்றது. மகாபாரதத்துள்ளும் குடியாட்சிகளைப் பற்றிய குறிப்புக் கிடைக்கின்றது. பண்டைக் காலப் பிற்பகுதியில் நாம் கேள்வியுறும் மிக முக்கியமான சிலவராட்சி யௌதேயர் சிலவராட்சியேயாம். 'யௌதேயர் குடிவெல்க' என்று பொறிக்கப்பட்ட காசுகள் பல வட இராசபுதனத்திலிருந்து கிடைக்கின்றன. அவர்களிடையேயும் 'மகாராஜா, மகாசேனுபதி' முதலிய பட்டங்கள் காணப்படுகின்றன. அம் 'மகாராஜா' 'யௌதேய குடித்தலைவர்' என்று போற்றப்பட்டார்.

மாளவர் என்று மற்ெருரு சிலவராட்சி கேள்வியாகின்றது. அலெக்ஸாந்தர் படையெடுப்புக் காலத்தில் வடமேற்கு இந்தியாவில் (பஞ்சாபில்) இருந்ததாகச் சொல்லப்படும் 'மல்லர் என்போர் இம்மாளவராதல் கூடுமோ என்று சிலர் ஐயுறுவர். இஃது உண்மையாயின் பிற்காலத்தில் இவர்கள் சற்றுத் தென்பால் குடி பெயர்ந்திருக்க வேண்டும். அங்கிருந்து தென்கிழக்கில் மேலும் பெயர்ந்து இப்போது மாளவம் என்று நாம் அறியும் பிரதேசத்திற்கு வந்திருக்க வேண்டும். இந்த மாளவர்கள் தாம் விக்ரம அப்தத்தைத் தோற்றுவித்திருக்கவேண்டும் என்று சில வரலாற்றுசிரியர்கள் கருதுவர்.

பேரரசுக் குப்தர்கள் காலத்தில் வட இந்தியா, தக்காணம் ஆகிய பிரதேசங்களிற் பெரும் பகுதியை சமுத்ரகுப்தர், சந்திர குப்தர் II என்போர் வென்று தம் தம் பேரரசில் அடக்கிய பின் குடியாட்சிகள் மரபு இந்தியாவினின்றும் மறைந்தது. தக்காணத்தின் தென்பகுதியிலும் தென் இந்தியாவிலும் குடியாட்சி எப்போதும் நிலவியதாகத் தெரியவில்லை. சிலவராட்சி குடியாட்சி ஆகியவற்றைப் பற்றிய குறிப்புக்கள் திருக்குறளிலோ, சங்க இலக்கியத்திலோ கல்வெட்டுக்கள் வாயிலாகவோ நமக்குத் தெரிவதில்லை.

# 10. அரசைச் சூழ்ந்த அறிவுரையாளரும் ஆட்சி அதிகாரிகளும்

ஆட்சி என்பது கடினமான வேலை; பொறுப்புள்ளது. எவ்வளவு திறமை சாலியாக இருப்பினும் ஒருவராலேயே செலுத்தக் கூடிய தன்று. இதற்குப் பல காரணங்கள் உள. ஒன்று, அரசின் பெயரால் நடத்தப்பெறும் ஆட்சியின் தன்மை, எவ்வளவு சிறிய அரசாயினும் பலவகை அலுவல்களை ஏராளமான அளவில் தன்னுள் அடக்கும் ஆதலின்; மன்னன் ஒருவனே ஆட்சியைத் தனிப்படச் செலுத்த முடியாது; இரண்டாவது, நீதி முதலிய சிறப்புத் துறைகளில் சாத்திரங்களின் முடிவுகள் உணரப்படாமல் ஆளுதல் செங்கோல் ஓச்சுதல் ஆகாது. அவற்றைக் கற்று உணர்ந்து எடுத்து ஓதுவார் தேவைப்படுவர்; மூன்றுவது, மக்களுடைய தேவைகளையும், விருப்பு வெறுப்புக்களையும் ஓரளவு அறிந்து கொள்ள வேண்டுமாயின், அவற்றை மன்னர்க்கு எடுத்துக் கூற அறிவுரையாளர்கள் வேண்டப்படுவர். இக்காரணங்களாலும் பிற வேறு காரணங்களாலும் எந்த மன்னரும் தாம் ஒருவராகவே ஆட்சி செய்ய முடியாது என்பது புலனாகும்.

மந்திரி பரிஷத் : அர்த்த சாத்திரத்தில் 'ஒற்றை யாழி சுற்ற இயலாது' என்று கூறப்பட்டுள்ளது. ஒற்றையாழி சுற்ற இயலும் என்பது ஒரு புறம் இருக்க, பரிதியின் ஓராழியைப் பற்றிப் புலவர் கூறுவதும், இந்திய மன்னராட்சியை ஓராழி செலுத்தும் ஆட்சியாகவே ஆசிரியர்கள் கூறுவதும் காண வேண்டும். இக் கூற்றுக்குப் பின் அதை உதாரண முகத்தான் விரிக்கும் பொருட்டு 'மன்னனும் தனியாட்சி செலுத்த முடியாது ஆதலால், மன்னன் சில அறிவுரையாளர்களை நியமித்துக்

கொண்டு அவர்களுடைய அறிவுரைகளுக்குச் செவி சாய்க்க வேண்டும்' என்றும் கூறுவர்.

இவ்வறிவுரையின் படியும், நிர்ப்பந்தங்களை யொட்டியும் மன்னர்கள் அறிவுரையாளர்களைத் தேர்ந்து கொள்வதுண்டு. இவ்வாறு தேர்ந்து கொள்ளும் அமைச்சர்களை மிகுந்த கவனத்துடன் நியமிக்க வேண்டும் என்பது அறநூல் விதி. இவ்வமைச்சர் குழாத்திற்கு 'மந்திரி பரிஷத்' என்பது பெயர். ஆனால், இவ்வாறு நியமிக்கப்பட்ட 'மந்திரி பரிஷத்'தின் அலுவல்கள் யாவை, அவர்கள் கூறும் அறிவுரைகள் எவ்வளவு தூரம் மன்னனைக் கட்டுப் படுத்தும் என்னும் வினாக்கட்குப் பல் வேறு விதமான விடைகள் தரப்படுகின்றன. இந்த வினாக் களுக்கு இரண்டு வகையில் விடை கூறலாம். முதற்கண் சாத் திரங்களை வைத்து அவை கூறுவன யாவை? அவையே மந்திரி பரிஷத்தின் அலுவல்கள்; அவர்களுக்கும் மன்னனுக்கும் எத்த கைய உறவு இருத்தல் வேண்டும் என்று அவை கூறு கின்றனவோ அவையே உண்மையில் நிலவிய உறவு என்று கொள்வது. மற்றொன்று வரலாற்று வாயிலாகக் காண்டல். முந்தியது நூலாசிரியர்களுடைய விருப்பங்களையும் துணிவு களையும் தோற்றுவிக்கும். பிந்தியது உண்மையில் அரசியல் வாழ்க்கை இப்படியிருந்தது என்பதைக் காட்டும்.

முக்கியமாக மந்திரிகளுடைய வேலை அரசன் தவறு செய்வ தாகத் தங்களுக்குத் தோன்றிய காலங்களில் மன்னனுக்கு அறிவுரை பகர்வது, மன்னனே விரும்பிக் கேட்கும் போது அவனுக்குத் தோன்றிய ஐயங்களை நீக்குதல், மற்றும் ஆட்சிப் பணியில் மன்னனுக்கு உதவி புரிதல். மந்திரிகள் தமது கருத் துக்களைத் தாராளமாக அச்சமின்றியும் வேறு தடையின்றியும் வெளிப்படையாகவும் மன்னனுக்கு எடுத்துரைக்க வேண்டும் என்பதும் இயன்ற வரையில் மன்னர் அவ்வுரையை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதும் அறநூல் விதி. உண்மையில் மந்திரி பரிஷத்துக்கள் மன்னனிடம் மிகுந்த செல்வாக்கோடு இயங்கின. மன்னனுக்கு ஆட்சி செலுத்துவதில் ஏதேனும் வசதிக்குறைவு ஏற்பட்டாலன்றி ஆட்சியில் சிறு விவரங்களைக் கவனிக்க முடியாத நிலையில் மன்னனுக்கு வேலையும் பொறுப்பும் இருந்தால் அவன் சார்பில் அமைச்சர் அவ்வலுவல்களைப் பார்க்கும் மரபும் உண்டு; ஆனால் இவற்றிற்கெல்லாம் என்ன பொருள் ?

இறைமை : இவ்வினாவிற்குப் பொருள் கூறுமுன் 'இறைமை' என்னும் கருத்துக்குச் சற்று அடிப்படை நிலையில் பொருள்

காணவேண்டும். இறைமை என்பது 'இறை' (அதாவது மன்னனுடைய) யின் ஆதிபத்யத் தன்மை. அரசு என்பது 'இறைமை' நிறைந்த ஒரு நிலையம். இது அரசை நடாத்தும் அதிகாரிகளின் தொகையன்று. இவ்வதிகாரிகள் அவ்வப்போது அதிகாரத்தினின்றும் மாறும் தகைமையர். இவர்கள் சேர்ந்து அன்றாடம் நடத்துவதுஅரசு.(அரசாங்கம்)இவ்வரசின் ஆதிபத்தியத்தன்மை தான் இறைமை அரசின் முக்கியமான தன்மை. அது சமூகத்தில் மற்ற எல்லா நிலையங்களையும் விட மிகுந்த இறைமை. பெற்று விளங்குவது தான். தனி அரசர் செங்கோல் செலுத்தும் ஒரு அரசியல் ஏற்பாட்டில் அவ்வரசர் இறை எனப்பட்டு முழு இறைமையோடு விளங்குவார். ஒரு சமூகத்தில் மன்னன் 'இறை' யாயின் மற்ற எல்லோரும் எல்லா நிலையங்களும் அவருடைய 'இறைமை'க்கு உட்பட்டே இருக்க வேண்டிவரும். அரசியல் சமூகத்தில் மக்களாட்சி நடைபெற வேண்டும் என்று விரும்புவோர் 'மக்களே இறை, அவர்களுக்கே ஆதார இறைமை உண்டு' என்று கருதுவர். சமூகத்தில் அரசனுக்கும் இறைமை இருக்கக் கூடாது, (ஏனெனில் இது ஒரு வரம்பற்ற ஆட்சிக்கு இடமளிக்கக்கூடும்) பொது மக்களுக்கும் இருத்தல் தகாது (இது திறமையற்ற ஆட்சிக்கு அடிகோலும்) என்று கருதுவோர் பணத்தாலோ, பிறப்பாலோ, கல்வியாலோ உயர்ந்தோர் (இவர் எந்தச் சமூகத்திலும் ஒரு சிலராகவே இருப்பர்) பால் அரசு நிலைத்தல் வேண்டும் என்பர். இவ்வகை ஆட்சி தோன்றினால் இது உயர்ந்தோர் ஆட்சி எனப்படும். இவருள்ளும் ஆதிபத்திய ஆசை மேலீட்டால் ஒரு சிலர் ஆட்சியைக்கைப்பற்றினால் அது 'சிலவராட்சி'யாகி ஒருவகைக் கொடுங்கோன்மையிலேயே முடியும். இனி ஆதிபத்யம் என்பதை எந்த ஆட்சியிலும் பலர் பகிர்ந்து கொள்ள முடியுமா? எனில் முடியாது என்பதே விடை. ஏனெனில் வெளிப்படையாகப்பலர்சேர்ந்து ஆட்சி நடத்துவது போலவும் சிலரது அறிவுரைகளைக் கேட்டு ஒருவர் ஆட்சி நடத்துவது போலவும் தோன்றினாலும், இறுதியில் எந்த அரசியல் பிரசினையிலும் முடிவு எடுப்பவர் ஒருவராகவே தான் இருக்க முடியும். பல காரியங்களையும் ஆராய்ந்து பார்த்து மற்றவர்களுடைய யோசனைகளைக் கேட்டுச் சில நிர்ப்பந்தங்களுக்கு உட்பட்டு முடிவெடுத்தாலும், ஒருவர் முடிவெடுக்கும் போது அவ்வொருவர்தாம் அம்முடிவிற்கு கருத்தாவாகவும் பொறுப்பாளியாகவும் இருக்க முடியும். பொறுப்பாட்சி என்பது முடி வெடுப்பவர் வேறு சிலருடைய கருத்துக்களைக் கேட்டறிந்து அக்கருத்துக்களை யொட்டியே முடிவெடுத்தாக வேண்டும் என்று சட்ட முறைப்படி ஒரு கண்டிப்பு அல்லது கட்டாயம் இருக்குமானால், அப்போது 'வரம்பிற்குட்பட்ட

ஆட்சி' அல்லது 'சட்ட அமைப்பிற்குட்பட்ட ஆட்சி' ஒன்று நடைபெறுவதாகக் கூறலாம். பண்டைய இந்திய மன்னர்களுக்கு அறிவுரை கூறிய அமைச்சர், புரோகிதர் முதலானோர் அம்மன்னர்கட்கு அறிவுரை கூறமுடியுமேயன்றி, அவ்வுரையைக் கேட்டுத்தான் அம்மன்னர்கள் நடந்து கொள்ள வேண்டும் என்று எந்தச் சட்டத்தையும் எடுத்துக்காட்டி உறுதியாகக் கேட்க முடியாது.

தவிரவும், அமைச்சர் புரோகிதர், சேனபதியர் ஆகிய பல முக்கியமான அதிகாரிகளும் தத்தம் அலுவல்களைப் பரம்பரை பரம்பரையாக மேற்கொண்டு பார்த்து வந்தார்களே யல்லாமல், பண்டைய சீனவிலும் தற்கால மக்களாட்சி அரசுகளிலும் போல, போட்டித் தேர்வுகளை நடத்தித் திறமை சாலிகளைப் பொறுக்கி எடுக்கும் பான்மையில்லை என்பதைத் தெளிவாகக் காண வேண்டும். ஆதலால், அறிவுரையாளர்கள் குழுமிய மந்திரி பரிஷத்தும் மற்றச் சிறு அதிகாரிகளும் மன்னரைப் போலவே பரம்பரை பரம்பரையாக அலுவல் பார்ப்பர்; எனின், அரசின் ஒவ்வொரு பகுதியுமே பரம்பரைத் தொழிலை மேற்கொண்டது என்று கூறலாம். இந்து சமுதாயத்தின் ஒவ்வொரு பகுதியுமே பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததாகலின் ஆட்சியின் பகுதிகளும் அப்படியே அமைந்து விட்டதில் வியப்பில்லை.

பாரம்பரியம் என்பது ஒரு புறமிருக்க, பலவீன மன்னனைத் தொடர்ந்து அவனது அமைச்சன் அரசைக் கைப்பற்றி ஆளுவது என்னும் மரபும் அறியப்படாத தொன்றன்று. புராணங்களிலும் காப்பியங்களிலும் இத்தகைய நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. உதாரணமாக, நளன், உதயணன், சீவகன் ஆகியோர் கதைகளில் மந்திரியால் மன்னனுக்குத் தீங்கு விளையும் மரபு வெளிப்படுகின்றது. மௌரிய வமிசத்தை நீக்கி ஆட்சியைக் கைப்பற்றிய புஷ்யமித்திர சுங்கர், இதற்கு ஓர் உதாரணம். ஈதிவ்வாருக மன்னரது அலுவலாளர்கள் பரம்பரையினின்றும் தோன்றிச் சிலகாலம் அதற்குப் போட்டியாகவும் இருந்து பிறகு மன்னர் பரம்பரையைவிட அமைச்சர் பரம்பரை சிறந்தது என்கிறவரை வளர்ந்து விடும் பாரம்பரியமும் உண்டு. இதற்குச் சிறந்த உதாரணம், பான்ஸ்லே வமிசத்தில் வந்த சிவாஜியின் சந்ததியார்கள் பேஷ்வாக்கள் என்னும் அந்தண அமைச்சர்களை அதிகாரத்தில் அமர்த்தினர்; இப்பேஷ்வாக்கள் நாளடைவில் பான்ஸ்லேக்களைவிட வலிவு மிக்கவர்களாகத் திகழ்ந்தமை மராட்டியர் வரலாற்றிலிருந்து தெளிவாம். விசய நகரப் பேரரசரான கிருஷ்ண தேவராய

ருடைய மருமகப் பிள்ளையான ராமராயர் என்பவர் அப் பேரரசின் பெருமைகளை ஒருவாறாக ஒழித்துக் கட்டிய தலைக் கோட்டைப் போரில் விசயநகரத்தின் பெருமையையும் தன் உயிரையும் இழந்தவர். ஆனால், அவர் விசயநகரத்தின் பேரரசரல்லர். அப்போது அப் பேரரசின் மன்னராயிருந்த சதாசிவ ராயரைவிட அதிக ஆதிக்கம் செலுத்தியவர். தலைக் கோட்டைப் போரை இழந்தபின் அச்சதாசிவராயரை ராமராய ரின் உடன் பிறந்தான் கொன்று விட்டதும் நாமறிந்ததே

அரசர்களில் பலவகையினர்: பேரரசர், சிற்றரசர், முடி மன்னர், குறுநில மன்னர், ராஜன், மகாராஜன், ராஜாதி ராஜன் என்றெல்லாம் இருந்ததுபோல, அமைச்சர்களிலும் மந்திரி, மகாமந்திரி முதலியோர் இருந்தனர். புரோகிதர் என்பவர் மன்னரவையில் ஓர் சிறந்த அறிவுரையாளர். எந்த முக்கியமான அரசியல் விஷயத்தைப்பற்றியும் ஓர் முடிவு காண் பதற்கு முன்பு புரோகிதரோடு தனிமையில் கலந்தாலோசிக்க வேண்டும் என்பது விதி. பிற்காலத்தில் 'திவான்' என்னும் அதிகாரி நிலவரி முதலிய வரிகளையும் வரிவிதிப்புக்களைப் பற் றியும் கவனிக்க வேண்டி யிருந்ததுபோல, பண்டைக்காலத் திலும் வரிவசூலிக்கும் அதிகாரிகள் இருந்தனர். அவர்களுக்கு அர்த்தசாத்திரத்தில்ஸன்னிதாதர்ஸமாஹர்த்தர்என்னும்பெயர் கள் வழங்கும். இவர்களுடைய அலுவல்களில் சில வேறுபாடுகள் இருப்பினும், பெரும்பாலும் இவர்கள் தொழில் வரி வசூலோடு தொடர்புடையதே. பெரும்பான்மை மக்கள் விவசாயிகளாக இருந்த நாட்டில் நிலச் சட்டங்களும், நில வரிவசூல் பிரசினை களுமே முக்கியமாயிருந்தன. மக்களுக்கு நிலப்பிரசினைகள் முக்கியமானவையா யிருப்பினும் மன்னனுக்குப் போரே முக்கிய பிரசினையாயிருந்தது. போரைத் தவிர்ப்பதற்கு அமைச்சர்கள் அக்காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. பயனளிக்கு மாயின் போரிடுவதில் தவறில்லை என்பதே அவர்கள் கருத்து. நிரைகவர்தல் முதலிய ஆத்திரமூட்டும் செயல்களில் ஈடுபட்டுப் போரைத் துவக்கிவிட்டு அதனாற் பயனடையப் பார்ப்பதே அக்காலத்து மரபு. மந்திரிகளுக்கு இருவகைத் தொழில்கள் உண்டு. ஒன்று நட்பைப் பிரித்தல்; மற்றொன்று பகையை ஒற் றுமைப் படுத்தல். இவ்விரண்டினையும் சேர்த்து 'ஸந்திவிக் ரகம்' என்பர். இது பஞ்சதந்திரங்களில் ஒன்று. இதனைச் சிலர் 'சாந்தி விக்ரகம்' என்று கொண்டு 'அமைதியை நிலை நாட்டுதலும்' 'போரை மூட்டுதலும்' என்று கூறுவர். அமை தியை நிலைநாட்டுதற்காக ஒரு அமைச்சு அக்காலத்தில் வழங் கியதாகக் கருத இடமில்லை. 'சந்திவிக்ரகர்' என்னும் இரா

னுவ அமைச்சரைப் பற்றிப் பேரரசு குப்தர் காலத்திற்குப் பிறகுதான் கேள்வியுறுகிறோம். சந்திவிக்ரகம் என்பது ராஜ தந்திரத்தின் பகுதியாகும். அத்துறை ஒன்றில் மட்டும் அவ் வமைச்சர்கள் ஈடுபட்டிருப்பராயின் அவர்களை வெளி விவகார அமைச்சர்கள் என்றே கூறலாம். ஆனால், அவர்கள் போர்க் களம் புக்கு மன்னற்காகத் தண்டு செலுத்துதலும் உண்டு; ஆதலால், 'இந்த அமைச்சர் இந்த அலுவலைத்தான் பார்க்க வேண்டும்; பிற அலுவல்களைப் பார்க்கப் பிற அமைச்சர்கள் இருப்பர்' என்று வரையறுத்துக் கூற இயலாத நிலையில் அமைச்சரவையும் அதன் அலுவல்களும அழைக்கப் பட்டிருந் தன. உண்மையில் மன்னனிடம் அமைச்சுத் தொழில் பூண்ட வர்கள் எல்லோரையுமே அவனுடைய ஏவலாளர்களாகத் தான் கருதவேண்டுமேயல்லாமல் பிறிதன்று. அவ்வப்பொழுது மன்னன் எந்தக் கட்டளைகளை இடுகின்றானோ அவற்றை நன்கு நிறைவேற்ற வேண்டும் என்பதே அதிகாரிகளுடைய குறிக் கோளாயிருத்தல் வேண்டும். இன்றுபோல் தத்தமக்கு இன்ன வேலை யென்று வரையறுக்கப்பட்ட 'அதிகாரவர்க்கம்' ஒன்று அக்காலத்தில் இல்லை என்றே கொள்ளலாம். சில அமைச்சர்களும் போரில் ஈடுபடுவாராயினும், சேனாதிபதி என்று போர்த்தலைமைக்கு என்றே ஏற்பட்ட அதிகாரிகளும் இருந்தனர். நீதித்துறையில், மன்றங்களில் தலைமை வகித்து வழக்குகளைக் கேட்டு, நீதி வழங்குவோர் இருந்தனர். இவர் களைத் தவிர மன்றங்களில் நடைபெறும் நடவடிக்கைகளைக் கேட்டு எழுதியும், விவகாரங்களைப் பற்றிய குறிப்பு வைத்தும், அரசின் ஆட்சி ஆவணங்களையும் பதிவேடுகளையும் பத்திரங் களையும் பாதுகாத்து வைத்தும், ஆட்சிக்கான கடிதத் தொடர்பு கொண்டும் ஆட்சி அலுவல்களைப் பார்க்கும் அதி காரிகளும் இருந்தனர். இத்தகையோரை ஆட்சித் துறைகளுக் குச் செயலாளர்கள் என்று கூறலாம்.

பண்டைய இந்திய ஆட்சியில் மன்னனுக்கும் அவனுடைய அமைச்சர் குழுவிற்கும் சட்ட மியற்றும் வேலை இல்லை. அதா வது தற்காலத்தில் பாராளுமன்றங்கள் சட்ட மியற்றும் முறை யில், அவர்கள் சட்டமியற்றியது இல்லை. குடிமக்களின் வாழ்க்கை முறையை, தரும சாத்திரங்களும் வைதிக முதலிய சமய இலக்கியங்களும் நிர்ணயித்து விட்டமையாலும், மன்ன னும் தார்மிக ஒழுங்கிற்குக் கட்டுப்பட்டவராதலாலும், அந்தத் தருமத்தை நிலைபெறச் செய்வதும் அதன் வரம்பிற்குட் பட்டு நடப்பாரைப் பாதுகாப்பதும் அந்த வரம்பை மீறுவாரை ஒறுப்பதும் அவனுடைய ராஜதரும மாதலாலும், அந்தத்

தருமத்தை மாற்றும் அல்லது மறுக்கும் முறையில் எந்த உத்தரவையும் பிறப்பிக்கும் உரிமை மன்னனுக்கும் இல்லையாதலாலும் தற்காலத்திற் போலச் சட்ட மியற்ற அவர்களால் இயலாது. ஆதலால், மன்னனுக்கு 'இறைமை' (Sovereignty) இல்லை என்றே கூடக் கூறலாம். 'தார்மிக ஒழுங்கு அல்லது ஏற்பாட்டிற்குத்தான் இந்து சமுதாயத்தில் 'இறைமை' இருந்தது. பௌத்த, சைனக் கோட்பாடுடையவர்க்கும் அவ்வவர் சமயதருமப்படியே மக்கள் ஆட்சி புரியவேண்டி யிருந்ததால், அவர்கள் ஆட்சி நடந்த காலத்திலும் 'இறைமை' மன்னனிடத்தில் இல்லை எனலாம். சமயத் தொடர்பு சிறிது மின்றி, கேவலம் உலகியலை மட்டும் குறியாகக் கொண்டு ஆட்சி புரிவோர்க்கே தற்கால முறையில் சட்ட மியற்றுதல் என்பது பொருந்தும்.

மேற்கூறிய காரணங்களால் அக்காலத்து இந்து பௌத்த மன்னர்கள் இட்ட சட்டங்கள் ஆதார தருமத்தை யொட்டி அவர்கள் பிறப்பித்த உத்திரவுகளேயாம். இவற்றைக் 'கட்டளை' (edicts) எனல் மரபு; சாசனங்கள் என்றும் இவற்றைக் கூறுதல் உண்டு. இவ்வாறு மன்னன் பிறப்பித்த உத்திரவுகளை அதிகாரிகளுக்கு அறிவிக்கவும் மக்களுக்குத் தெரிவிக்கவும் பல செயலாளர்களும் (Secretaries) வரைவாளர்களும் (Clerks) இருந்தனர். இவ்வரைவாளர்கள் எழுதும் கடிதங்களைச் சரிவரத் தவறில்லாமல் எழுதுகின்றனரா என்று பார்க்க வேறு சில அதிகாரிகள் இருந்தனர். மன்னர்கள் பொது நிலையங்களுக்கோ, தனிமனிதர்களுக்கோ எழுதிக் கொடுத்த சாசனங்களைப் பொறிப்பதில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டது. கல்லில் பொறிக்கப்பட்ட அறக்கட்டளைகளைத் தவிர, செப்பேடுகளில் பொறிக்கப் பட்டவையும் இருந்தன.

அரசில் ஆட்சி செலுத்திய உயர் அதிகாரிகளை 'மகாமாத்ரர்' என்று அறிந்தனர். பேரரசு குப்தர் காலத்திற்குப் பின் 'குமார மாத்யர்' என்று ஒரு வகை அதிகாரிகள் கேள்வியுறுகின்றனர். ஒவ்வோர மயங்களில் இவ் வதிகாரிகளை இரண்டு வகையாகப் பிரிப்பதுண்டு. ஒரு வகையினர் அரசியல் ஆட்சியில் கொள்கைகளை நிர்ணயிக்கச் சிந்தனையி லீடுபட்டிருக்கும் 'அறிவியல்' அமைச்சர்கள்; மற்ற வகையினர் முதல் வகுப்பினர் நிர்ணயித்த கொள்கைப்படி ஆட்சியை நடைமுறைப் படுத்தும் 'செயலியல்' அமைச்சர்கள். முந்தியவர்களை 'மதிசச்சிவாக்கள்' என்றும் பிந்தியவர்களைக் 'கருமசச்சிவாக்கள்' என்றும் கூறுவதுண்டு.

'அர்த்த சாத்திரத்'தில் எண்ணிறந்த கருமவினைஞர்கள் கூறப்படுகின்றனர். மன்னர் தனியுடைமையாக அனுபவித்த நிலங்களை மேற்பார்க்கும் அதிகாரி, காடுகள், காட்டில் விளை பொருள்கள், அரசிற்குரிய விலங்குகள் ஆகியவற்றை மேற் பார்ப்பவர்கள்; தரிசு நிலங்கள், கருவூலம், தாதுக்கனிகள் முதலியவற்றை மேற்பார்ப்போர்; பொற்கொல்லர் தலைவர், களஞ்சியங்களைப் பார்வை யிடுவோர், இறைச்சிக் கொட்டில், கப்பற் போக்குவரத்து, தரைச்செலவு, கடற் செலவிற்கான அனுமதிச் சீட்டுக்கள் வழங்குவோர், சுங்கவரி, தீர்வைகள் என்பவற்றைக் கணக்கு வைப்போர் என எண்ணிறந்த பிற அதிகாரிகள் இருந்தனர். இவர்களேயன்றி மக்களுடைய இழிந்த விருப்புக்களைப் பூர்த்தி செய்யும் கள், கவறு ஆகிய வற்றையும் பொது மகளிர் என்போரையும் பொறுத்த விதி களை ஆக்கி நடைமுறைப்படுத்தும் பொறுப்புடைய அதிகாரி களும் இருந்தனர்.

மௌரியர் ஆட்சிக் காலத்தில் பொது மக்களுடைய வாழ்க்கை அரசால் பலவகையிலும் நெறிப் படுத்தப்பட்டது, பல வாழ்க்கைத்துறைகளிலும் அரசு தலையிட்டது. பிற்காலத் திலும் இவ்வரசு தலையீடு முற்றிலும் மறைந்து போக வில்லை. காட்டு விளைபொருள்கள்—யானைகளிலிருந்து (முக்கியமாக அவற்றின் தந்தம்) மரங்கள் வரை—,கடல் விளை பொருளான முத்துக்கள், உப்பளங்கள் முதலியவை யெல்லாம் மன்னனுக்கே சொந்தமா யிருந்தன. மன்னனுக்கே சொந்தமாயிருந்த ஏராளமான நிலங்களைச் சாகுபடி செய்வதற்காகப் பிறருக்குக் குத்தகையாக விடும் மரபிலிருந்து பிறந்ததாயிருக்கக் கூடும். பிற்காலத்தில் எழுந்த 'நில இடையீட்டாளர்கள்' (Interme- diaries in land). நூல் நூற்பு, துணி நெய்தல் என்னும் தொழில்களை அரசே சில சமயங்களில் மேற்கொண்டது.

இவ்வதிகாரிகளுக்குச் சம்பளம் பொருளாக வேனும் காசாகவேனும் கொடுக்கப்பட்டதாயினும், காசாகக் கொடுக்கப் படும் மரபு மௌரியர் காலத்திலேயே ஏற்பட்டு விட்டது. அர்த்த சாத்திரத்தில் அந்தந்த அதிகாரிகளுக்கு எவ்வளவு சம்பளம் தரப்படவேண்டும் என்று மிக விரிவாகக் கூறப்பட் டுள்ளது. அக்காலத்தில் மிகவும் அதிகமாக வழங்கிய காசு 'பணம்' என்பது; தென்னாட்டில் 'பொன்' என்னும் காசு வழங் கியது; காணம் என்பது ஒருவகை நாணயம் அல்லது காசாக வழங்கிய தங்கக் கட்டி. பணம் என்பது வெள்ளிக் காசாக வாவது செப்புக் காசாகவாவது இருக்கக் கூடும் என்று ஊகிக்

கப்படுகிறது. மன்னனுடைய முக்கியமான அறிவுரையா ளர்க்கும், புரோகிதர்க்கும், மூத்த மகனுக்கும், பட்டமகிஷிக்கும், தாயாருக்கும், ராஜ குருவிற்கும் மாதந்தோறும், 48,000 பணம் ஒவ்வொருவருக்கும் சம்பளமாகத் தரப்பட்டது என்பதை நோக்குங்கால், பணம் என்பது தங்கக்காசாக இருந்திருக்க முடியாது என்பது தெளிவு. அது வெள்ளியாக இருந்திருக்க லாம். இவ்வளவு அதிகமாகப் 'பணம்' சம்பாதித்த அரண் மனை முக்கிய அலுவலர்களும் உறவினரும் ஒருபுறம் இருக்க, அவ்வரண்மனையிலேயே மிகக் குறைந்த சம்பளம் வாங்கியவர் களும் இருந்தனர். வேலைக்காரர்கள், கூலிக்காரர்கள், மெய் காப்பாளர்கள் என்போர் மாதம் அறுபது பணம் தரப்பட் டனர். ஆனால், மன்னர்க்குச் சொந்தமாயிருந்த விளைநிலங் களில் கூலி வேலை பார்த்த பணியாட்களுக்கு ஒன்றேகாற் பணமும் ஆதாரவாழ்க்கைக்கு வேண்டிய சில பொருள்களும் தரப்பட்டன. ஒரு புறம் 48,000 பணம் வாங்கியவர்களும் மற் றொருபுறம் $1\frac{1}{4}$ பணம் வாங்கியவர்களும் இருந்த சமூகத்தில் சமூக நியாயம் பெரிதும் இருந்திருக்க முடியாது. ஏழை பணக் காரர் இடைவீடு மிகப் பெரியதாகவே இருக்க வேண்டும். மௌ ரியர் ஆட்சிக்காலத்திற்குப் பொருத்தமான இவ் விவரங்கள் அதற்குப் பிற்பட்ட காலத்திற்கும் சில மாறுதல்களோடு பொருந்தும்; ஆயினும் நாட் செல்லச் செல்ல, காசிற்குப் பதி லாகப் பொருள்களாகவே சம்பளம் அளிக்கும் பழக்கம் மிகுவதாயிற்று.

# 11. தலைநகர ஆட்சியும் தல ஆட்சியும்

பண்டைய இந்தியாவில் இருவகை ஆட்சி நிலைகள் இருந்தன. ஒன்று தலைநகரில் மன்னர் அவைக்களத்தை மையமாகக் கொண்டு நடத்தப்பெற்ற மத்திய ஆட்சி. மற்றொன்று கிராமப் புறங்களில் கிராமக் குடித்தலைவர் குழுக்களால் நடத்தப் பெற்றது. இதனை 'கிராம ஆட்சி' எனலாம். 'தல ஆட்சி' எனினும் ஒக்கும். அரசு பெரிதாக இருந்தால் அதனைப் பல மாகாணங்களாகப் பிரித்து அம் மாகாணங்களும் பெரிய பிரதேசங்களாக இருந்தால், அவற்றையும் சிறு நிலப் பரப்புக்களாகப் பிரித்து அவற்றையெல்லாம் ஆளத் தனித் தனி அதிகாரிகளை நியமித்தல் தேவைப்படும். இப் பிரிவுகளுக்கு ஒவ்வொரு காலத்தில் ஒரு பிரதேசத்தில் ஒவ்வொரு பெயர் இருந்தது. அந்தந்த இடங்களில் பேசப்பட்ட மொழிகளைப் பொறுத்து இப்பெயர்கள் அமைந்தன. மௌரியர் காலத்திலும் பேரரசு குப்தர் காலத்திலும் மாகாண ஆட்சித் தலைவர்கள் பேரரசரால் நேரடியாக நியமிக்கப்பெற்றுர். பெரிய மாகாணங்கள், பேரரசின் எல்லைப் புறத்தில் இருந்த மாகாணங்கள் ஆகியவற்றின் ஆட்சித் தலைமையை இளவரசர்கள் அல்லது பிற அரச குடும்பத்தினர் ஏற்றனர். அரச குடும்பத்தினர் ஒரு மாகாணத்தின் தலைமையை ஏற்ற பின் அத்தலைமை வமிச பரம்பரையாகத் தொடரும் தன்மையைப் பெறும். நாளடைவில் அது ஒரு போட்டி அரசாக அமைந்து சுதந்திரம் அடைந்துவிடும். அரச குடும்பத்தினராயில்லாவிடினும் மாகாண ஆளுநராக நியமிக்கப்பட்ட திறமையும் புகழார்வமும் மிக்க ஒருவர் விஜய நகரத்து நாகம நாயக்கர் அல்லது விசுவநாத நாயக்கரைப் போல், மத்திய ஆட்சி பல வீனமடையும் அமையத்தில் தங்கள் அரசைச் சுதந்திரமாக நிலை நாட்டிக்கொள்வர். மாகாண ஆளுநர்கள் அளவிற்கு மிஞ்சிப் பலமடைந்து விடுவதாலேயே பல புது அரசுகள் தோன்றியமை இந்திய வரலாற்றில் காணப்படும்.

மாகாணங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையே மாவட்ட நிலையில் இருந்த ஆட்சிப் பிரதேசங்களும் உண்டு. இவையும் ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு பெயரால் அறியப்பட்டன. பேரரசுகளில் இம்மாவட்டங்களில் ஆட்சித் தலைவர்களை மத்திய அரசு நியமிப்பதில்லை; மாகாண அல்லது மாநில ஆளுநரே நியமித்துவிடுவார். இந்த மாவட்ட அதிகாரிகள் எல்லாவகை மாவட்ட ஆட்சி அலுவல்களையும் மேற்பார்த்தனர். நிதி நிர்வாகம், வரி வசூல், பொது நிர்வாகம் ஆகியவை தற்காலத்து மாவட்ட கலெக்டரைப் போலவே அவர் மேற்பார்வையில் அமைந்தன. மன்னர்க்கு அறிவுரை கூற அமைச்சரவை இருந்தது போல, இந்த அதிகாரிகளுக்கும் ஆட்சித் துறையில் அறிவுரை வழங்கி நிர்வாகத்தில் உதவ கீழ் நிலை அதிகாரிகளும்; பொதுமக்கள் சார்பில் கலந்தாலோசிக்க, குடித் தலைவர்கள் குழுக்களும் இருந்தன. இந்தக் குழுத்தலைவர்கள் செல்வம்; செல்வாக்கு, உயர்குடிப் பிறப்பு முதலிய 'தகுதி'களைப் பெற்றிருந்த சிலரது பிரதிநிதிகளாகவே இருந்திருப்பர். அன்றியும் அமைச்சர்களைப் போல இவர்களும் இக்குழுக்களில் பரம்பரை உறுப்பினராகவே இருந்தனர் என்று கருதலாம். இந்திய வரலாற்றின் இடைக்காலத்தில் தென்னாட்டில் பேரரசு செலுத்திய சோழர்கள் ஆட்சியில் மாவட்ட அலுவலர்க்கு உதவி புரிய இத்தகைய குழுக்கள் இருந்தமை அறியப்படுகின்றது; மத்திய அரசின் சார்பில் வரி வசூல் செய்யவும், நிதி நிர்வாகத்தில் உதவி புரியவும் அவர்களுக்கு உரிமையிருந்தது.

நகரங்களிலும் ஆளும் குழுக்கள் இருந்தன. சந்திரகுப்த மௌரியர் அவைக்களத்தில் கிரேக்க தூதுவராக அமர்ந்திருந்த மெகஸ்தனிஸ் என்பார் பாடலிபுத்ர நகர ஆட்சியைப் பற்றிச் சில விவரமான குறிப்புக்களைத் தந்துள்ளார். அந்த நகரத்து ஆட்சியை முப்பது உறுப்பினர் கொண்ட ஆறு பஞ்சாயத்துக்கள் (ஐவர் குழுக்கள்) மேற்பார்த்தன என்று அவர் கூறுகிறார்; அன்றியும், ஒவ்வொரு குழுவும் இன்னின்ன அலுவலைத் தனிப்பட மேற்கொண்டது என்றும் கூறியுள்ளார். ஆனால்; மெகஸ்தனிஸ் கூற்றை நம்பக் கூடாது என்று சில ஆசிரியர்கள் கருதுவர். இதற்குக் காரணம் கிரேக்கத் தூதுவர் குறிப்புகளில் தவறான பல செய்திகள் குறிக்கப்பட்டுள்ளமையேயாம். ஆனால் அவர் குறிப்புக்களில் சில தவறானவை என்பதால் அவர் கூற்றுக்கள் யாவையுமே தவறானவை என்று கருதுவது ஆராய்ச்சி முறைக்குப் பொருந்தாது. மற்றும் அவர் குறிப்புக்களில் ஏறியுள்ள தவறுகள் அவருடைய அறியாமையால் நிகழ்ந்தவை; அதாவது பிறர் கூறக் கேட்டு அவர் எழுதிய விவரங்களில்

தவறுகள் நிகழ்ந்து விட்டனவேயன்றி அவர் கண்டு எழுதியவற்றில் தவறுகள் நேரவில்லை. பாடலிபுத்ர நகரத்திலேயே வசித்து மன்னரவைக்களத்தில் இருந்த அத்தூதுவர் தலைநகரத்து ஆட்சி முறையைப் பற்றிப் பிறர் கூறக் கேட்டு எழுதினார் எனல் பொருந்தாது. அவர் நேரிற் கண்டதையே எழுதி வைத்திருக்க வேண்டும். அத்தகைய குறிப்புக்களில் தவறு நேரிட வழியில்லை. அன்றியும் இயற்கைக்கு மாறான, அசம்பாவிதமான (நிகழவொண்ணாத) குறிப்புக்கள் இருப்பின் அவற்றை ஐயக்கண் கொண்டு பார்க்கலாம். ஆனால், ஆறு ஐவர் குழுக்கள் தங்கள் நகராட்சி அலுவல்களைப் பகிர்ந்து கொண்டு செயலாற்றின என்பதில் வியக்கத்தக்க தொன்றுமில்லையாதலால் அவர் கூற்றை ஏற்றுக் கோடலே வரலாற்று ஆராய்ச்சி முறை. வேறொருவரும் பாடலிபுத்ர ஆட்சி முறையைப் பற்றி இவ்வாறு குறிப்பிடவில்லை என்றும் ஒரு காரணம் கூறுவர். ஆனால், அலெக்ஸாந்தர் படையெடுப்பைப் பற்றிக் கூட இந்திய ஆசிரியர்கள் ஒருவரும் குறிப்பிடவில்லை என்பது காணவேண்டும். இந்திய வரலாற்றாசிரியர்களால் எடுத்துரைக்கப்படாத எந்த விவரத்தையும் இந்திய வரலாற்றின் செய்தியாகக் கருதக் கூடாது என்பது கொள்கையாயின், இந்திய வரலாறு என்பதே வேறு விதமாக அமையும்; ஆதலால், பாடலிபுத்ர நகர ஆட்சியைப் பற்றி மெகஸ்தனிஸ் விட்டுச் சென்றுள்ள குறிப்புக்களை ஆதாரமாகக் கொண்டே அறியலாம்.

சில நகரங்கள் சுய ஆட்சி உரிமையைத் துய்த்தன என்பது பிற சான்றுகளாலும் தெரிய வருகின்றது. அவை தங்களுடைய செலாவணிக் காசுகளைத் தாமே அடித்து வழங்கின; சோழ நாட்டில் பெரிய அளவு சுய ஆட்சி உரிமையோடு இயங்கிய பல பெரிய கிராமங்களைப் பற்றியும் சிறு நகரங்களைப் பற்றியும் கேள்வியுறுகின்றோம்.

நகர ஆட்சியில் மிகவும் முக்கியமான ஆட்சியாளர் 'நாகரகர்' அல்லது 'புரபாலர்' எனப்படுவார். இக்காலத்தில் நகராட்சி அலுவல்களை மேற்பார்க்கும் ஆணையாளர் (கமிஷனர்) என்பாருடைய அலுவல்களுக்கு நிகரான அலுவல்களை அவர் மேற்கொண்டு பார்த்திருப்பர். வரி வசூல் செய்வதுதான் அவருடைய தலையாய கடமையாயினும், ஊரில் அமைதியையும் ஒழுங்கையும் நகரக் காவலர்களின் உதவியைக் கொண்டு நிலை நாட்டுவதும் அவருடைய வேலையாகும். நகரக் காவலர்களுடைய உதவி போதாது என்னும் நிலையில், தண்டநாயகர் என்னும் படைத் தலைவருடைய சேனை அவருக்கு உதவி புரியும்.

இந்தத் தண்டநாயகர் சேனைத்தலைவராயிருப்பதோடு பிராந்தியத் தலைவராகவும் சில சமயங்களில் அலுவல் பார்ப்பர்.

நகரத் தலைவர்களுக்கு அமைதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதோடு கூட, வேறு சாதாரண தினசரி வேலைகளும் இருந்தன. நகரத் தெருக்களைச் சுத்தமாக வைத்துக்கொள்வதும், குடிமக்களுடைய மற்றப் பொதுத் தேவைகளைப் பூர்த்தி செய்வதும் அவருடைய கடமை என்று கருதப்பட்டன.

**கிராம ஆட்சி:** இந்தியாவின் பெரும்பான்மை மக்கள் கிராமங்களில் வாழ்கின்றனர். பெரிய நகரங்களும் அவற்றை இணைக்கும் இருப்புப்பாதை, நெடுஞ்சாலைகள், விமான மார்க்கங்கள் முதலியவையும் மலிந்துள்ள இந்தக் காலத்திலும் நம் நாட்டில் ஆறு லட்சம் கிராமங்களுக்கு மேல் இருக்கின்றன. எழுபது சதவிகிதத்திற்கு மேற்பட்ட நாட்டு மக்கள் கிராமங்களிலேயே வாழ்கின்றனர். ஆதலால், இந்தியா கிராமங்களின் அடிப்படையில் இயங்கும் ஒரு நாடு. நமது கிராமங்களின் பெரும்பான்மைத் தொழில் வேளாண்மை. ஆதலால், நமது நாட்டுப் பெரும்பான்மை மக்கள் கிராமங்களில் வாழ்ந்து விவசாயத்தில் ஈடுபடுகின்றனர். இக்காரணங்களால் இந்திய ஆட்சி ஆணைகள் அநேகமாக நகரங்களிலிருந்து பிறப்பிக்கப்படினும் கிராமங்களிலேயே நடைமுறைப்படுத்த வேண்டியிருக்கும். இந்திய அரசாங்கம் கிராம அடிப்படையிலேயே இன்றும் இயங்க வேண்டியுள்ளது. நிலவரி கொடுக்கும் மக்களில் மிகப் பெரும்பாலோர் கிராமங்களில் வாழ்கின்றனர்.

கிராமம் என்னும் சொல் 'தொகுதி' என்று பொருள்படும். 'தொகுதி'கள் பெரிதாகவும் இருக்கக்கூடும், சிறிதாகவும் இருக்கக்கூடும். அவையெல்லாமே கிராமங்கள்தாம். இக்காலத்தில் நகரங்களைப் பல தரத்தவையாகப் பிரிக்கின்றனர். மக்கள் தொகை, நகராட்சியின் வருமானமாக நகர மக்கள் தரும் வரிகள் என்பவற்றைப் பொறுத்துப் பெரிய நகரங்கள், சிறிய நகரங்கள், கிராமங்கள் என்று பிரிக்கின்றனர். ஆனால், முற்காலத்தில் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையேயிருந்த வேறுபாடு நன்கு நிர்ணயிக்கப்படவில்லை. மன்னர், அமைச்சர் புரோகிதர், சேனாபதியர் ஆகியோர் குடும்பம் வாழ்ந்து வந்த தலைநகரம் ஏனைய ஊர்களினும் மிகச் சிறந்து விளங்கியிருக்கும். மௌரியர் காலத்திற்கு முன்பிருந்தே, அரசர்கள் கிராமத்து வரிகளை வசூல் செய்வதற்குத் தேவையான நிர்வாக ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். மத்திய அரசு கிராம ஆட்சியில் செலுத்

திய அதிகாரத்தின் சின்னங்களாக இவ்வேற்பாடுகள் அமைந்தன. அன்றிலிருந்து இன்றுவரை கிராமங்களில் இரண்டு நிறுவனங்களேனும் தொடர்ந்து கிராம ஆட்சி வேலையை மேற்கொண்டு கவனித்து வந்துள்ளன. அவையே (1) கிராமத் தலைவர் (கிராம முன்சீப் என்று பிற்காலத்தில் இவருக்கு ஒரு பெயருண்டு) (2) அவருக்கு அறிவுரை கூறும் கிராமப் பஞ்சாயத்து என்னும் இரண்டு நிறுவனங்களும் கிராமத் தலைவர், மற்ற ஆட்சி அதிகாரிகளைப் போலப் பரம்பரையாக அதிகாரம் வகித்தவர். அரசருடைய அதிகாரி என்னும் முறையில் அவரை நியமிக்கவும், நீக்கவும் அவ்வரசருக்கு அதிகாரம் உண்டு. அவ்வதிகாரத்தை அனேகமாக அவர் செலுத்துவதில்லை. கிராமத் தலைவர், இன்று போல் அன்றும், ஒரு பணக்கார நிலச்சுவான்தாராக இருந்தார்; அவருக்கு மாதச் சம்பளம் காசாகக் கொடுக்கப்படுவதில்லை; பெரும்பாலும் இனமாக அவருக்கு நிலம் தரப்பட்டது. அன்றியும் பயன்படுபொருள்களும்தரப்பட்டன. பெரிய நகரங்களில் அலுவலைப் பார்த்த நகரத் தலைமை அதிகாரிக்குக் கீழ் வேறு சில சில்லறை அதிகாரிகளும் இருந்தனர். கணக்குப் பிள்ளை, நகர்க் காவலர், சுங்க அதிகாரிகள் என்று சில அதிகாரிகள் அவருக்கு உதவினர். இவ்வலுவல்களைப் பார்த்தவர்களும் தந்தைக்குப் பின் மகன் என்று பரம்பரை முறையில் அதிகாரம் வகித்தவர்களே. கிராம அதிகாரி கிராம மக்களின் பெற்றோருக்குச் சமம் என்று இடைக்கால ஆட்சி இயல் ஆசிரியரான சுக்ரர் (சுக்ர நீதியில்) கூறுவர்.

கிராம அதிகாரிக்கு அறிவுரை கூறி ஆட்சியில் உதவிய பஞ்சாயத்துக் குழுவைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் தரும சாத்திரங்களிலோ அர்த்த சாத்திரங்களிலோ நமக்குக் கிடைக்கவில்லையாயினும்; தொன்று தொட்டு இத்தகைய குழுக்கள் இயங்கி வந்துள்ளன என்பதில் ஐயமில்லை. யாக்ஞவால்கியர் என்பார் மட்டும் கிராம ஆட்சிக் குழுவைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டு, அதன் அதிகாரங்கள் மன்னரிடமிருந்து பெறப்பட்டவை என்று கூறுகிறார். இக்கொள்கை தவறுடைத்து என்பார் ஏ. எல் பாஷம். அவர் கருத்து 'கிராம ஆட்சிக் குழுக்களுக்கும் தலைநகரில் ஆட்சி புரிந்த மன்னனுடைய அதிகார வரம்பிற்கும் யாதொரு தொடர்பும் இல்லை; ஏனெனில், எந்த மன்னர் ஆட்சி புரிந்தாலும் கிராம ஆட்சிக் குழுவின் உறுப்பினர்கள் பரம்பரை பரம்பரையாக அதிகாரம் செலுத்தியவர்கள்' என்பது. ஆனால் பேராசிரியர் பாஷமின் இம்மறுப்பே தவறுடைத்து என்று காண்கிறது. ஏனெனில்ஆட்சியின் எல்லா உறுப்புக்களுமே மன்னனுடைய அதிகாரத்திற்குட்பட்டவை

களே. அன்றியும் தத்துவப்படி ஆட்சி அதிகாரம் முழுவதுமே மன்னனுடையது. அதன் சில பகுதிகளைத்தான் மற்ற அதிகாரிகள் ஏற்று நடத்த முடியும். சோழர் பேரரசுக் காலத்தில் கிராம ஆட்சிக் குழுக்கள் மிகுந்த அதிகாரம் செலுத்தியமை அறியப்படுகின்றது. இக்குழுக்களும் பேரரசின் மொத்த அதிகாரத்திற்குட்பட்டவையே யன்றிச் சுதந்திர அதிகாரம் வகித்தவையல்ல. இக்குழுக்கள் எவ்வாறு அமைக்கப்பட்டன? அவற்றின் அதிகாரங்கள் யாவை? அவற்றிற்கும் தலைநகரில் மன்னன் செலுத்திய ஆட்சிக்கும் இடையே நிலவிய ஆட்சி உறவு யாது? என்பவற்றைப் பற்றிய விவரங்கள் சோழர் காலத்துக் கல் வெட்டுக்களாலும் பட்டயங்களாலும் அறியக் கிடக்கின்றன. கிராமக் குழுக்களின் தன்மையும் செயற்பாடுகளும் ஊருக்கு ஊர் வேறுபட்டன. மேலைத்தக்காணத்தில் இருந்த சில கிராமங்களில், குடும்பத்தலைவர்கள் எல்லோரும் குழுக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்; வேறு இடங்களில் கிராமத் தலைவர்களைத் திருவுளச் சீட்டுப் போட்டுத்தான் பொறுக்கியெடுத்தனர்.

சோழர் பேரரசில், இடைக்காலத்தில் இருவகைக் கிராமங்கள் இருந்தன. ஒன்று பார்ப்பனரே பெரும்பான்மை குடியிருந்த அக்ரகாரங்கள் அல்லது சதுர்வேதி மங்கலங்கள்; மற்றொன்று பார்ப்பனரும் மற்ற இனத்தவர்களும் கலந்து வாழ்ந்த கிராமங்கள். முந்தியவற்றிற்கு சபாக்கள் என்பதும் மற்றவற்றிற்கு ஊர்கள் என்பதும் பெயர். சபாக்கள், ஊர்கள் என்னும் இருவகை கிராமங்களும் ஏறத்தாழ ஒரே வகை கிராம ஆட்சி முறையைப் பெற்றன என்று கருதலாம். இவற்றில் சபாக்களைப்பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைக்கின்றன. செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ள உத்திரமேரூர் என்னும் ஒரு கிராமத்தில் கிடைத்துள்ள சில கல் வெட்டுக்கள் அவ்வூர் கி.பி. 10-ம் நூற்றாண்டிலிருந்து சிலகாலம் வரை எவ்வாறு ஆளப்பட்டது என்பதைத் தெரிவிக்கின்றன. பராந்தகன் என்னும் பேரரசு சோழ மன்னன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் இவ்வகையில் மிகவும் பெயர் பெற்றவை. கிராமத்தை முப்பது பகுதிகளாகப் பிரித்து அவ்வொவ்வொன்றிலிருந்தும் ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து அப் பிரதிநிதிகள் அடங்கிய குழுவின் ஆட்சியே கிராம ஆட்சியாக நடைபெற்றது. இப் பிரதிநிதிகள் திருவுளச் சீட்டு முறைப்படிப் பொறுக்கி எடுக்கப்பட்டனர். இக்குழு இன்னும் பல சிறு குழுக்களாகப் பிரிக்கப் பெற்றது; பெரும்பாலும் ஐந்து சிறு குழுக்கள் அமைக்கப் பெற்றன. இவை தோட்டங்கள், புரவிகள், குளங்கள், சாகுபடி நிலங்களுக்கு நீர்ப்பாசனம்,கிராமப் பஞ்சாயத்துக்கள்

என்றெல்லாம் பிரிக்கப் பெற்ற வெவ்வேறு வகை அலுவல்களை மேற்பார்த்தன. இக்குழுக்களின் உறுப்பினர்கட்குச் சம்பளம் கிராமத்தினரோ அரசோ தரவில்லை; அவர்களை அக்குழுக்களிலிருந்து விரும்பத்தகாத நடத்தைக்காக நீக்கி விடலாம். சிறிது நிலமும், வீடும் சொந்தமாகப் பெற்றிருந்த எவரும் குழு உறுப்பினராக முடியும். முப்பத்தைந்து வயதிற்கு மேற்பட்டு எழுபது வயதிற்குட் பட்டவர்களுக்கு உறுப்பினராகத் தகுதியுண்டு. ஓராண்டு உறுப்பினராயிருந்தவர் அடுத்த மூவாண்டுகள் அந்நிலையில் இருத்தல் இயலாது. இவையெல்லாம் உத்தரமேரூர் அந்தணர் அக்ரகாரமான சபாவின் கிராம ஆட்சிக்குழுவின் அமைப்பு, இயங்கும் விதிகள். இக்குழுக்களில் மிக இளைஞரும் மிக்க வயோதிகரும் இடம் பெறுமை நோக்கற்பாலது. 'சில கிராமக் குழுக்களில் உறுப்பினர்களின் மிகக் குறைந்த வயது நாற்பது ஆகவேனும் இருத்தல் வேண்டும் என்னும் விதியும் இருந்ததாகத் தெரிகின்றது. இவ்வாறு ஒருவரே திரும்பத் திரும்பத் தொடர்ந்து அதிகாரத்தில் இருக்கலாகாது என்னும் விதி இருந்தமையால், ஆட்சி நேர்மை குன்றுமலும் உறுப்பினர்கள் மிக வலுவுள்ளவர்களாகி ஆட்சியையே ஆட்டிவைக்கும் அளவிற்கு வளர்ந்து விடாமலும் இருத்தற்கு வழி ஏற்படுத்தப்பட்டது. குழுவிலிருந்து விலகும் ஒரு உறுப்பினரின் கிட்டின உறவினர்கூட அவரைத் தொடர்ந்து அக்குழுவில் இருக்க முடியாது. சில இடங்களில் பதவியினின்றும் விலகிய உறுப்பினர் மறுபடியும் பத்தாண்டுகட்கு உறுப்பினராகக் கூடாது என்னும் விதி மேற்கொள்ளப்பட்டது.

இக்குழுக்கள் கிராமத்தில் நிகழ்ந்த சண்டை, பூசல்களைத் தீர்த்துவைக்கும் நிலையில் நீதிமன்றங்களாகவும் மற்ற நிலைகளில் சாதாரண ஆட்சிக்குழுக்களாகவும் இயங்கின. கிராமத்து வரிகளை வசூலிப்பது இவற்றின் வேலை. இவை கிராம மக்களிடம் எவ்வளவு வரி வசூலிக்க வேண்டும் என்று நிர்ணயித்து வசூலித்து, மொத்தமாக, கிராமம் மன்னனுக்கு எவ்வளவு வரி செலுத்த வேண்டும் என்றும் மன்னனுடைய வரி திரட்டும் அதிகாரியோடு பேசி நிர்ணயித்துக் கொண்டன. கிராமத்தின் புறம்போக்கு நிலங்கள், தரிசுகள் முதலியவை இக்குழுக்களின் உடைமை; அவற்றை விற்கவும் வாங்கவுமான உரிமைகள் அவர்களுக்கு இருந்தன; நீர்ப்பாசனம், சாலையமைத்தல் முதலிய பொதுப் பணிகளில் ஈடுபடவேண்டிய கடமையும்

அவர்களுக்கு இருந்தது. அவர்களது அலுவல்கள் கிராமக் கோயிற் சுவர்களில் கல்வெட்டுக்களாகப் பொறிக்கப் பெற்று அக்காலத்துப் பொது மக்களுக்கும் (இக்காலத்து வரலாற்றுளர் களுக்கும்) அறிவிக்கப் பெற்றன. பண்டைக் காலத்தில் இந்தியாவில் நடைபெற்ற அரசியல் பொது வாழ்க்கையின் மிகச் சிறந்த அம்சங்களில் தமிழகக் கிராம ஆட்சி முறை ஒன்று என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

# 12. நிர்வாக ஆட்சி நிலையங்கள் நீதி, சட்டம், மன்றங்கள், ஒறுத்தல்

பண்டைய இந்திய அறிஞர்களும், அவர்களைப் பின் பற்றி இடைக்காலத்து நூல் யாத்த அறிஞர்களும் தங்கள் நூல்கள் யாவையும் வேதங்களையும் வைதிக இலக்கியங்களையும் அடியொற்றியோ அன்றி ஆதாரமாகக் கொண்டோதான் இயற்றப் பெற்றன என்று கருதினர். இக் கருத்து அவ்விலக்கியத்தின் அடிப்படைக் கொள்கை ஒற்றுமைக்குப் பயன்பட்டன. வேதங்களுக்கு முதன் முதல் விளக்க உரைகளாகவும் பிற்சேர்க்கைகளாகவும் விளங்கிய பிராம்மணங்கள் என்னும் நூல்களிற் கண்ட கூற்றுக்கள், நாளடைவில் சிக்கலாகவும் தெளிவற்றும் போய் விட்டமையால் வைதிக அறக் கோட்பாடுகளை விளக்கப் புது நூல்கள் தோன்றின. இவற்றிற்கு 'சூத்ரங்கள்' என்பது பெயர். சூத்ரம் என்பது நூல்; தமிழில் 'நூல்' என்பது சிறு கயிற்றையும், புத்தகத்தையும் குறிப்பது போல வட மொழியிலும் 'சூத்ரம்' என்பது அவ்விரண்டையும் குறிக்கும். 'ச்ரௌத' சூத்ரங்கள் என்று சில நூல்கள் இயற்றப் பெற்றன. தமிழ் இலக்கிய நூல்களில் அமைந்துள்ள சூத்திரங்களைப் போல சிறிய வடிவும் ஆழ்ந்த கருத்தும் பெற்று இயற்பாக்கள் வகையில் இந்நூல்கள் இயங்கின. இவற்றை வேதங்கள் விளக்கும் கையேடுகள் எனலாம். சிலகாலம் கழித்து கிரஹ்ய சூத்ரங்களும், அதற்கும் பிறகு தர்ம சூத்திரங்களும் இயற்றப் பெற்றன. இவற்றில் கிரஹ்ய சூத்ரங்கள் என்பவை மனைகளில் இல்லறத்தார் முதலியோர் ஆற்ற வேண்டிய கடமைகளின் விரிவுகளும் விளக்கங்களும் ஆம். தர்ம சூத்ரங்கள் பொதுவாக மக்களின் வாழ்க்கையில் நல்நடத்தையைப்பற்றிய கருத்துக்களை எடுத்தோதின. இவற்றில் ஒவ்வொரு பொருளைப் பற்றியும் மும் மூன்று சூத்ரங்களில் அமைந்த நூல்கட்குக் கல்ப சூத்ரங்கள் என்பது பெயர். இவை யாவற்றுள்ளும் தர்ம சூத்ரங்

களில் கூறப்பட்டுள்ள விதிகளே இந்தியாவிலேயே மிகப் பண்டைய சட்ட விதிகளின் தொகை எனலாம். இவ்வாறு தர்ம சூத்திரங்கள் இயற்றியவர்களில் கௌதமர், போதாயனர், வசிட்டர், ஆபஸ்தம்பர் என்பவர்கள் சிறந்தவர்கள். இந்நூல் கி.மு. ஆறும் நூற்றாண்டிற்கும் இரண்டாம் நூற்றாண்டிற்கும் இடையே எப்பொழுதேனும் இயற்றப் பட்டிருக்கலாம். சிற்சில இடங்களில் மிக முற்காலக் கருத்துக்கள் அவற்றில் காணப்படுவதோடு, வேறு சில இடங்களில் பிற்கால இடைச் செருகல்களும் காணப்படுகின்றன. தர்ம சூத்ரங்களிலும் பிற வைதிக நூல்களிலும் கண்ட விதிகளையும் பிற செய்திகளையும் தொகுத்தும் விரித்தும் பல வகையில் புதுக்கி ஆக்கப்பெற்ற வேறு சில நூல்களுக்குத் 'தர்ம சாத்திரங்கள்' என்பது பெயர். இவை தர்ம சூத்ரங்களுக்குப் பிறகு இயற்றப்பட்டவை என்பது இதனாற் புலனாகும். இவற்றில் கடைசியானவை கி.பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்கக் கூடும். உரை நடையாக இயற்றப்பெற்ற முற்கால சூத்ரங்களினின்றும், செய்யுள் வடிவில் இயற்றப் பெற்ற இந்நூல்கள் இந்து அற நூல்களிலேயே சிறந்தவை என்னும் புகழ் பெற்றன. மனு, யாக்ஞவால்கியர், விஷ்ணு நாரதர் என்பார் இயற்றியவையே சிறந்த தர்ம சாத்திரங்கள். மனு தர்ம சாத்திரத்தில் சட்டங்களும் அவற்றின் தத்துவங்களும் எடுத்துக்கூறப்படுகின்றனவாயினும் அது பெரும்பாலும் மக்களுடைய தனி, சமூக நடத்தை முறைகளைப் பற்றியே பேசுகின்றது. அதற்குப் பிறகு எழுந்த தர்ம சாத்திரங்கள் சட்ட விதிகளைப்பற்றி விரிவாகவும் வெளிப்படையாகவும் பேசுகின்றன.

தர்ம சூத்ரங்கள்; தர்மசாத்திரங்கள் என்பவற்றை மொத்தமாக ஸ்மிருதிகள் என்று கூறுவர். 'ஸ்மிருதி' என்னும் சொல்லுக்கு 'நினைந்தவை' என்று பொருள். வைதிக இலக்கியம் சுருதி அல்லது 'கேட்கக் பட்டது.' ஸ்மிருதி 'நினைக்கப்பட்டது.' பிந்தியவை முந்தியவற்றைவிட தெய்வத் தன்மையிற் குறைந்தவை. மனுவின் நூலை மானவ தர்மசாத்திரம் என்பர். அதனையே மனுஸ்மிருதி என்றும் கூறுவர். சிலர் இதிகாசங்களையும் புராணங்களையும் கூட ஸ்மிருதி என்பர்; அவற்றில் சட்டங்களைப்பற்றிய விவரங்கள் பலவுள. மனுதர்ம சாத்திரத்தின் பல பகுதிகள் மகாபாரதத்தின் சாந்தி பர்வத்தில் காணப் படுகின்றன. சட்டம், ஒறுப்பு, நீதி முதலியவற்றைப் பற்றிப் பண்டையோர் கொண்டிருந்த கருத்துக்களைத் தொகுத்து வைத்துக் கொண்டு அவற்றைப் பொருத்தமான இடங்களில் எல்லாம் எடுத்துரைத்துக் கொண்டே வந்தனர்.

இந்தஸ்மிருதிகளிற் கண்ட சட்ட இலக்கியங்கள்மீது விளக்க விரிவுரைகள் பல இடைக் காலத்து அறிஞர்களால் இயற்றப் பட்டன. இவர்களில் விஜ்நாநேசுவரர் என்பவர் சிறந்தவர்; அவர் மேலைச்சாளுக்ய மன்னரான ஆறும் விக்ரமாதித்யர் (11, 12-ம் நூற்றாண்டினர்) காலத்தில் வாழ்ந்து அம் மன்னனால் போற்றப் பெற்றவர். யாக்ஞவால்கியருடைய ஸ்மிருதிக்கு அவர் எழுதிய பேருரை 'மிதாக்ஷரம்' எனப்படும். விஜ்நா நேசுவரரேயன்றி ஹேமாத்ரி, ஜீமூதவாகனர் என்பாரும் இத் தகைய பேருரைகள் இயற்றினர். பிற்கூறப்பட்டவர் இயற்றிய தர்மரத்னம் என்னும் நூலில் முன்னோரிடமிருந்து பின்னோர் சொத்துக்களை அடையும் வழிகளைப்பற்றி விவரித்துக் கூறியுள் ளார். இது 'தாயபாகம்' எனப்படும்.

ஸ்மிருதி என்பது பிராம்மணர்களால் எழுதி வைக்கப்பட்ட விதி முறைகள் என்றும் அவை யாவையும் அவர்களுடைய நன்மைக்காகவே இயற்றப்பட்டன என்றும், அவற்றை மக்கள் பின்பற்றினரா என்பதையறிய, அர்த்த சாத்திரங்களையும், இலக்கியத்தில் பிற இடங்களில் மக்களுடைய பழக்க வழக்கங் களைப் பற்றிக் கூறியுள்ள விவரங்களையும் ஒப்புப் பார்க்க வேண்டும் என்றுஞ் சிலர் கூறுவர். இங்ஙனம் ஸ்மிருதிகளைப் பற்றிக் கூறுவது ஒருவகை மரபு. ஆயினும் நாளடைவில் மற்ற எல்லா வகைச் சட்டச் சான்றுகளையும் விட ஸ்மிருதிகளே எல்லா வகை மக்களாலும் பெருமையோடு கொண்டாடப்பட்டன என் பதையும். ஸ்மிருதிகளைப் பிராம்மணர்கள் இயற்றினர் என்றால் அர்த்த சாத்திரங்களையும் கௌடில்யர் முதலிய பிராம்மணர் களே இயற்றினர் என்பதையும் அவ் வர்த்த சாத்திரக் கருத்துக் களை எதிர்த்த 'ஹர்ஷ சரித' ஆசிரியரான பாணபட்டரும் பிராம்மணர் என்பதையும் நினைவில் இருத்தல் வேண்டும், ஸ்மிருதிகளில் காணப்படும் விதி முறைகளுக்கும் மக்களுடைய வாழ்க்கை விவரங்களுக்கும் இடையே மிகுந்த மாறுபாடு இருந் தமை உண்மையாயின், அது இயற்கை என்று விடுத்தல் வேண்டும். ஏனெனில், ஸ்மிருதிகளில் கூறியுள்ளபடி பொது மக்கள் வாழ்க்கை நடைபெறவில்லையென்றால், அர்த்த சாத்திர விதி முறைகளை யொட்டி அரசியலும் நடைபெறவில்லை என்பதையும் நினைவு கூர்தல் வேண்டும். சாத்திரக் கூற்றுக் களுக்கும் கோட்பாடுகட்கும் மக்களுடைய வாழ்க்கைக்கும் மிகுந்த மாறுபாடு இருந்தே தீரும் என்பதை வரலாறறிந்தார் உணர்வர்.

சட்டம் என்பது யாது என்னும் வினாவிற்குப் பல வகை களில் விடையளித்தல் கூடும். ஒழுங்கு (order) என்னும் கருத்து

சட்டம் (Law) என்னும் கருத்தோடு எப்போதும் இணைந்தே வரும். ஒழுங்கை நிலை நாட்டுவதற்காகவே சட்டங்கள் ஆக்கப் படும் என்பதால், ஒழுங்கு என்பது இவ்வுலகிற்கு மட்டுமல்லா மல் இப் பிரபஞ்சத்திற்கே தேவையான ஒரு நிலையாதலின். இவ்வாறு பிரபஞ்சமே ஒரு ஒழுங்கிற்குட்பட்டிருக்குமாயின் அவ்வொழுங்கிற்கு 'ரிது' என்பது பெயராம்; அதாவது பிரபஞ் சம் இயங்குதற்கண் காணப்படும் ஒழுங்கு 'ரிது' எனப்படும். இச்சொல்லே ஆண்டு தோறும் மாறிமாறி வரும்காலங்களுக்கும் (seasons) வடமொழியிற் பெயராம். ஆதியில் இச் சொல் பொது வாக ஒழுங்கைக் குறித்தது என்று கொள்ளலாம். பிற்காலத் தில் 'தருமம்' என்றதும் இத்தகைய ஒழுங்கு ஒன்றையே. இவ் வொழுங்கு சமூகத்தில் மக்கள் வாழும் வாழ்க்கைக்கண் நிலவ வேண்டிய ஒழுங்கையும், ஒரு தனி மனிதனுடைய வாழ்க்கையில் காணத்தகும் ஒழுங்கையும் குறிக்கும்.

தருமம் என்பது 'ஒன்றை ஒன்று தாங்குதல்' என்னும் பொருளில் வரும். இது நியாயம், ஒழுங்கு, சட்டம் முதலிய பொருள்களில் பயன்படுத்தப்படும். பொதுவாக, நோக்கு மிடத்து தருமம் என்பது 'கடவுளால் நியமிக்கப்பெற்ற வருண சிரம நிலைகளிற் காணப்படும் மக்களின் சீரிய வாழ்க்கை முறை யின் இலக்கியம் என்று கூறலாம். இவ்விலக்கியத்திற்கு உட்பட்டு வாழ்ந்தவர்கள் தருமத்திற்கு அடங்கியவர்கள் என்றும் ஏனை யோர் அதருமத்தைச் செய்பவர்கள் என்றும் கருதப்பட்டது. ஆதலால், தருமத்தை "கடவுட் சட்டம்" அல்லது 'தெய்வீக ஒழுங்கு' என்று கூறலாம். தருமம் என்னும் சொல் வடமொழி யில் வைதீக மரபினராலேயன்றி பாலி மொழியில் பௌத்தர் களாலும் ('தம்ம') என்று மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதுவே அசோகர் கல் வெட்டுக்களிற் காணப்படும் 'தம்மம்' என்பது. இது பௌத்தர்கள் கோட்பாட்டின்படி தனி மனிதனின் அல்லது சமூகத்தின் நன்னடத்தை மரபினைக் குறிக்கும். இதுதான் 'தன் நிலையினின்றும் மாறாது எப்பொழுதும் இயங்கி வரும்' என்ப தைக் குறிக்க ஒரு சக்கரம் அல்லது ஆழியோடு உவமித்தனர். இதனை இக் காரணத்தால் தரும சக்கரம் அல்லது அற ஆழி என்றனர். திருமால் கையில் ஏந்திய சக்கரம் 'பிரபஞ்சத்தில் ஒழுங்கை நிலை நாட்டுதற்காக'க் காக்கும் கடவுள் ஏந்திய 'ஆணையாழி' அல்லது 'ஆக்ஞா சக்கரம்'. இது நல்லோரைக் காத்துத் தீயோரை ஒறுக்கும் சட்டம் என்பது. இவ்விருவகை வினைகளையும் ஆற்றுவதைக் காண வேண்டும். புத்தர் கூறிய தரும சக்கரமும் அறத்தை ஓதி உணர்த்தி நிலைப்படுத்தும்

கொள்கையுடையது. இதனையே அசோகரும் சிங்கத் தூணின் இடையே அமைத்தார்.

இனி, தருமம் என்பதையே தமிழில் அறம் என்பர். திருக்குறளுக்கு உரை இயற்றிய பரிமேலழகர் தமது உரைப் பாயிரத்தில் 'அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். வழக்காவது - ஒரு பொருளைத் தனித் தனியே எனது எனது என்றிருப்பார் அது காரணமாக தம்முள் மாறுபட்டு அப்பொருள் மேற்செல்வது: அது கடன் கோடல் முதற் பதினெட்டுப் பதத்ததாம்; தண்டமாவது அவ்வொழுக்க நெறியிலும் வழக்க நெறியிலும் வழீஇயினரை; அந்நெறி நிறுத்தற் பொருட்டு ஒப்ப நாடி அதற்குத்தக ஒறுத்தல்' என்று விளக்கியுள்ளனர். ஈண்டு அவர் கூறிய பதினெட்டுப் பதங்களாவன: (1) கடன் வாங்குதல், (2) அடைக்கலமாக வைத்த பொருள், (3) உடையனல்லாதவன் விற்றல், (4) கூடி மேம்படுதல், (5) கொடுத்ததை மீண்டும் கொடாமை, (6) கூலி கொடாமை; (7) கட்டுப்பாடு கடத்தல், (8) விற்றும் கொண்டும் உள்ளம் ஒப்பாமை, (9) ஒப்பிப் பணி செய்யாமை, (10) எல்லை வழக்கு, (11) சொற் கொடுமை, (12) தண்டக் கொடுமை, (13) திருட்டு, (14) வன் செய்கை, (15) மாதரைக் கவர்தல், (16) மாதர் ஆடவர் தருமம், (17) தாய பாகம், (18) ஆது என்பனவாம். அன்றியும் 'வழக்கும் தண்டமும் உலக நெறி நிறுத்தற்பயத்த. ஒழுக்கம் மக்களுக்கு உறுதி பயத்தற் சிறப்புடையது' என்றும் பரிமேலழகர் கூறுவர்.

பண்டைய சட்ட நூல்கள் யாவையும் தருமத்தை ஓதுவனவே. அவை தருமத்தையே யன்றி மன்னர் இடத்தக்க ஆணைகள், மக்களிடையே நிகழும் ஒப்பந்தங்கள், மரபு வழிச் செயல்கள் என்பவற்றைப் பற்றியும் நிரம்பக் குறிக்கின்றன.

தரும சாத்திரங்கள் மக்களுடைய தரும உணர்ச்சியின் பெருமையை முக்கியமாகக் கூறி, தருமத்தை நிலை நாட்டுதற்கு மன்னர் இடும் ஆணைகள், இயற்றும் சட்டங்கள் என்பவற்றை அத்துணைச் சிறப்புடையனவாகக் கருதா. ஆனால், கௌடில்யருடைய அர்த்த சாத்திரம் மன்னராணையைச் சிறப்புடையதாகக் கருதுவது சாத்திர வழு என்று தரும சாத்திரக்காரர்களால்

கொள்ளப்படும். மௌரியர் ஆட்சி வல்லாட்சி யாதலால் அர்த்த சாத்திரம் அவ்வாறு கூறுகின்றது என்று சிலர் கருதுவர்.

மன்னர் கடன் தருமத்தை நிலை நாட்டுவது. தருமம் என்பது நன்னடத்தையாயின், 'நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே'[1] என்று புறநானூற்றிற் கூறிய உண்மை விளங்கும். அப்பாட்டிலேயே பெற்றோர் தமது மக்களுக்குத் தத்தம் குல மரபிற் கேற்ற தொழிற்பயிற்சியினை ஆக்குவித்தல் வேண்டும் என்பதும் வற்புறுத்தப் பட்டுள்ளது. அதாவது போர்வீரன் ஒருவன் தன் மகனைப்போர்க்களப் பயிற்சி செய்வித்து போரில் வல்லவனைச் செய்வித்தல் வேண்டும் என்று கூறுகின்றது. இப் புறநானூற்றுச் செய்யுள் மூதின் முல்லை என்னும் துறையில் அமைந்திருப்பதால் ஈண்டுக் கூறப்படும் தாயும் தந்தையும் மூதிலாளர் (போர்க் குடியைச் சேர்ந்தவர்கள்) என்பது பெறப்படும். ஆகவே, தந்தை மகனுக்குத் தான் செய்ய வேண்டிய கடமையைப் பற்றிக் குறிக்கும் போது 'சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே' என்றார். இங்கு 'சான்றோன்' என்பது போர் வீரன் என்று பொருள் படும். (பதிற்றுப் பத்தில் 'சான்றோர் மெய்ம்மறை'[2] என்னும் சொற் பிரயோகம் காண்க. தேர் தரவந்த சான்றோ ரெல்லாம் தோல்கள் மறைப்ப ஒருங்கு மாய்ந்தனரே''[3] என்பது காண்க. ஆதலால், தருமம் குல முறை குலமுறையாக வருவது என்னும் கோட்பாட்டோடு இம் முறையை மாறாது காப்பாற்றுவது மன்னனுடைய கடமை என்றும் கருதப்பட்டது. அவனே, முறை செய்து காப்பாற்றும் மன்னன் ஆவான்; உலகியல் முற்றிலும் அறத்தை அடிப்படையாகக் கொள்ளல் வேண்டும் என்று கருதிய பண்டையோர் 'சிறப்புடை மரபிற் பொருளும், இன்பம் அறத்து வழிப்படும்'[4] என்றனர். ஆதலால், அறத்தின் சிறப்புப் பெறப்படும். இவ்வறத்தை நிலை நாட்டுவதே சட்டம்; அச்சட்டத்தினின்றும் மக்கள் பிறழாமற் காப்பதே மன்னனுடைய தொழில்.

வடமொழியாளர் தர்மத்தைப் பற்றித் தங்கள் தர்ம சாத்திரங்களில் விரிவாகக் கூறி வைத்துள்ளனர். 'தர்மம் என்பது தொடக்க காலத்தில் சிறப்புற்றிருந்தது, மக்கள் தர்மத்தையொட்டி நடந்தனர். பிற்காலத்தே இந்நிலை மாறி தர்மம் நிலை

[1] புற நானூறு: 312. [2] பதிற்றுபத்து: 14—12; 58—11.
[3] புற நானூறு 65; [4] புற நானூறு 31

கெட்டுப் போனதால், மக்கள் அதர்மத்தை மேற்கொள்ள லாயினர்; இவ்வாறு இழந்த நிலையைச் சமூகம் அடையும் காலம் கலிகாலம்' என்பவை அவர்களுடைய கருத்துக்களிற் சில. 'ஆதிகாலத்தில் தர்மத்தின் தன்மை இத்தன்மைத்து என்பதை யாவரும் உணர்ந்திருந்தனர் என்றும் பிற்காலத்தில் (அதாவது நாளடைவில்) மக்கள் தர்மத்தின் தன்மையையும் அதனைக் கடைப்பிடிப்பதால் ஏற்படும் நன்மையையும் உணராதவர்களாயினர். ஆதலால் சமுதாயத்தில் தர்மத்தின் பிடிப்புவிட்டுப் போயிற்று. அதர்மம் மலிந்தது' என்பதும் அவர்களுடைய கருத்து. அவர்கள் 'காலம் சக்கரம் போன்றது' என்னும் கோட்பாடுடையவர்; ஆதலால் தீமை மலிந்த இக்காலத்தில் தர்மத்தின் தன்மை முற்றிலும் உணரப் படவில்லை. தருமசாத்திரங்களின் உட்பொருளைக் காண மாட்டாமையின்; எளிதில் மக்களுக்கு விளங்கக் கூடிய வேறு பல சாத்திரங்கள் தேவைப் பட்டன.

சாத்திரங் கற்று வல்லுநரான அந்தணர்கள் தருமத்தின் உட்பொருளை விரித்துரைக்கும் தகுதியுடைய ராயினும், தருமத்தைக் காக்கும் கடமை மன்னருடையது. சில மன்னர்கள் தம்மை 'தர்மராஜன்' என்று கூறிக்கொள்வதுண்டு.

நியாயத்தை நிலைநாட்டும் அல்லது கடிந்து அறத்தைப் போற்றும் கருவி 'தண்டம்' எனப்படும். தண்டம் என்பது 'கோல்' என்று பொருள்படும். குற்றம் செய்தாரைச் கோல் கொண்டு ஒறுத்தல் மரபாதலின், 'நல்லது காத்து அல்லது கடியும்' மரபிற்கே தண்டம் என்பது பெயராயிற்று. தண்டம் என்பது 'தண்டு' என்ருகிப் போர்ப்படை (சைனியம்) யைக் குறிக்கும். சில சமயங்களில் அது 'அபராதத் தொகை'யைக் குறிக்கும். தீமை மலிந்து விட்ட காலத்தில் ஒறுத்தலன்றி வேறு வகையில் நியாயம், தர்மம் ஆகியவற்றை நிலை நாட்ட முடியாது என்று தர்மசாத்திரங்களை இயற்றியோர் கருதினர். மன்னன் ஒறுத்தலுக்கு அஞ்சியல்லது, வலியார் மெலியாரை வாட்டுதல் அடங்காது. 'இயல்பாகவே மக்கள் தவறும் தீங்கும் செய்யும் இயல்பினர்; அவர்கள் தண்டத்திற்கே அஞ்சுவர்; ஆதலால் ஆட்சி என்பதே தண்டத்தில் அடங்கும்' என்பது ஒரு தத்துவம். இக்கோட்பாட்டினை மனு வெளிப்படையாகக் கூறுவர். தண்டம் தேவைப் படுமாயினும் தண்டனை யளிக்கும் மன்னன் குற்றத்திற்குத் தக அளவறிந்து ஒறுத்தலை மேற்கொள்ள வேண்டும்.

பண்டைய இந்திய ஆட்சித் தத்துவத்திலும் அத்தத்துவத்தின்படி அமைந்த ஆட்சி முறையிலும் ஒவ்வொருவரும் தத்தம் கடமையைச் செய்யாவிட்டால் மன்னனுடைய தண்டத்திற்கு ஆளாவார்; ஆனால், மன்னனே தனது கடமையில் தவறுவானாயின் அவனை ஒறுத்தற்குரிய தக்கார் மானுடருள் இலராதலின் தெய்வமே அவனை நின்று ஒறுத்தல் வேண்டும். ஆதலால் தர்மத்தைக் காக்கும் மன்னனுக்கு வைதிக யாகங்களை இயற்றும் அந்தணர்களுக்குக் கிடைக்கும் பலன்கள் கிட்டும்; அவ்வாறு தர்மத்தைக் காக்கத் தவறும் மன்னன் கொடு நரகில் ஆழ்ந்து வருந்துவான். இங்ஙனம் எல்லாம் நிகழும் என்பதில் நம்பிக்கையில்லாத மன்னன் விருப்பப்படிக் கொடுங்கோலனாயிருக்கலாம்; ஆயினும், மக்கள் ஒருங்கே கலகம்செய்து அவனை வீழ்த்திவிடக் கூடும் என்னும் அச்சம் அவனுக்கு இருக்கும்.

குற்றம்: இந்தியாவிற்கு வந்து சென்ற வெளிநாட்டவரில் சிலர் இந்நாட்டில் குற்றவாளிகள் மிகக் குறைவு என்று பொருள் படும்படி எழுதிவைத்துள்ளனர். சந்திரகுப்த மௌரியர் காலத்துக் கிரேக்கரான மெகஸ்தனிஸும், பேரரசு குப்தர் காலத்துச் சீனரான பாஹியானும் இங்ஙனம் கூறியுள்ளனர். ஆனால், ஹர்ஷர் காலத்தில் இந்தியாவிற்கு வந்து அவர் அவைக் களத்தில் பலகாலம் வாழ்ந்த யுவான் சுவாங் என்பார் குற்றங்கள் மலிந்திருந்தமையை வற்புறுத்திக் கூறுவர். மௌரியருடைய குற்றச்சட்டம் கடுமையாக இருந்ததைக் கொண்டே அவர்கள் ஆட்சியில் குற்றங்கள் மலிந்திருந்தன, அவற்றை அடக்க அத்தகைய சட்டங்கள் தேவைப்பட்டன என்பவை உணரப்படும். ஹர்ஷர் காலத்தில் வட இந்தியாவில் கள்ளர் பயம் மிகுந்திருந்ததை யுவான் சுவாங் சொந்த அனுபவத்திலிருந்து கூறுகிறார். ஆதலால், இந்திய சமூக நிலையைப் பற்றிய உண்மைகளை வெளி நாட்டார் கூறி அறிய முடியாது என்பதை ஓரளவு தெரிந்து கொள்ள முடியும். இந்திய இலக்கியத்திலிருந்து பண்டைய இந்திய சமுதாய நிலையை அறிவதாயின், குற்றவாளிகள் மிகுந்திருந்தனர், பலவகைக் குற்றங்களும் செய்யப்பட்டன, அவற்றிற்கான சட்டங்களும் நியதிகளும் நிர்ணயிக்கப்பட்டன என்பதெல்லாம் தெரிய வரும். தரும சாத்திரங்கள் கூறும் விவரங்களிலிருந்தே இத்தகைய சமூக நிலையை உணர முடியும்.

வழிப்பறி முதலிய பெருங்குற்றங்களைச் செய்வதையே தொழிலாகக் கொண்ட குடிகளும் இருந்தனர். ஆங்கிலேயர் ஆட்சியின் இடைக்காலம் வரையில் இத்தகையோர் இருந்தமை

அவர்களுடைய அறிக்கையிலிருந்து தெரிகிறது. தமிழ் நாட்டில் கள்ளர், மறவர் முதலிய குடிகள் இருந்தமை சங்கத் தமிழ் இலக்கியத்தாலும் பெறப்படும். அவர்கள் இன்றும் உள்ளனர். அர்த்த சாத்திரத்தில் இக்குற்றங்கள் நிகழாவண்ணம் 'ஊரடங்குச் சட்டங்கள்' போடவேண்டும் என்று விதிக்கப் பட்டுள்ளது. கள்ளர் தமது தொழிலின் நுணுக்கங்களை நூல் களில் எழுதிவைத்து அந்நூல் விதிகளுக்கேற்பத் தம் தொழிலை மேற்கொண்டனர். புத்தர் காலத்திலிருந்தே நாட்டின் பல பகுதிகளிலும கள்ளர் பயம் மிகுந்திருந்தமை கூறப்படுகின்றது. கள்ளரில் சிலர் கொலையையும் மேற்கொண்டனர். பிற்காலத் தில் ஆங்கிலேயர் ஒடுக்கப் பெற்ற 'தக்கியர்' (Thugs) என் பாரை யொப்ப மிகப் பண்டைக் காலத்தில் 'மதச் சார்புடைய சாங்கியக் கொலைகள் செய்வதையே நெறியாகக் கொண்ட கொள்ளை, கொலைக் கூட்டத்தினர் இருந்தனர். நகரங்கள், கிராமங்கள், நெடுஞ்சாலைகள் ஆகிய எல்லா இடங்களிலும் இத்தகையோர் இருந்தனர்; திருடர்களைத் தவிரத் தாங்கள் திருடி விட்டுப் பிறர்மீது அப்பழியைச் சுமத்திய கயவர்களும், சிலப்பதிகாரத்திற்போல இருந்தனர். அவர்களைத் தண்டிக்க முற்பட்ட காலத்திலும் நியாயமும் தண்டமும், அக்கதையில் போல, தவறியது உண்டு. நெடுந்தூரம் சென்ற வாணிபச் சத்துக்கள் தங்கள் வண்டிகளையும், மூட்டை தூக்கும் விலங்கு களையும் மிகுந்த கவனத்தோடு இட்டுச் சென்றனர்; ஆயினும் அவை பெரும்பாலும் கொள்ளை யடிக்கப்பட்டன. கிராமங் களில் ஊர்க்காவலர்கள், நகரங்களில் நகரக் காவலர்கள், ஒற் றர்கள், படைஞர் ஆகியோர் உதவி கொண்டு குற்றவாளிகள் கண்டுபிடிக்கப்பட்டு தண்டிக்கப்பட்டனர்.

நியாயம் வழங்கல் : மிகப் பண்டைக் காலத்தில் ஆட்சியில் இருந்த சிறு சிறு அரசுகளில் மன்னன்தானே நியாயாதிபதி யாகவும், குற்றவாளிகளைத் தன்கையாலேயே ஒறுக்கும் அதிகாரி யாகவும் இருந்தான். பிற்காலத்தில் நாட்டில் பலவிதமான நியாய சபைகள் இருந்தன. கிராமங்களில் நியாயம் வழங்கிய பஞ்சாயத்துக்களிலிருந்து அரசனவையிற் கூடிய பேரவை வரை பலவிதமான 'தருமாசனங்கள்' வழக்கில் இருந்தன. மன்னர் பேரவையில் 'பிராத் விவாகர்' என்று பெயரிய அதிகாரி நியா யம் வழங்குவதில் மன்னனுக்கு உதவி புரிந்தார். அப் பேரவை யில் பெரும்பாலும் மிகப் பெரிய குற்றவாளிகளே விசாரிக்கப் பட்டனர்; அன்றியும் சிறு நியாய சபைகளில் வழக்கில் தோற்று விட்டவர்கள் பேரவைக்கு நியாயம் கோரி விண்ணப்பம் செய்து கோடலும் உண்டு.

அர்த்தசாத்திரத்தின் கோட்பாட்டின்படி, நாடு முழுவதும் பலப் பல நீதி மன்றங்கள் இருத்தல் வேண்டும். ஒவ்வொரு மன்றத்திலும் மூன்றிற்குக் குறையாத எண்ணிக்கையுள்ள நியாயாதிபதிகள் அலுவல் பார்த்தல் வேண்டும். பௌத்தர்களுடைய ஒரு ஜாதகக் கதையில் ஐந்து நீதிபதிகள் ஒரு சபையில் இருந்ததாகக் கேள்வியுறுகிறது. பிராத்விவாகரும் பிற மூன்று நீதிபதிகளும் வேண்டும் என்பது மனுவில் கண்டது. மிருச்சகடிகை ('மண்ணியல் சிறு தேர்') என்று பெயரிய நாடகத்தில் அதிக ரஸிகன் என்று பெய்ரிய செட்டி ஒருவனும் அவனுக்கு உதவியாக வேறு இரு நீதிபதிகளும் ஒரு மன்றத்தில் நியாயம் வழங்கிய கதை கூறப்படுகின்றது. இவ் 'வதிகரஸிகன்' அரசாங்க அலுவலன்.

பண்டைய இந்திய நீதி மன்றங்கள் கையூட்டுப் பெற்று நியாயத்தினின்றும் தவறிய வரலாறு பல இடங்களில் கேள்வியாகின்றது. மேற்கூறிய பௌத்த ஜாதகக் கதையில் இது கூறப்படுகின்றது. அன்றியும் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தினின்றும் ஆண்ட பல்லவ மன்னனை மகேந்திரவர்மன் I இயற்றிய 'மத்த விலாஸப் பிரகசனம்' என்னும் சிறு நாடக நூலில் நீதி மன்றங்கள் கையூட்டுப் பெறும் செய்தி பேசப்படுகின்றது. ஆயினும் நீதி வழங்கிய முறையும், அதற்கென விதிக்கப்பட்ட விதிகளும், உண்மையைக் காண அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் பலவாயிருந்தன. நீதிபதிகளின் தகுதிகளைப் பேசும் நூல்கள் அவர்கள் கற்று அடங்கிய பெரியோர்களாதல் வேண்டும் என்று கூறுகின்றன. நீதிபதிகள் ஒழுங்காகத் தங்கள் அலுவல்களைப் பார்க்கின்றனரா என்பதையறிய வேண்டும்; மன்னன் ஒற்றர்களைக் கொண்டு அவர்கள் நடத்தையைப் பரிசோதனை செய்ய வேண்டும் என்று அர்த்த சாத்திரம் உரைக்கின்றது. நியாயம் வழங்கியதில் தவறிய அல்லது கையூட்டுப் பெற்ற நீதிபதிக்குக் கடும் தண்டனை அளிக்கப்பட வேண்டும் என்று விஷ்ணு ஸ்மிருதி கூறுகின்றது. அதாவது அவனுடைய உடைமைகள் யாவற்றையும் கைப்பற்றிக்கொண்டு அவனையும் நாடு கடத்தி விடுதல் என்பதே அத்தகையோர்க்கு உரிய தண்டனை என்கிறது. பொய்க்கரி கூறுபவர்களுக்குப் பெரிய தண்டனைகள் விதிக்கப்பட்டதோடு அவர்கள் நூறு கெட்ட பிறவி யெடுத்து வருந்துவர் என்றும் கருதப்பட்டது. பெருங் குற்ற வழக்குகளில் மகளிர், கற்றுத் தேர்ந்த அந்தணர், கடனாளிகள், முன்பு குற்றம் செய்து தண்டிக்கப்பட்டவர்கள், உறுப்பறைகள் முதலியோர் சாட்சி கூறத் தகாதவர்கள் என்று கருதினர். மேற்குலத்தோர் ஈடுபட்ட வழக்குகளில் அவர்களுக்கு

எதிராகவோ பிறவாறோ கீழ்க் குலத்தோர் சாட்சி கூறக் கூடாது, அன்றியும் பொதுவாக, சாட்சிகள் உண்மை கூறுகின்றனரா என்பதைக் காணப் பல வழிகள் பின்பற்றப்பட்டன.

குற்றஞ் சாட்டப்பட்டவர்கள் உண்மையிலேயே குற்றவாளிகள் என்னும் ஐயம் இருப்பினும் அவர்களுடைய குற்றத்தை நிரூபிக்க முடியாமற் போனால் அவர்களைத் துன்புறுத்திச் சித்திரவதை செய்து குற்றத்தை ஒப்புக் கொள்ளச் செய்வதுண்டு. சித்திரவதை பலவகைப்பட்டது. பெரும்பாலும் சவுக்கடி கையாளப் பெற்றது. அந்தணர், குழந்தைகள், நோயாளிகள். பைத்தியக்காரர்கள் முதலியோர்கட்கு மிகுதண்டம் அளிப்பதில்லை.

குற்றவாளிகளை அறிவதில் நீதி மன்றங்களுக்குப் பெரிய பொறுப்பு உண்டு. சாட்சிகளை விசாரித்தும், சான்றுகளையும் பத்திரங்களையும் ஆராய்ந்தும் உண்மை காண்பது பெரும்பாலும் மரபு, இவ்வகைகளில் உண்மை புலப்படாதபோது குற்றஞ் சாட்டப்பட்டவர்களைச் சித்திரவதை செய்து 'உண்மை'யை அவர்கள் வாயிலாகவே வரவழைத்தல் என்னும் முறை மேற்கொள்ளப்பட்டது. இவை தவிர வேறொரு வழியும் கையாளப்பெற்றது. அதுவே 'தெய்வ சம்மதம்' காணல் என்னும் வழி. அதாவது குற்றவாளியை, நீர், நெருப்பு முதலியவற்றைக் கொண்டு ஆராய்தல். சுடச்சுடக் காய்ச்சிய இரும்புக் கம்பியைக் கையில் ஏந்திக்கொண்டு புண்படாமல் இருந்தால், அவன் குற்றவாளியல்லன் என்று காணலும் நீரில் கிடந்து முழுகாமல் இருந்தால் அவன் குற்றஞ் செய்தானல்லன் என்று காணலும் இவ் வகையைச் சார்ந்தவை. 'ஒரு குடத்திற்குள் பாம்பினையிட்டுக் குற்றஞ் சாட்டப் பெற்றவனை அக்குடத்துள் கையை விடச் செய்து அவன் அப்பாம்பால் தீண்டப்படாவிடினும் தீண்டப்பட்டு தீங்கடையாவிடினும் அவன் குற்றவாளியல்லன்' என்று காணும் மரபு பழமொழி என்னும் தமிழ் நூலுட் காணப்படுகின்றது.[1] இவ்வாறு குற்றவாளியைச் சோதிக்கும் முறைகள் விசயநகரப் பேரரசில் கூட நடைமுறையில் இருந்தது. ஐரோப்பாவில் இடைக்காலத்தில் இம் முறை (Trial by ordeal) கையாளப் பெற்றது. மனிதன் தனது அறிவையும் அவ்வறிவு இயங்குதற்கு வேண்டிய சான்றுகளையும் மட்டும் கொண்டு ஒரு உண்மையைக் காண முற்பட்டு அம் முயற்சியில் வெற்றி காணாவிடில்,

[1] பழமொழி 57.

தெய்வ சம்மதத்தைக் கோரிப் பெற்று 'உண்மை' காண்டல் பண்டைக் கால மரபுகளில் ஒன்று. ஆட்சி நிலையங்களில் மிக முக்கியமானவற்றில் ஒன்ருன நீதி மன்றங்களிலும் இம் மரபு மேற்கொள்ளப்பட்டமைக்கு 'தெய்வ சம்மத'ப்படி குற்றவாளியை அறிய முற்படுதல் ஓர் எடுத்துக்காட்டு

இந்தியர்களில் பெரும்பாலோர் நீதிமன்றங்களில் வழக்குகள் தொடர்வதில்லை என்று மெகஸ்தனீஸ் கூறியுள்ளார். அக்காலத்தில் இதுஉண்மையாகவே இருந்திருக்கக்கூடும். அவ்வாறு வழக்குகளை நீதி மன்றங்கள் வரை கொண்டு செல்லாமைக்கு நீதிபதிகளின் பண்புக் குறைபாடு காரணமாயிருந்திருக்கக் கூடும். மத்த விலாஸப் பிரகசனத்தில் பௌத்த பிக்ஷு ஒருவன் செல்வம் மிகுந்தவனுதலால் நீதிபதிகளுக்குக் கையூட்டு அளித்து சரிக்கட்டிவிடுவான் என்னும் அச்சம் காரணமாக மற்றையோர் நீதி மன்றத்திற்குச் செல்லாமல் விலகி விட்டமை கூறப்படுகின்றது. இந்து தர்ம சாத்திரங்களை யொட்டிய சட்டம் அறிந்தவர்களில் பெரும்பாலோர் பிராம்மணர்களாயிருந்தனர்; இவர்களில் மிகச் சிலரே நீதி மன்றங்களில் அலுவல் பார்த்தனர். பிறர் மக்களிடையே எழும் வழக்குக்களை நீதி மன்றங்களுக்கு வெளியே தீர்க்கும் வழி வகைகளை ஆராய்ந்து அறிவுரை வழங்கியிருக்கக் கூடும். விசயநகர காலத்திற்குப் பிறகு நியாய வக்தாக்கள் அல்லது வழக்கறிஞர்கள் என்னும் ஒரு வகை அலுவலர் தோன்றுகின்றனர். இஸ்லாமியர் ஆட்சியில் கொத்தவால், திவான் என்போருடைய மன்றங்களில் வழக்குகளை விவாதிக்க வந்த வக்கீல்கள் இந்த வகையோரே.

**ஒறுத்தல்:** சொத்துரிமை சம்பந்தமாகத் தொடரப்படும் வழக்குகளில் தோற்ருேர் அடையும் தண்டனை வேறு. குற்றச் சட்டப்படி குற்றஞ் சாட்டப் பட்டுத் தண்டனையடைந்தவர்களுக்கு அளிக்கப்படும் தண்டனை வேறு. ஒறுத்தல் என்பது பிற் கூறப்பட்ட வகையினருக்கே பொருந்தும். அவர்களுக்கு அளிக்கப்பட்ட தண்டனை இருவகைப்படும். ஒன்று சமயச் சார்புடைய தவங்கள் (பட்டினி கிடத்தல் முதலியன), கோயில்களுக்குத் தண்டம் அல்லது அபராதத் தொகையாகப் பணம் கொடுத்தல். சமயப் பலன் நோக்கோடு பிற நோன்புகளை மேற்கொள்ளுதல் என்பது ஒருவகை. மற்ருென்று, குற்றச் சட்ட வழக்குகளில் தோற்ருேர் நஷ்ட ஈட்டுத்தொகை கொடுத்தல். நஷ்டப் பட்டோர் தம் நஷ்டம் எத்தகையது, எவ்வளவு என்பவற்றைப் பொறுத்தும், அந்த நஷ்டத்திற்குச் சமமான தொகை எவ்வளவு என்று நீதிபதிகள் நிர்ணயிப்பதைப்

பொறுத்தும் இது அமையும். தென் இந்திய இடைக்காலக் கல்வெட்டுக்களில் குற்றவாளிகளுக்கு அரசு அளித்த தண்டனைகள் கூறப்படுகின்றன. இவற்றில் பெரும்பாலானவை குற்றவாளி என்று நிரூபிக்கப் பட்டவன் கோவிலுக்கு மானியமாக ஒரு தொகையை அளித்தல் அல்லது கோவிலில் இறைவன் முன்னிலையில் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்க ஒரு நந்தா விளக்கு அளித்தல் என்பவையே. இவ்வாறு சமயச் சார்புடைய அபராதங்களைச் செலுத்துவதால் குற்றவாளியின் பாவம் தெய்வத்தால் மன்னிக்கப்படும் என்று அவர்கள் கருதினர் போலும். பாவ மன்னிப்பால் குற்றத்தீர்வும் ஏற்படும் என்று அவர்கள் கருதியிருக்க வேண்டும். ஒரு படைஞனைக் கத்தியால் குத்திய குற்றத்திற்காகக் கோவிலுக்கு 96 ஆடுகளை மானியமாக விட்டாற் போதும் என்று நீதிபதிகள் தீர்மானித்ததாக ஒரு சோழர் கல்வெட்டுக் கூறுகின்றது. இதனால், சோழர் காலத்தில் பெரிய குற்றங்களுக்கும் எளிய தண்டனை அளிக்கப்பட்டது என்று முடிவு காணுதல் சரி என்று தோன்றவில்லை. இத்தகைய தீர்ப்புக்களில் அக்காலத்தில் எளிய தண்டனை கொடுப்பதில் நம்பிக்கை இருந்தது என்று கூறுவதைக் காட்டிலும் பாவமன்னிப்பில் அதிக நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது என்பதே பெறப்படும். அன்றியும், கோயில் என்பது இடைக்காலத் தமிழருக்கு, கிராமப் பொருளாதாரத்தின் அச்சாணியாக இருந்தது என்பதையும் காண்டல் வேண்டும். கோயில் நிர்வாகத்திற்கும் அதன் பெருக்கத்திற்கும் மேலும் மேலும் நிதி தேவைப் பட்டமையால், குற்றவாளியிட மிருந்து பெறப்படும் அபராதத் தொகையைப் பெற்றுக் கோயில் மானியங்களாக நிறுவுதல் ஒரு சிறந்த செல்வாதார முறை என்று அவர்கள் கருதினர் என்று கோடலே சிறப்புடையது.

அபராதம் அல்லது தண்டத்தொகை செலுத்துதல் மிகச் சாதாரணமான குற்றத்தண்டனை. பண்டைய இந்தியாவில் ஒரு செப்புக் காசு தண்டமாக இறுத்தலிலிருந்து ஒருவருடைய சொத்து முழுவதையுமே பறிமுதல் செய்து விடுதல்வரை இவ்வபராதம் விதிக்கப்பட்டது. இவ்வபராதத் தொகை மூலமாகப் பெரும்பான்மைக் குற்றங்களுக்குக் கழுவாய் ஏற்படும் என்று கருதப் பட்டது. இவ்வாறு வசூலிக்கப்பட்ட தண்டத்தொகை அரசின் செல்வத்தை மிகுவித்து நிதி நிலைமையை உயர்த்தியதோடு, பிற வகை ஒறுப்புக்களைக் குறைத்தது. இங்ஙனம் விதிக்கப்பட்ட தண்டத்தொகையைச் செலுத்த மாட்டாதவன் தன்னிச்சைப்படியே அடிமையாகித் தொழில் செய்து தன்னை விடுவித்துக் கொள்ளும் வரையில் அந்நிலையில் இருப்பான்.

சிறையிருத்துதல் என்பதொரு தண்டனை. இதனைத் தற்காலத்தில் யாவரும் அறிவர். பிற நாடுகளில் ஆதிகாலம் தொட்டே இது ஒரு தண்டனையாகவே கருதப்பட்டு வந்துள்ளது. ஆனால், இத்தகைய தண்டனையை ஸ்மிருதிக்காரர்கள் குறிப்பிடுவதில்லை. ஆயினும், பிற இலக்கியங்கள் வாயிலாகச் சிறை தண்டனையைப் பற்றி மிகவும் கேள்வியுறுகிறோம். மணிமேகலையில் காப்பியத்தலைவி சிறையிருத்தப்பட்டது கேள்வியாகின்றது. புறநானூற்றில் சேரன் கணைக்காலிரும்பொறையும் மாந்தரஞ் சேரலிரும் பொறையும் சோழராலும் பாண்டியராலும் முறையே சிறையிருத்தப் பெற்ற செய்தி பேசப்படுகின்றது.[1] இங்ஙனமே வடமொழி இலக்கியத்திலும் பலவிடங்களில் இச்சிறைத் தண்டனை கூறப்படுகின்றது. அசோகர் தமது ஆட்சிக் காலத்தில் சிறையிருந்தாரைச் சிறை நீக்கம் செய்தமையைப் பெருமையோடு கூறிக்கொள்கிறார். ஹர்ஷர் காலத்தில் சிறைத் தண்டனை சாதாரணமாகப் பெரும்பான்மைக் குற்றவாளிகளுக்கு விதிக்கப்பட்டதாக யுவான் சுவாங் கூறுவார். உறுப்புக் குறைத்தலும், சித்திரவதை செய்தலும் நியாயமான தண்டனைகளாகக் கருதப்பட்டன. 'சிரச்சேதம்' கொலையாளிகளுக்கு உரிய தண்டனையாக அர்த்த சாத்திரம் கூறுகின்றது. வதந்திகளைக் கிளப்புவாரும் கன்னம் வைப்பாரும் அரண்மனையிலிருந்து யானை குதிரைகளைத் திருடுவாரும் தூக்கிலிடப் பட்டனர். பெற்றோர், தமையன், சாதுக்கள், மகன் என்பாரைக் கொன்றவர்களையும், அரசை எதிர்த்துக் கலகம் செய்வோரையும் உயிரோடு எரித்து விடுதல் தண்டனையாம். அறிந்து கொலை செய்தாரையும், நிரை கவர்ந்தாரையும் சிரச் சேதம் செய்தனர். ஆற்றிடை அணைக்கட்டினை உடைப்பவர்களை அவ்வணையிலே முழுக்கிச் சாக அடித்தல் தண்டனை. கொண்டானைக் கொன்றாளை நாற்புறமும் மாடுகட்டி இழுத்துப் பிய்த்து விடுதல் உரிய தண்டனையாகக் கருதப்பட்டது. இவையெல்லாம் அர்த்த சாத்திரத்தில் கூறப்பட்ட ஒறுப்பு முறைகள். பிறர் மனை விழைதல் முதலிய குற்றங்களுக்குக் கொடிய முறைகளில் கொலைதண்டனை விதிக்கிறது மனுஸ்மிருதி. புத்தருடைய அடிச்சுவட்டை பின் பற்றிய அசோகர் கொலை தண்டனையை நீக்கவில்லை. நீதி மன்றங்களின் உத்திரவுப்படி குற்றஞ்சாட்டப்பட்டவர்களையும், குற்றவாளிகள் என்று நிரூபிக்கப்பட்டவர்களையும் சித்திரவதை செய்யும் மரபினையும் அவர் ஒழிக்கவில்லை.

[1] புறநானூறு: 74, 17.

மௌரியர் ஆட்சிக்காலத்தில் மிகக் கடுமையான குற்றச் சட்டம் பொதுமக்களை அச்சுறுத்தி வாட்டிற்று; ஆனால்; பேரரசு குப்தர் காலத்தில் குற்றச்சட்டத்தின் கடுமை மிகவும் குறைந்து அடங்கிற்று. அக்காலத்தில் வட இந்தியாவிற்கு வந்த பாஹியான் என்னும் சீனயாத்திரிகர் மரணதண்டனை எந்தக் குற்றவாளிக்கும் அளிக்கப படவில்லை என்று குறிப்பிடுகிறார். மிகப் பெருங் குற்றங்களுக்கும் கூட ஒரு கையை வெட்டி விடுதலே போதுமான தண்டனையாகக் கருதப்பட்டது. சில குற்றங்கள் எப்போதுமே கொடிய குற்றங்களாகக் கருதப்பட்டமை இந்திய இலக்கியத்தை மேலெழுந்தவாரியாகப் பார்ப்பார்க்கும் விளங்கும். பசு, (பத்தினிப்) பெண்டிர், பார்ப்பார் என்போருடைய உயிர் சிறந்ததாகக் கருதப்பட்டது. ஆன்முலையறுத்தல் அறனில் செய்கையாகக் கொள்ளப்பட்டது. மகளிர் கருச் சிதைத்தலும் அத்தகைய குற்றம் என்று கருதினர். ஸ்திரி ஹத்தி, சிசு ஹத்தி, கோ ஹத்தி, பிரம்ம ஹத்தி என்பவை வன்மையாக நீக்கப் பட்டன.

ஸ்மிருதிகளில் அதுவும் முக்கியமாக மனுஸ்மிருதியில் விதிக்கப்பட்டுள்ள தண்டனைகள் 'ஒரு குலத்தோர்க்கு ஒரு நீதி'யாக அமைந்துள்ளன. உதாரணமாக ஒரு க்ஷத்திரியனைப் பற்றி அவதூறு செய்த பார்ப்பானுக்கு 50 பணம் அபராதம், ஆனால் அவன் ஒரு வைசியனையோ, சூத்திரனையோ அவதூறு செய்தால் 25 அல்லது 12 பணம்தான் அபராதம் செலுத்த வேண்டும். 'சட்டத்தின் முன்னிலையில் எல்லோரும் சமம்' என்னும் தற்காலக் கொள்கையைப் பண்டைய இந்தியர் ஏற்றுக் கொள்ள வில்லை. இத்தகைய ஏற்பாட்டால் மிகவும் பயனடைந்தவர்கள் அந்தணர்களே. ஏனெனில், பெரும்பான்மை குற்றச்சட்டத் தண்டனைகளில் அந்தணர்களுக்கு எளிய தண்டனைகளும் பிறருக்குக் கடிய தண்டனைகளும் விதிக்கப் பட்டன. ஆனால் ஒரு குலத்திற்கு ஒரு நீதி என்னும் கோட்பாடு ஏதேனும் ஒரு விதத்தில் எல்லாச் சமுதாயத்திலும் எல்லாக் காலத்திலும் மேற்கொள்ளப் பட்டு வந்துள்ளது. ஆனால்; கொள்கை ரீதியாகவே மானுடரா லாக்கப்பட்ட சட்டங்கள் தம்மைக் கட்டுப்படுத்தா என்னும் எண்ணம் அந்தணர்களிடையே நிலவிவந்துள்ளமை மறுக்கப்படாதது. பின். வேதகால அந்தணர்கள் மன்னனுடைய முடிசூட்டு விழாவில் புரோகிதம் செய்யும்போது ஆண்டுக் குழுமியிருக்கும் குடிசனங்களை நோக்கி, "இப்போது முடி சூட்டிக் கொள்ளும் இவனே உங்களுடைய மன்னன்; எங்களுக்கோவெனில், எமது மன்னன் சோமனே" [சோம பானத்தைக் கடவுள் நிலையில் வைத்து எண்ணுவது வைதிக மரபு]

என்று அறிவிக்கும் மரபு நினைவு கூரற்பாலது. அந்தணர்களைச் சித்திரவதை செய்தல் தவிர்க்கப்பட்டது. அவர்களைக் கொலை செய்தல் சிறிதும் கூடாதது. ஆனால், காத்யாயனர் ஸ்மிருதியில், கருச்சிதைத்தல், ஸ்திரீஹத்தி, பொன்னைக் களவாடல் முதலிய குற்றங்களுக்கு அந்தணர்களுக்கு மரணதண்டனை யளிக்கலாம் என்று கூறப் படுகிறது. மிருச்சகடிகை என்னும் நாடகத்தில் அந்தணனை தலைவனுக்குச் சித்திரவதை, மரண தண்டனை முதலியவை நேரிடும் நிலை ஏற்படுகிறது. மனுஸ்மிருதியில்லாத பிற இலக்கியங்களைக் காணும்போது அந்தணர்கள் உண்மையில் மிகுந்த சலுகைகளைப் பெறவில்லை என்பது தெளிவாகும். மனுதர்ம சாத்திரத்தில் கூட திருட்டுக் குற்றத்திற்கு சூத்ரன் திருட்டுப் போன பொருள்களின் மதிப்பைப் போல எண்மடங்கு தண்டம் செலுத்த வேண்டும் என்று கூறி அதே குற்றத்திற்கு அந்தணர்கள் 64 மடங்கு தண்டத் தொகை செலுத்த வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

வழக்குகளை விசாரித்துக் குற்றங்களை நிர்ணயித்துத் தண்டனை யளிக்கும் பொறுப்பு மன்னன் அவைக் களத்திற்கும் பிற நீதி மன்றங்களுக்கும் மட்டுமே உரித்தாயிருந்தது என்று கருதுவது தவறாகும். கிராமப் பஞ்சாயத்துக்களும், குடிக்குழுக்களும் சிறு வழக்குகளை விசாரித்து சட்ட முடிவு செய்தன. சாதியை விட்டு நீக்குதல் முதலிய பெரிய தண்டனைகளைக் கூட இக் குழுக்களால் அளிக்க முடிந்தது என்று காண்கிறது.

ஒற்று : பண்டைய இந்திய அரசினை 'ஒற்றர் அரசு' என்று கூறலாம். எண்ணிறந்த ஒற்றர்களை ஏவி மக்களுடைய செயல்களையும் எண்ணங்களையும்கூட ஆய்ந்தறிந்து அறிவிக்குமாறு அமைத்திருந்தனர். இவர்கள் எவ்வாறு செயலாற்ற வேண்டும் என்பதை அர்த்தசாத்திரம் விரிவாகவும் தெளிவாகவும் கூறுகிறது. ஒற்றர் அமைப்பினை இரண்டு அதிகாரங்களில் விவரிக்கும் கௌடில்யர், பண்டைய இந்திய ஆட்சிக் கட்டுப்பாட்டிற்கும் இயக்கத்திற்கும் இவ்வாட்சி நிலையம் எவ்வளவு இன்றியமையாதது என்பதை வற்புறுத்துவார் போலப் பல இடங்களிலும் ஒற்றன் தன்மையையும் இயக்க முறைகளையும் எடுத்துக் கூறுகின்றார். அமைச்சர்கள் ஒற்றர்களை நியமித்து, ஏவி, விசாரித்து அவர்கள் வாயிலாக நாட்டு நடப்புக்களை யறிந்து கொண்டு அதற்கேற்ப ஆட்சி நடத்துவர்; ஆயினும், இவ்வமைச்சர்களையும் வேவு பார்ப்பதற்குச் சில ஒற்றர்கள் இருப்பதுண்டு. அவர்கள் நேரடியாக மன்னரோடு தொடர்பு கொள்வர்.

ஆண் ஒற்றர், பெண் ஒற்றர் என இருபாலாரும் ஒற்றுவ துண்டு. இவ்வொற்றர்களையும் ஒற்றுதற்குப் பிற அந்தரங்க மான ஒற்றர்கள் நியமிக்கப் படுவர். பெரும்பாலும் நாவித மாகப் பேசி இரகசியங்களைக் கறக்கும் நாவிதர்களும், பலன் சொல்வார் போல நடிக்கும் போலிச் சோசியர்களும், சமயற் காரர்கள் முதலிய வேலைக்காரர்களும், கணிகையரும் இன்னோ ரன்ன பிறரும் ஒற்றராக நியமனம் பெறுவர். சிலர் சாதுக்கள் போல நடித்து வேவு பார்ப்பர்; இன்னும் சிலர் மன்னனுடைய பகைவர்களையறிந்து அவர்களை எவ்வாறு அழிப்பது என்று ஆராய்வர்.

ஒற்றர்கள் அரசின் ஓர் அங்கமாகவே கருதப் பட்டனர். மன்னனின் ஆதிக்கத்தை நிலை நிறுத்தற் பொருட்டு அவர்கள் ஒரு கருவியாகவே பயன்படுத்தப் பட்டனர்.

**காசுகள் :** பண்டைய மன்னர்கள் வாணிபத் துறையில் பயன் கருதியும், தமக்குக் கப்பம் கட்டுவோர் வசதியை முன் னிட்டும் காசுகளைத் தங்கசாலைகளில் அச்சிட்டு வழங்கினர். இத்துறையினை மேற்பார்க்க வேறு அதிகாரிகள் இருந்தனர். இக் காசுகளில் மன்னனுடைய பொறிகள் இடப்பட்டன. சில காசுகளில் மன்னனுடைய பெயரும் அவன் உருவமும் காணப் படுகின்றன. இவை பெரும்பாலும் வணிகர்க்கே பொருள் களைச் சந்தைகளில் மாற்றுதற்கு உதவின. தற்காலத்திற் போல, பண்டைய இந்தியாவில் காசுகள் ஒரு படித்தாகவோ, சிலகாலம் கழித்து மாற்றி அடிக்கப்பட்டோ, ஒரு நாட்டிற்கு ஒருவகைக் காசு என்னும் முறையிலோ வெளியிடப் படவில்லை. பிற நாட்டுக் காசுகள் எங்கும் எளிதில் வழங்கின. ஒரு காலத் தில் வழங்கப் பெற்ற காசுகள் பல நூற்றுண்டுகளுக்கு வழங் கின. பேரரசு ரோமானியர் வழங்கிய காசுகள் தமிழகத்தில் வழக்கில் இருந்தமை காணப்படும்.

வணிகர்களே பண்டமாற்றைக் கருதிக் காசுகளைப் பெரி தும் போற்றினர். காசு வட்டிக்குத் தரப்பட்டது. வட்டி வாங்குதல் தவறு என்று இடைக்கால ஐரோப்பாவில் கருதப் பட்டது போல இந்தியாவில் கருதப்படவில்லை. பணத்தைக் கொடுக்கவும் வாங்கவும் இன்றுபோல் அன்று வங்கிகள் இல்லை; ஆயினும், வணிகர் குழுக்களே வங்கிகளாக அமைந்தன. செட்டிகள் என்போர் வங்கிகள் ஆற்றும் வினைகளில் பெரும் பாலானவற்றை ஆற்றினர். சிரேணிகள் என்னும் வணிகர்

குழுக்கள் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டதோடு, வாணிகப் பொது நிலையங்களாகவும் செயற் பட்டன. வழிப்பறி மிகுந்திருந்த அக்காலத்தில் வாணிகச் சாத்துக்கள் ஓரிடம் விட்டு மற்றோரிடம் செல்லுங்கால் நேரக் கூடிய ஆபத்துக்களினின்றும் அவர்களைக் காக்க அந்நிலையங்களில் நியமிக்கப்பட்ட போர் வீரர்கள் அவ்வாணிகச் சாத்துக்களைப் படைக்கலங் கொண்டு காத்தனர். மணிக்கிராமங்கள்; ஐந்நூற்றுவர், நானாதேசிகள் என்றெல்லாம் பெயர் பெற்ற வாணிகக் குழுக்கள் தங்களுக்குத் தேவையான காசுகளை வழங்கியும் உற்பத்திப் பொருள்களை ஆக்கிப் பகிர்ந்தும், தங்கள் தரைச் செலவுகளைக் காக்கத் தனிப் படைஞர்களை நியமித்துக் கொண்டும் செயலாற்றின. இவற்றின் செயற்பாடுகளில் மன்னர்கள் பெரும்பாலும் தலையிட்டதில்லை.

# 13. பண்டைய இந்திய அரசியல் நிலையங்களில் பிராந்திய வேறுபாடுகள்

இதுவரை விவரிக்கப்பட்ட ஆட்சி நிர்வாக நிலையங்கள் பண்டைய இந்திய அரசியல் நிறுவனங்களின் பொதுமையை விளக்குவதாகக் கொள்ளலாம். மௌரியர் காலத்திற்குப் பிறகு பண்டைய இந்தியாவில் ஆண்ட முக்கியமான இந்து அரசுகள் (1) சாதவாகனர் அரசு, (2) சங்க காலத் தமிழரசு, (3) பேரரசு, குப்தர் அரசு, (4) பல்லவர், பாண்டியர் அரசுகள், (5) சாளுக்யர், ராஷ்டிரகூடர் அரசுகள், (6) சோழர் பேரரசு என்பவையாம். இவற்றில் நாம் மௌரியப் பேரரசிற் கண்ட அரசியல் நிறுவனங்களையும் சில மாறுபாடுகளுடன் காண்கிறோம். அவற்றின் அமைப்பும் செயற்பாடுகளும் ஏறத் தாழ ஒரே மாதிரியிருந்தன; ஒவ்வொரு பிராந்தியத்தில் ஒவ்வொரு காலத்தில் இந் நிலையங்களுக்கு வெவ்வேறு பெயர்கள் அமைந்திருந்தனவாயினும், புது வகை ஆட்சி நிலையங்கள் பெரும்பாலும் காணப்படுவதில்லை.

சாதவாகனர் ஆட்சியில் மன்னர்கள் ஆரவாரமான பட்டங்களைப் புனைந்து கொள்ளும் மரபு ஏற்பட்டது. 'ராஜாதிராஜன்', 'மகாராஜாதிராஜன்' என்னும் பட்டங்கள் மேற் கொள்ளப் பெற்றன. பெரும்பாலும் 'அரசியர்', 'தேவியர்' என்னும் பட்டமும், அவருள் சிறந்தோர் சிலர் 'மகாதேவியர்' என்னும் சிறப்புப் பட்டமும் ஏற்றனர். மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவினுட் போந்து வடமேற்கு இந்தியப் பிராந்தியத்தில் அரசு செலுத்திய பஹ்லவர்கள் முதலியோர் க்ஷத்ரபர் ஆட்சியை நிறுவினர். க்ஷத்ரபர், மகாக்ஷத்ரபர் என்னும் ஆட்சியாளர் பாரசீக ஆட்சி நிறுவனங்களில் கண்டவர். வடமேற்கு இந்தியாவில் சாதவாகனர் தக்காணத்தில் ஆண்டு வந்த காலத்தில் அதே பெயர்களோடு ஆட்சி நிறுவப் பெற்றது. சிற்சில ஆட்சியா

ளரின் அதிகார நிலைப் பெயர்கள் புதியனவாக ஒலிப்பினும் ஆட்சிமுறை இந்தியாவின் ஏனைய பகுதிகளில் நிகழ்ந்து வந்த வாறே ஆண்டும் நடைபெற்றது. சாதவாகனர் ஆட்சியில் அமாத்யர்; மகாசேனாபதியர் என்னும் நிர்வாக அலுவலர்கள் அமைதிக்கால, போர்க்கால அலுவல்களை மேற்கொண்டு பார்த்தனர். அஃதேபோல் கிரேக்கப் பட்டப் பெயர்களான மெரிடார்க் (Meridarch), ஸ்ட்ராடிகோஸ் (Strategos) என்பவற்றை ஏற்ற அலுவலரும் இருந்தனர். மௌரியர்கள் பாரசீகருடைய மாநில, ஆட்சி முறைகளை மேற்கொள்ளத் தொடங்கிய பிறகு அவர்கட்குப் பின் தக்காணத்தில் ஆட்சி மேற்கொண்ட சாதவாகனர்களும் மாநில ஆட்சியாளர், மாவட்ட அலுவலர் ஆகிய நிருவாக அதிகாரிகளை நியமித்துக் கொண்டனர். மாவட்டங்களை ராஷ்டிரம் என்னும் பழக்கம் அவர்கள் காலத்தில் ஏற்பட்டதால் தக்காணத்தின் மேற்குப் பகுதி அக்காலத்திலிருந்து மகாராஷ்டிரம் என்னும் பெயர் பெறுவதாயிற்று.

சாதவாகனர்கட்கு இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகட்குப் பிறகு வட இந்தியாவில் மகதத்தில் தோன்றி வளர்ந்த குப்தப் பேரரசு நடத்திய ஆட்சி முறை பாஹியான் என்னும் சீன யாத்திரிகரால் ஓரளவு விவரிக்கப்பட்டுள்ளது; பிற சான்றுகளினின்றும் அவ்வாட்சி முறை சிறிதளவு விளக்கமுறுகின்றது. ஆளும் மன்னன் இறந்த பிறகு ஆட்சியை அவன் மூத்த மகன் மேற்கொள்ளுதலே மரபாயினும், பேரரசுக் குப்தர் ஆட்சிக் காலத்தில் பெரும்பாலும் இரண்டாம் மகனே அரசெய்தியமை தற்செயலோ அன்றி ஏற்பாடோ தெளிவாக அறிய வொண்ணாதது. I-ம் சந்திரகுப்தருக்குப் பின் அவரது இரண்டாம் மகனான சமுத்ரகுப்தரும், சமுத்ரகுப்தருக்குப் பின் அவரது இரண்டாம் மகனான II-ம் சந்திர குப்தரும் ஆட்சிக்கு வந்தமை நோக்கற்பாலது. திக்விசயம் என்னும் பெயரால் பிறர் நாடு வவ்வுதல் என்னும் மரபும், அதனைப் பரிவேள்வியால் பெருமைப் படுத்திய பான்மையும் அவர்கள் ஆட்சியால் விளங்கும். அமைதிக்கால அலுவலரான அமைச்சர்களே போர்க்காலத்திலும் சேனாபதியர் ஆகி அவ்வலுவலையும் பார்த்தனர். சந்திவிக்ரஹகர் (அமைச்சர்), குமாரமாத்யர் (இளைய அமைச்சர்); மகாதண்டநாயகர் (சேனாபதியர்) என்னும் அதிகாரிகள் கேள்வியுறுகின்றனர். மாநிலங்களை சக்திகள், தேசங்கள் என்றும், மாவட்டங்களை விஷயங்கள், பிரதேசங்கள் என்றும், மாநில ஆளுநர்களை உபரிகர் என்றும், மாவட்ட அலுவலரை விஷயபதிகள் என்றும் அழைத்தனர். நகரங்களின் பொது அலுவல்களை மேற்பார்த்தவர்கட்கு நகர சிரேஷ்டியர் என்பது பெயர். மாவட்டங்களின்

ஆட்சிக்கு அடுத்தபடியாக கிராம ஆட்சி அடிப்படையில் அமைந்திருந்தது. மௌரியர் ஆட்சியின் கடுமை குப்தர் ஆட்சியில் காணப்படவில்லை. இது பொதுவாக, குற்றச் சட்டத்தை நிர்வகித்த முறையிலிருந்து தெளிவாகின்றது. கடுங் குற்றவாளிகளுக்கும் எளிய தண்டனைகளையே அளித்த குப்தர் ஆட்சிக்கும் எளிய குற்றங்களுக்கும் கடுமையான தண்டனைகளையளித்த மௌரியர் ஆட்சிக்கும் இருந்த வேறுபாடு தெற்றெனவிளங்கும். மௌரியர் ஆட்சியைப் பின்பற்றிக் கடுந்தண்டனைகளைத் தாராளமாக வழங்கிய ஹர்ஷர் காலத்தில் வழிப்பறிக் கொள்ளையர் மிகுந்திருந்தமை யுவான் சுவாங்கால் பேசப்படுகின்றது. இதற்கு நேர்மாருகப் பேரரசுக் குப்தர் ஆட்சியில் மகளிரும் சிருரும் வெளிநாட்டாரும் கூட எளிதில் பெருவழிகளில் துணையின்றி அச்சமின்றி நடமாட முடிந்தது என்பதை பாஹியான் கூறுகிருர். இதனுல், நாட்டில் அமைதி நிலவுவதற்கும் குற்றவாளிகள் மிகுவதற்கும், குற்றச் சட்டத்தின் வன்மைக்கும் யாதொரு தொடர்பும் இல்லையோ என்று கூட ஐயுற வேண்டியிருக்கிறது. கி.பி. ஏழாம் நூற்ருண்டில் வட இந்தியாவில் கனேஜியிலிருந்து ஆட்சி புரிந்த ஹர்ஷ வர்த்தனர் ஆட்சித் துறையில் பல திருத்தங்களைச் செய்தார். இவ் விவரங்களை அவர் காலத்துக் கல் வெட்டுக்களும், யுவான் சுவாங்கின் குறிப்புக்களும், பாணரது ஹர்ஷ சரிதமும் நமக்குத் தெரிவிக்கின்றன. ஹர்ஷர் போரில் வல்லுநராயிருந்ததோடு ஆட்சியிலும் திறமை மிக்கு விளங்கினுர். மன்னர் தமது அரசின் பல பகுதிகளுக்கும் தாமே அவ்வப்பொழுது சென்று ஆட்சி இவ்வாறு நடைபெறுகிறது என்று அறியும் மரபு அவர் காலத்தில் இருந்தது. மற்றும் நிர்வாகத்தில் நிகழும் கடிதப் போக்குவரத்துக்களையும் பத்திரங்களையும் குறிப்புக்களையும் ஒரு சேர ஓரிடத்தில் தொகுத்து வைத்துத் தேவையான பொழுது பிற்காலத்தில் அவற்றை எடுத்து உபயோகிக்கும் பழக்கமும் அக்காலத்தில் இருந்தது. இவ் விவரங்கள் யுவான் சுவாங்கின் குறிப்புக்களிலிருந்து தெரிய வருகின்றன.

ஹர்ஷர் காலத்திற்குப் பிறகு வட இந்தியா பல சிறு அரசுகளாகச் சிதறுண்டு போய், சிறு சிறு இராசபுத்ர அரசர்களிடையே அகப்பட்டு ஆளப்பட்டு வந்ததை வரலாறறிந்தது. அவ்விராசபுத்திரர்கள் ஆட்சி நிர்வாக மரபு ஒன்றையும் புதிதாக ஏற்படுத்திவிடவில்லை. போர்ப் பயிற்சியும் நாட்டுப் பற்றும் மிக்கிருந்த இராச புத்ரர்கள் இந்தியாவைப் படையெடுத்த முஸ்லிம்களை எதிர்க்கும் சில மரபுகளையும் அவர்களிடமிருந்து தங்கள் இனத்தவரைக் காத்துக் கொள்ளும் மரபுகளையும்

வளர்த்துக்கொண்டனரேயன்றி ஆட்சியிலோ நிர்வாகத்திலோ முக்கியமான புதுமைகளைப் புகுத்தவில்லை.

வட இந்திய நிர்வாக நிறுவன மரபுகள் இவ்வாருக தென் இந்தியாவிலும் தக்காணத்திலும் சங்க காலத்திலிருந்து பல வகை நிர்வாக மரபுகள் நிலவின. சங்க காலத்தில் சேர, சோழ, பாண்டியராகிய முடி மன்னர் ஆட்சியும், வேளிர் முதலிய சிற்றரசர்கள் ஆட்சியும் ஒரு சேர நடந்து வந்தமையும் ஒவ்வொரு அரசிற்கும் ஒன்றிற்கு மேற்பட்ட தலைநகரங்கள் அமைந்திருந்தமையும் அவர்கள் போரிலும் வாணிபத்திலும் அமைதிக் காலச் செயற்பாடுகளிலும் சிறந்து விளங்கியமையும் மேலே கூறப்பட்டன. சங்க கால மன்னன் தனி ஆட்சி செலுத்தினுன்; அமைச்சர்களும், புரோகிதர், கணி ஒற்றர். சேனுபதியர் முதலிய அதிகாரிகளும் மன்னனுட்சிக்கு உதவினர். மன்னன் ஆட்சி செங்கோல் ஆயினும் கொடுங்கோல் ஆயினும் தனி ஆட்சி என்பதில் ஐயமின்று. மன்னன் வாழ்ந்த தலைநகரிலிருந்து நடைபெற்ற ஆட்சி மத்திய ஆட்சி என்றும், கிராமங்களில் கிராமத் தலைவர்களால் மன்றம், பொதியில் என்னுமிடங்களிலிருந்து நடத்தப்பெற்ற ஆட்சி தல ஆட்சி என்றும் சங்க கால ஆட்சி என்றும் இருவகைப்பட்டது. கிராமங்கள் ஒன்றிற்கு ஒன்று தொலைவில் இருந்தமையாலும் அவற்றிடைபோக்குவரத்திற்கு வசதியான பெரு வழிகள் பல இலவாதலாலும் விரைவுப் போக்குவரத்திற்குப் பயன்படக்கூடிய வாகனங்கள் இன்மையாலும் கிராம ஆட்சி ஆதி காலந் தொட்டே தனித்தியங்கும் ஆட்சியாக விளங்கிற்று.

கௌடில்யர் முதலிய வடமொழி அர்த்த சாத்திர ஆசிரியர்கள் விளக்கிக் கூறியுள்ள ஆட்சி மரபுகளுக்கும் திருவள்ளுவர் குறளில் எழுதியுள்ள உண்மைகளுக்கும் சிற்சில இடங்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. அறத்தின் பாற்பட்டதே பொருளும் இன்பமும் என்னும் வள்ளுவர் கோட்பாட்டிற்கும், மன்னன் உலகியல் வெற்றியைக்கருதி யாதொன்றும் செய்யலாம் என்னும் கௌடில்யத்திற்கும் உள்ள அடிப்படை வேற்றுமை எளிதிற் புலனும். கட்டாயக் கடன்களும், கூலியில்லா வேலை வாங்குதலும் வள்ளுவரால் கடியப்பட்டவை; கௌடில்யரால் ஏற்றுக் கொள்ளப்பட்டவை. கௌடில்யர் அரசியல் வெற்றியைப் பெரிதாகக் கருதினுர்; அவ் வெற்றியைக் கருதி எந்தச் செயற்பாடும் மேற்கொள்ளத் தக்கது என்று அவர் கருதினுர். ஆனுல், அறத்தோடு படாத பொருள் வெற்றி கொடுங்கோன்மையின் பாற்படும் என்பது வள்ளுவர் கருத்து.

சங்க காலத்திற்குப் பிறகு தென்னாட்டில் ஆட்சி புரிந்த பல்லவர், பாண்டியர், சோழர் என்னும் மன்னர் ஆட்சிக் காலங்களில் மன்னர் தம் தனியாட்சி மரபு மேலும் இறுகிற்று. அரசின் பரப்பு மிகுந்து விட்டமையால் ஆட்சியாளர்களின் எண்ணிக்கையும் மிகுந்தது. ஆனால் அவ்வாட்சியின் தன்மை பெரிதும் மாறிவிடவில்லை.

கி. பி. நான்காம் நூற்றாண்டிலேயே பல்லவர் ஆட்சி முறைகளைப் பற்றி நாம் ஓரளவு அறிந்து கொள்ளுதற்குப் பயன்படும் வகையில் சில செப்புப் பட்டயங்கள் கிடைத்துள்ளன. வரி விலக்கு அளிக்கப்பட்ட சில அந்தணர் குழாங்களுக்குப் பல்லவ மன்னர்கள் வழங்கிய மானியங்கள் பொறிக்கப்பட்டுள்ள செப்புப் பட்டயங்கள் பொதுவாக எவ்வகைப் பொருள்களுக்கு வரி விதிக்கப்பட்டது என்பதை நாம் அறிய உதவுகின்றன. அவர்கள் ஆட்சிக் காலத்தில் கிராமத்தனி ஆட்சி முறை மேலும் விரிவாகவும் சிறப்பாகவும் அமைந்தது. அந்தணர்கள் தனிப்பட வாழ்ந்து வந்த 'சபை' என்னும் ஊர்களில் ஆட்சி எவ்வாறு இயங்கிற்று என்பதும் ஓரளவு பெறப்படுகின்றது. கிராம அரசியல் குழுக்களில் உறுப்பினராகும் தகுதி அல்லது தகுதியின்மையைப் பற்றியும் விவரங்கள் கிடைக்கின்றன. இந்தக் கிராம சபைகள் கோவில்களின் நிருவாகங்களை மேற்பார்த்ததுடன், நீர்ப்பாசன ஏரிகள், பொது வழிகள் முதலிய பொது நன்மைக்காக ஏற்பட்ட நிறுவனங்களையும் நிர்வகித்தது. 'மத்த விலாஸப் பிரகசனம்' என்னும் அரிய, சிறிய நாடகத்தை இயற்றிய மகேந்திர வர்மன்–1 என்னும் பல்லவ மன்னன் தனது ஆட்சிக் காலத்திலேயே தலைநகரான காஞ்சியில் நீதி மன்றங்களில் கையூட்டுப் பெறும் தீய பழக்கம் இருந்தது என்பதைக் கூறுவது நோக்கற்பாலது.

ஏறத்தாழப் பல்லவர்கள் காலத்திலேயே மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்து வந்து பாண்டிய மன்னர்கள் நன்கு அமைக்கப்பட்ட ஆட்சி நிர்வாக முறையை மேற்கொண்டமை கல் வெட்டுக்கள் முதலிய சான்றுகளால் பெறப்படுகின்றது. அவர்கள் ஆட்சியில் உத்தர மந்திரி (முதலமைச்சர்) என்னும் பெயருடைய தலைமை அதிகாரி இருந்ததாகத் தெரிகிறது. திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த மானூர் என்னும் கிராமத்தில் காணப்பெற்ற ஒரு கல் வெட்டு (சுமார் கி.பி. 800) கிராமத் தனி ஆட்சிமுறையை விவரித்துக் கூறுகின்றது. இதனால் I பராந்தக சோழன் காலத்திற்கு முன்பே பாண்டிய நாட்டில் கிராமத் தனி ஆட்சி நடைபெற்று வந்தமை பெறப்படும். சபையோர் கிராம

நிர்வாகத்தைச் செம்மையாக நடத்தாத சமயங்களில் அவர் களுக்குக் கிராமத்தார் (அடுத்துவரும் சபையோர் வாயிலாக) தண்டனை யளிப்பதும் உண்டு.

பேரரசுச் சோழர்கள் பல்லவர்களையும் பாண்டியர்களையும் வென்று தங்கள் பேரரசை நிறுவினர். தென் இந்தியாவில் தமிழர்களால் நிறுவப் பெற்ற பேரரசுகள் யாவற்றுள்ளும் பரப் பிலும் வலுவிலும் சிறந்தது சோழர் பேரரசே. இக்குடியிற் ருேன்றி ஆண்ட அரசர்களில் விஜயாலயன், ஆதித்யன், முதற் பராந்தகன், ராஜராஜன் I, ராஜேந்திரன் I, குலோத்துங்கன் I என்போர் தலைசிறந்த மன்னர்கள் இந்தியாவிலேயே யன்றிப் பிற நாடுகளிலும் பெரு வெற்றி கண்ட பரந்த பேர ரசை நிறுவினர். சிங்களத்திலும் சுவர்ணத்தீவிலும், யவத்தீ விலும் தங்கள் அரசைப் பரப்பினர். இதற்கு முக்கிய காரணம் அவர்கள் கடற் படையாம். கடற்படையின் துணை கொண்டு கடல் கடந்து நாடுகளை வென்று அடிப்படுத்திய பெருமை பேரரசுச் சோழர்களுக்கு உரித்தாவது போலப் பிற இந்திய அரச பரம்பரையினருக்கு இல்லை.

சோழர்களுடைய ஆட்சி நிருவாகத்தைப் பற்றி விரிவாக வும் தெளிவாகவும் அறிந்து கொள்ளுதற்கு நமக்குத் துணை புரிவது அவர்கள் காலத்தில் தென்னுட்டில் ஆக்கப் பெற்ற எண்ணிறந்த கல்வெட்டுக்களேயாம். இக் கல்வெட்டுக்களின் தோற்றுவாய்களில் அக்காலத்தேயாண்ட மன்னரின் பாரம் பரியத்தையும் போர்க்கால, அமைதிக்காலச் சாதனைகளையும் குறிப்பர். இவற்ருல் மன்னர் பரம்பரையை யறிய முடிவதோடு அரசர்களுடைய சாதனைகளின் தன்மையையும் உணர முடி கின்றது.

சோழ மன்னர்கள் தங்கள் ஆட்சியிலிருக்கும் போதே தங்கள் மூத்த மகனை ஆட்சியில் ஈடுபடுத்துவதுண்டு. அப் போதைய கல்வெட்டு முதலிய குறிப்புக்களிலிருந்து தந்தையும் மகனும் ஒரு சேர ஆண்டதாகத் தோன்றும். இருவரும் ஆணைகள் பிறப்பிப்பதும், தங்கள் ஆட்சிக் காலத்தை அவ் வாண்டுகளையும் சேர்த்துக் கணக்கிட்டுக் கொள்வதும் உண்டு. அம்மன்னர்கள் பல பட்டங்களை ஏற்றனர். ராஜ ராஜ சோழ னுக்கு மும்முடி சோழன், ஜயங் கொண்டான், சிவபாத சேக ரன் முதலிய பட்டங்கள் வழங்கின. I ராஜ ராஜன் நிர்வாகத் துறையில் பல சீர்திருத்தங்களைச் செய்தான். கி.பி. 1001-ல் தொடங்கிய நில அளவு மேற்பார்வைகளும் நிலவரி நிர்ணயிப் புக்களும், நிருவாகத் துறைச் சீர்திருத்தங்களும், கிராமத்தனி

ஆட்சியை மேற்பார்த்து ஒழுங்கு படுத்துவதற்கெனச் சில அதிகாரிகளை நியமித்தமையும் அவன் ஆட்சிக்குச் சிறப்பு தருகின்றன. நில அளவுகளை நிர்ணயிக்கும் அரிய நிர்வாகச் செயல் I குலோத்துங்கனாலும் பிற்காலத்தில் மேற்கொள்ளப் பட்டது. மன்னனுக்குச் சேர வேண்டிய வரியும் கடமையும் பெரும்பாலும் நிலவரியாகவே இருந்தது. மன்னனுக்கு மக்கள் அளித்த திறையும், மன்னன் தனது நிர்வாக அதிகாரிகளுக்கும் பிற ஏவலர்கட்கும் அளித்த சம்பளமும் பெரும்பாலும் பொருள்களாகவும் சிறு பான்மை பணமாகவும் தரப் பட்டன. பேரரசுக் காலத்திலும் அரசர்கட்குச் சிற்றரசர்கள் மலிந்திருந்தனர். இவர்கள் திறமை மிக்க மன்னர்கள் காலத்தில் அடங்கியும் திறமையற்ற மன்னர்கள் காலத்தில் அடங்காமலும் இருந்தனர். இதனால் பேரரசின் கடைசி காலத்தில் சிற்றரசர்கள் தாமும் தனி அரசராக முயன்ற முயற்சிகளில் அரசுக்கே தொல்லை விளைந்தது.

கிராமத் தனி ஆட்சியே சோழர்கள் காலத்திய மிக முக்கியமான பொது ஆட்சி நிர்வாக நிறுவனம். ராஜராஜன் காலத்தில் பேரரசு ஏறத்தாழ எட்டு மண்டலங்களாகவும், மண்டலங்கள் வள நாடுகளாகவும் நாடுகளாகவும் பிரிக்கப் பட்டன. கூற்றங்கள் (கோட்டங்கள்) என்பவை பிற அரசியல் நாட்டுப் பிரிவுகள். பல்லவர் காலத்திலும் பாண்டியர் ஆட்சியிலும் ஓரளவு தொடக்க நிலையில் செயற்பட்டு வந்த கிராமத்தனி ஆட்சி முறை I பராந்தகன் முதலாக ஆண்ட சோழப் பேரரசர்கள் காலத்தில் சீர் பெற்று நன்கு விளங்கலாயிற்று. பொதுவாக அந்தணர்களே மிகுதியும் வாழ்ந்து வந்த 'சபா' என்னும் பெயரிய கிராமங்கள், எக்குடியினரும் சேர்ந்து வாழ்ந்த 'ஊர்' என்னும் பெயரிய கிராமங்கள் என்று இரு வகைக் கிராமங்களே யிருந்தன. சபையின் நிர்வாக முறைகளைப் பற்றி உத்தரமேரூர் என்னுமிடத்தில் காணப்பெறும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இக்கல்வெட்டுக்கள் I பராந்தக மன்னன் காலத்தில் அவனது 12, 14-ஆம் ஆட்சி ஆண்டுகளில் பொறிக்கப் பட்டவை. ஊரால் நியமிக்கப்பட்ட சபை கிராமத்தின் முப்பது பகுதிகளின் பிரதிநிதிகளால் நடத்தப் பெறுவது. இப் பிரதிநிதிகளுக்குச் சில முக்கியமான தகுதிகள் நிர்ணயிக்கப் பட்டன. கால்வேலி நிலமேனும் சொத்துடைமையாகக் கொண்டவர்கள், தனக்குச் சொந்தமான நிலத்தில் தன் செலவில் கட்டிய வீட்டில் குடியிருத்தல், முப்பத்தைந்து வயதிற்கு மேலும் எழுபது வயதிற்குட்பட்டும் இருத்தல், வேத 'மந்திர'ங்களையும் பிராம்மணங்களையும் ஓதி உணர்ந்திருத்தல், அன்றி

அரைக்கால் வேலி நிலத்தையுடையராயும், ஒரு வேதம் ஒரு பாஷ்யம் (வேதப்பேருரை) என்பவற்றை உணர்ந்தாராயும் இருத்தல்–இவை அவர்கள் தகுதியாதல் வேண்டும். இத்தகுதிகளை யுடையராயிருப்பினும் கீழ்க்காணும் வகை மக்கள் பிரதிநிதித்துவத்தினின்றும் நீக்கப்படல் வேண்டும் என்பதும் தெளிவாக்கப்படுகின்றது. சபையின் உட்குழுக்கள் யாதொன்றிலேனும் முந்திய மூன்றாண்டுகளில் உறுப்பினரா யிருந்தோரும் உட்குழு உறுப்பினராயிருந்தும் ஆட்சி நிருவாகப் பத்திரங்களைச் சரிவரக் கணக்கு வைக்காதவர்களும், ஐம்பெருங் குற்றங்களைச் செய்தோரும் அவர்தம் உறவினரும், திருடர்களும், கையூட்டப் பெற்றவர்களும் இன்னோரன்ன பிறரும் சபையின் குழுக்களில் மக்களின் பிரதிநிதிகளாக அலுவல் பார்ப்பதற்கு நியமனம் செய்யப்பட்டனர். நியமனம் செய்யப்பட்டவர்கள் தொகையிலிருந்து ஒவ்வொரு குடும்பிற்கும் ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப் படல் வேண்டும். தேர்ந்தெடுக்க அவர்கள் கையாண்ட முறை குடவோலை முறை எனப்படும். அதாவது ஒரு குடத்துள் நியமனம் செய்யப்பட்டார் யாவருடைய பெயரையும் தனித்தனிச் சீட்டுக்களில் எழுதி இட்டு சிறுவரைக்கொண்டு ஏதேனும் ஒரு சீட்டினை எடுக்கச் சொல்லி, அங்ஙனம் எடுக்கப்பட்ட சீட்டு இறைவன் திருவுளப் பாங்கு என்று கொண்டு அப்பெயரானைப் பிரதிநிதியாக்குதல். இவ்வாறு பொறுக்கி எடுக்கப்பட்ட முப்பது பேரில் பன்னிருவரை ஸம்வத்ஸர வாரியத்திற்கும் பன்னிருவரைத் தோட்ட வாரியத்திற்கும் அறுவரை ஏரி வாரியத்திற்கும் நியமிப்பர். இவ்வகைத் தேர்தலுக்கும் தற்கால மக்களாட்சி முறைத்தேர்தல்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு எளிதில் விளங்கும். இவ்வாறு நியமிக்கப்பட்ட சபை கிராமத்தாரின் நியாய, வாரிய, தற்காப்பு முதலிய தேவைகளை மேற்கொண்டு பார்த்தது. மன்னரும் அவருடைய ஆட்சி அலுவலரும் கிராமங்களின் உள் விவகாரங்களில் தலையிடுவதில்லை. இதனால் உண்மையிலேயே கிராமச் சுயாட்சி அக்காலத்தில் நடைமுறையில் இருந்தது என்று கொள்ளலாம்.

இச்சுயாட்சி முறை சோழர், பாண்டியர் ஆகியோர் பேரரசாட்சிக் காலத்தோடு தமிழகத்தில் முடிவுற்றது. விசயநகரப் பேரரசு தமிழ் நாட்டில் நிறுவப் பெற்றதிலிருந்து உண்மையான பேரரசாட்சி (Imperial Government) தமிழ் நாட்டில் ஏற்பட்டு விட்டது. பேரரசின் எப்பகுதியிலும் சுயாட்சி நிலவுவது பேரரசர்களின் தன்மைக்கு ஒவ்வாதது; ஆதலால் கிராமச் சுயாட்சியும் விசயநகர சேனை நாயக்கர் ஆட்சிக்கு உட்பட்டு தன் வலுவிழந்தது.

# முடிவுரை

இதுகாறும் மேற் கூறிய அதிகாரங்களில் உரைக்கப்பட்டவை பண்டைய இந்திய அரசியல் நிலையங்களைப்பற்றிய சில முக்கியமான கருத்துக்கள். இந்திய அரசியல் இஸ்லாமியர் படையெடுப்பதற்கு முன் ஹிந்து அல்லது பௌத்த, சைன சமயங்களைச் சேர்ந்த மன்னர்களால் நடத்தப்பெற்றது. அவ்வரசியலை அடிப்படையாகக் கொண்டெழுந்த நிலையங்களும் நிறுவனங்களும் இவ்வரசியலுக்கு ஆதாரமான தத்துவங்களால் விளக்கமுற்றன. அந்நிலையங்கள் மன்னர், அமைச்சர், போர்ப்படை முதலிய அரசியல் நிறுவனங்களாயினும், சாதி, குலம், கோத்திரம் போன்ற சமய-சமுதாய நிறுவனங்களாகவேனும், ராஷ்டிரம், ஊர், சபா, சமிதி, கணம், மணிக்கிராமம், நாட்டார், நகரத்தார். இன்னோரன்ன சமூதாய-வாணிக-ஆட்சிக் குழுக்களாக வேனும், சத்திரம், சாவடி, கோவில் முதலிய சமயச் சார்புடைய அற நிலையங்களாக வேனும் அமையலாம். இவை யாவற்றையும் பண்டைய இந்தியா அறிந்தே இருந்தது.

இந்நிலையங்களின் வரலாற்றினைப்பண்டைய இந்திய அரசியல் நிறுவனங்களின் வரலாறெனக்கொண்டு இந்நூல் வரையப் பெற்றுளதாயினும், 'பண்டைய' என்னும் சொல் எந்தக் கால அளவினைக் குறிக்கிறது என்பது விளக்க முற வேண்டும். சைந்தவ நாகரீக காலத்திலிருந்து குப்தர் ஆட்சி, ஹர்ஷர் ஆட்சி முடியும் வரை இடையிட்ட பல நூற்றாண்டுகளில் இந்தியப் பொது வாழ்வில் தோன்றிய அரசியல், சமூக நிறுவனங்களைப் பற்றியே இங்குக் கருதியுள்ளோம். இந் நிறுவனங்களின் பொதுத் தன்மை மௌரியர் ஆட்சிக் காலத்திலேயே அமைந்துவிட்டது, பிறகு தோன்றியவை எல்லாம் அவ்வாட்சி அமைப்பின் விவரங்களில் காலப் போக்கிற்கேற்பவும் பிரதேசச் சூழ்நிலைக்கேற்பவும் ஆக்கப் பெற்ற மாறுதல் உரிமையாம் என்பதையும் விளக்கியுள்ளோம். இதிலிருந்து கி. பி. 8-ம் நூற்றாண்டிற்கு முற்பட்ட இந்திய அரசியல் நிறுவனங்களைப் பற்றியே இந்நூல் பேசுகின்றது என்பது விளங்கும்.

பண்டைக்கால இந்திய, சமுதாய அரசியல் நிறுவனங்களின் ஆதாரமாக அமைந்த தத்துவங்கள், தர்ம சாத்திரங்கள், அர்த்த சாத்திரங்கள் எனப்படும் நூல்களில் கண்ட கருத்துக்களேயாம். இவற்றில் தர்மசாத்திரங்கள் என்பவை ஒரு மனிதன்

தன் தனி வாழ்க்கையிலும், குடும்ப நிலையிலும், சமூக உறவுகளிலும் இவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று விதிப்பன என்பதையும், அர்த்த சாத்திரங்கள் அரசன் ஆட்சி நடத்துங்கால் இவ்வாறு நடத்த வேண்டும் என்று விதிப்பன என்பதையும் இந்நூலினுள்ளே குறித்தோம். மனு முதலிய தர்மசாத்திரக்காரர்கள் அறநெறியைக் கூறும் நோக்கத்தோடு, மன்னர் முதலானோரும் ஆட்சியைச் செலுத்துங்கால் கூட அறநெறி பிறழாமல் செயலாற்ற வேண்டும் என்று கருதினர். சமுதாயத்தில் அரசர் தமக்கென ஒரு நெறி வகுத்துக்கொண்டு அது அறநெறியினின்றும் பிறழ்ந்தாலும் அதனைப் பொருள் நெறியென்று கூறிக்கொண்டு செயற்படலாம் என்று கௌடில்யர் கூறியாங்கு பிறர் ஒருவரும் கூறினரில்லை. அவரைப் பின்தொடர்ந்து அவருக்குப் பிறகு எழுந்த சில பொருள் நூலாசிரியர்கள் அங்ஙனம் கூறியிருப்பினும் ஹர்ஷ சரிதம் இயற்றிய பாணர் போன்ற அறிஞர்கள் கௌடில்யரின் போக்கைக் கண்டித்துள்ளனர் என்பதை நினைவு கூரவேண்டும். இந் நிலையில் அர்த்தசாத்திர மரபு இந்திய சமுதாய வரலாற்றில் தர்ம சாத்திர மரபிற்குச் சமமான ஆதாரமோ புனிதத்தன்மையோ பெற்று விளங்கவில்லை என்பதையுணர்தல் வேண்டும். மற்றும் இச் சாத்திரங்களும் மரபுகளும் யாவையேயாயினும், வரலாற்றில் நடைமுறையில் நிகழ்ந்த செயற்பாடுகள் வேறாகவே அமைந்திருக்கக்கூடும் என்பதையும் நினைவிலிருத்தல் வேண்டும். பௌத்த மன்னர்களில் யாவருமே அசோகர் கொள்கைகளைக் கடைபிடித்தார் என்பதில்லை. இந்து மன்னர்களில் சமுத்ர குப்தருக்கும், சசாங்கருக்கும் நரசிம்ம பல்லவருக்கும் இடையேயும் ஆட்சித் தத்துவங்களிலும் முறைகளிலும் பரந்த வேறுபாடுகள் காணப்பட்டமையும் இயற்கையே. இந்நிலையில், பண்டை இந்திய அரசியல் நிறுவனங்களுக்கு ஆதாரமாக நின்ற தத்துவங்கள் அர்த்த சாத்திரங்களைப் பின்பற்றியவையா அன்றித் தரும சாத்திர அடிப்படையில் அமைந்தவையா என்னும் வினா வரலாற்று உண்மைகளோடு தொடர்பற்றதாகும்.

பொதுவாகப் பண்டைய இந்திய அரசியல் நிறுவனங்கள் குடிமக்களின் வாழ்க்கைக்கு வசதியும் பாதுகாப்பும் அளிக்க விரும்பி அமைந்தனவேயன்றி, அவ் வாழ்க்கையில் குறுக்கிட்டு அதனைச் சீர்திருத்த வேண்டி அமைக்கப்பட்டன அல்ல என்பதே ஆதாரக் கருத்தாகும்.

பண்டைய இந்திய அரசு சட்டமியற்றிப் புது நிறுவனங்களையாக்கி இப்புதியன புகுத்தல், பழையன கழித்தல் என்னும் செயற்பாடுகளை மேற்கொள்ளாது; ஆதலின் இந் நிலையங்கள் எல்லாம் சிறிது சிறிதாக நாளடைவில் வளர்ந்து ஓங்கிய நிறுவனங்களேயாம் என்பதையும் உணர்தல் வேண்டும். சமுதாய மரபுகளும், இந்நிலையங்களும், அறக்கோட்பாடுகளும் என இவை யாவும் சேர்ந்தே பண்டைய இந்தியப் பொது வாழ்க்கையின் தன்மையை நிர்ணயித்தன எனலாம்.

# மேற்கோள் நூற்பட்டியல்

## 1. முதல் நூல்கள் (தமிழ்)


சிலப்பதிகாரம் (அடியார்க்கு நல்லார் உரை): உ. வே. சுவாமிநாத ஐயர் பதிப்பு

திருக்குறள் (பரிமேலழகர் உரையுடன்): வை மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பு: சென்னை, 1938

தொல்காப்பியம்—பொருளதிகாரம்: சா. பவானந்தம் பிள்ளை பதிப்பு, சென்னை, 1916

நாலடியார்: வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பு, சென்னை, 1938

பதிற்றுப் பத்து (பழைய உரையுடன்): உ. வே. சுவாமிநாத ஐயர் பதிப்பு

பழமொழி நானூறு: தி. செல்வ கேசவராய முதலியார் பதிப்பு, சென்னை, 1916

புறநானூறு (பழைய உரையுடன்): உ. வே. சுவாமிநாத ஐயர் பதிப்பு

மணிமேகலை: உ. வே. சுவாமிநாத ஐயர் பதிப்பு


### ஆங்கிலம்


McCrindle, J. W. (Ed): Ancient India as described in classical literature, Westminster, 1901.

" " Ancient India as described by Megasthenes and Arrian, London, 1877.

Nilakanta Sastri, K. A.: Foreign notices of South India from Megasthenes to Ma Huan, Madras, 1939.

Sama Sastri, R.: (Ed): Kautilya Arthasastra, Mysore, 1923.

Smith, V. A.: Asoka, edicts of Oxford, 1920.

## 2. வழி நூல்கள்

Altekar, A. S.: State and Government in Ancient India, Benares, 1949

„ „ : Village Communities in Western India, Oxford, 1929

Anjaria, J. J.: The nature and grounds of political obligations in the Hindu state, London, 1935

Bandyopadyaya, N. C.: Hindu polity and political theory, Calcutta, 1927-28

Banerjee, PNN.: Public administration in Ancient India, London, 1916

Basham, A. L.: The wonder that was India; Orient Longmans Limited, 1963

Basu, P. C.: Indo-Aryan polity, London, 1925

Bandarkar, Dr.: Social aspects of ancient Hindu polity, Madras, 1940

Bane Prasad: The state in Ancient India, Allahabad, 1928

„ „ : Theory of Government in Ancient India, Allahabad, 1927

Das Gupta, R.P.: Crime and Punishment in Ancient India, Calcutta, 1930

Date, G.T.: The art of war in Ancient India, London, 1929

Datta, B.N.: Studies in Indian Social polity, Calcutta, 1944

Drekmeier, C.: Kingship and Community in Ancient India, Stawford, 1962

Ghosal, U.N.: A history of Indian political ideas. Bombay, 1959

,, ,, : History of Indian public life, Calcutta, 1945

Heesterman, J. C.: The Ancient Indian royal consecration, The Hague, 1957

Ingalls, D. H. H.: Authority and Law in Ancient India— supplement to the journal of the American Oriental Society XXXI (1911)

Jayaswal, K.P.: Hindu polity, Bangalore, 1943

Kane, P.V.: History of Dharmasastras, Poona, 1930

Majumdar, R.C.: Corporate life in ancient India, Poona, 1922

Mukerjee, Radakumud: Local Government in Ancient India, Calcutta, 1920

Nilakanta Ṡastri, K.A.: The Cholas; Madras University, 1956

,, ,, : The Pandyan kingdom; Luzac and Co., London, 1929

,, ,, : The place of Arthasastra in the history of Indian polity,—Annals of the Bundarkar Research Institute XXVIII

Radhakrishnan, S.: Religion and Society; London, 1947

Ramachandra Dikshitar, V. R.: Hindu Administrative Institutions, Madras, 1929

" " : Mauryan polity, Madras, 1932

" " : Gupta polity, Madras, 1952

Rangaswamy Iyengar, K.V.: Rajadharma, Madras, 1941

" " : Some aspects of Ancient Indian polity, Madras, 1935

Subrahmanian, N: Sangam Polity, Asia Publishing House, Bombay, 1967

# கலைச்சொற்கள்

(தமிழ்—ஆங்கிலம்)

| | | |
|---|---|---|
| அகழ்வு ஆய்வு | — | Excavation |
| அடிமை நிலை | — | Slavery |
| அதிகாரம் | — | Authority |
| அமைதி | — | Peace |
| அரசியல் | — | Politics, Political Science |
| அரசியல் அமைப்பு | — | Constitution |
| அரசியல் மரபுகள் | — | Political traditions |
| அறிவுரையாளர் | — | Adviser |
| ஆட்சிக் கூட்டம் | — | Confederacy |
| ஆட்சி நிலையங்கள் / ஆட்சி நிறுவனங்கள் | — | Administrative Institutions |
| ஆட்சியியல் | — | Science of Administration |
| ஆதிமனிதன் | — | Primitive man |
| இழப்பீடு | — | Compensation |
| இறைமை | — | Sovereignty |
| இறைப்பணம், வரி | — | Tax |
| உயர் நடுத்தர வகுப்பினர் | — | Upper Middle Class |
| உரிமை | — | Right |
| ஒப்பந்தம் | — | Treaty |
| ஒழுங்கு | — | Order |
| ஒற்றர் | — | Spy |
| ஒற்று | — | Espionage |
| ஒறுத்தல், ஒறுப்பு | — | Punishment |
| கட்டளை | — | Edict |
| கடமை | — | Duty |
| கடற்படை | — | Navy |
| கணக்கர் தலைவர் | — | Auditor-General |
| கப்பம் | — | Tribute |
| கல்வெட்டு | — | Lithic inscription |
| காசு | — | Coin |

| | | |
|---|---|---|
| காசு வழக்கு | — | Currency |
| கிராம ஆட்சி | — | Village Government |
| குடி ஆட்சி | — | Republic |
| குடித்தலைவர் | — | Tribal Chief |
| குடி மக்கள் | — | Subjects |
| குடிமன்றங்கள் | — | Tribal Councils |
| குலமுறை | — | Geneology |
| குவிந்த ஆட்சி | — | Centralised Government |
| குழு | — | Committee |
| குற்றச்சட்டம் | — | Criminal Law |
| குற்றம் | — | Crime |
| குற்றம் சாட்டப் பெற்றோர் | — | Accused |
| சட்டம் | — | Law |
| சமுதாய ஒப்பந்தம் | — | Social Contract |
| சமுதாய சக்திகள் | — | Social Forces |
| சமூக நியாயம் | — | Social Justice |
| சமூகப் பழக்க வழக்கங்கள் | — | Social Practices |
| சர்வாதிகாரி | — | Dictator |
| சான்றுகள் | — | Evidence, Sources |
| சித்திரவதை | — | Torture |
| சிலவராட்சி | — | Oligarchy |
| சிற்றரசர் | — | Subordinate Chieftain |
| சூழ்நிலை | — | Environment |
| செயலாளர் | — | Secretary |
| செல்வாதாரம் | — | Finance |
| செலவினம் | — | Item of expenditure |
| சொத்துரிமை மூத்த மகனுக்கே உரியது என்னும் சட்டம் | — | Primogeniture, Law of |
| தகுதி | — | Qualification, Competence |
| தண்டனைச் சட்டம் | — | Penal Law |
| தல ஆட்சி | — | Local Government |
| தலைவர் ஆட்சி | — | Aristocracy |
| தன்மை | — | Nature |
| தொல் பொருள் இயலார் | — | Archaeologist |
| நகர அரசு | — | City State |
| நகர ஆட்சி | — | Municipal administration |
| நாகரிகம் | — | Civilization |
| நிர்வாகம் | — | Administration |
| நிரை கவர்தல் | — | Cattle lifting |

| | | |
|---|---|---|
| நில இடையீட்டாளர்கள் | — | Intermediaries in land |
| நிலவரி | — | Land Revenue |
| நிலையம், நிறுவனம் | — | Institution |
| நீதி | — | Justice |
| நீதி மன்றம் | — | Law Court |
| பட்டம் | — | Title |
| பட்டயம் | — | Grant |
| படை மானியத் திட்டம் | — | Feudalism |
| பண்பாடு | — | Culture |
| பணம் | — | Cash |
| பரிசு | — | Present |
| பரிணாமம், வளர்ச்சி | — | Evolution |
| பரி வேள்வி | — | Horse sacrifice |
| பழங்கற்காலம் | — | Paleolithic age |
| பாரம்பரியம் | — | Heredity |
| பாழ்கள் | — | Ruins |
| பிரதிநிதித்துவம் | — | Representation |
| பிராந்தியம் | — | Region |
| புதுக் கற்காலம் | — | Neolithic age |
| புரட்சி | — | Revolution |
| பூவியலார் | — | Geologists |
| பேரரசு | — | Empire |
| பொதுச் செல்வாதாரம் | — | Public Finance |
| பொது மராமத்துப் பணி | — | Public Works and Repairs |
| பொது வாழ்வு | — | Public Life |
| பொது வுடைமை | — | Communism |
| பொருள் நூல் | — | Economics |
| பொருளாதாரம் | — | Economy |
| பொறுப்பாட்சி | — | Responsible Government |
| பொறுப்பு | — | Responsibility |
| மக்கட் தொகைக் கணிப்பு | — | Census |
| மக்களாட்சி | — | Democracy |
| மன்னராட்சி | — | Monarchy |
| மன்னனுக்குச் சொந்தமான நிலம் | — | Royal demesne |
| மாகாணம், மாநிலம் | — | Province |
| மாவட்டம் | — | District |
| முடிமன்னர் | — | Crowned Monarch |
| முத்திரை | — | Seal |
| யதேச்சாதிகாரி | — | Despot |

| | | |
|---|---|---|
| வரம்பற்ற ஆட்சி | — | Despotism |
| வரலாற்றுத் தொடக்கம் | — | Proto-history |
| வரைவாளர் | — | Clerk |
| வழக்கு | — | Suit |
| வழிபடு குலச்சின்னம் | — | Totem |
| வளர்ச்சி, பரிணமம் | — | Evolution |
| வாணிகச் சாத்து | — | Caravan |
| விதி | — | Rule |
| விரிந்தாட்சி | — | Decentralised Government |
| வெளிநாட்டுறவுகள் | — | Foreign Relations |
| வெளியார் | — | Aliens |

# கலைச்சொற்கள்

(ஆங்கிலம்—தமிழ்)

## A

| | | |
|---|---|---|
| Accused | — | குற்றம் சாட்டப் பெற்றோர் |
| Administration | — | நிர்வாகம் |
| Administrative Institutions | — | ஆட்சி நிலையங்கள் |
| | | ஆட்சி நிறுவனங்கள் |
| Advise | — | அறிவுரையாளர் |
| Aliens | — | வெளியார் |
| Archaeologist | — | தொல் பொருள் இயலார் |
| Aristocracy | — | தலைவர் ஆட்சி |
| Auditor-General | — | கணக்கர் தலைவர் |
| Authority | — | அதிகாரம் |

## C

| | | |
|---|---|---|
| Caravan | — | வாணிகச் சாத்து |
| Cash | — | பணம் |
| Cattle lifting | — | நிரை கவர்தல் |
| Census | — | மக்கட் தொகைக்கணிப்பு |
| Centralised Government | — | குவிந்த ஆட்சி |
| City—State | — | நகர அரசு |
| Civilization | — | நாகரிகம் |
| Clerk | — | வரைவாளர் |
| Coin | — | காசு |
| Committee | — | குழு |
| Communism | — | பொதுவுடைமை |
| Compensation | — | இழப்பீடு |
| Confederacy | — | ஆட்சிக் கூட்டம் |
| Constitution | — | அரசியல் அமைப்பு |

Crime — குற்றம்
Criminal law — குற்றச் சட்டம்
Crowned monarch — முடி மன்னர்
Culture — பண்பாடு
Currency — காசு வழக்கு

D

Decentralised Government — விரிந்த ஆட்சி
Democracy — மக்களாட்சி
Despot — யதேச்சாதிகாரி
Despotism — வரம்பற்ற ஆட்சி
Dictator — சர்வாதிகாரி
District — மாவட்டம்
Duty — கடமை

E

Economics — பொருள் நூல்
Economy — பொருளாதாரம்
Edict — கட்டளை
Empire — பேரரசு
Environment — சூழ்நிலை
Espionage — ஒற்று
Evidence, Sources — சான்றுகள்
Evolution — பரிணமம், வளர்ச்சி
Excavation — அகழ்வு ஆய்வு

F

Feudalism — படை மானியத் திட்டம்
Finance — செல்வாதாரம்
Foreign relations — வெளிநாட்டு உறவுகள்

G

Genealogy — குலமுறை
Geologists — பூவியலார்
Grant — பட்டயம்

## H

Heredity — பாரம்பரியம்
Horse Sacrifice — பரிவேள்வி

## I

Institution — நிலையம், நிறுவனம்,
Intermediaries in land — நில இடையீட்டாளர்கள்
Item of expenditure — செலவினம்

## J

Justice — நீதி

## L

Land revenue — நில வரி
Law — சட்டம்
Law Court — நீதி மன்றம்
Lithic inscription — கல் வெட்டு
Local Government — தல ஆட்சி

## M

Monarchy — மன்னராட்சி
Municipal Administration — நகராட்சி

## N

Nature — தன்மை
Navy — கடற்படை
Neolithic age — புதுக்கற்காலம்

## O

Oligarchy — சிலவர் ஆட்சி
Order — ஒழுங்கு

## P

| | | |
|---|---|---|
| Paleolithic age | — | பழங் கற்காலம் |
| Peace | — | அமைதி |
| Penal law | — | தண்டனைச் சட்டம் |
| Political traditions | — | அரசியல் மரபுகள் |
| Politics, Political Science | — | அரசியல் |
| Present | — | பரிசு |
| Primitive Man | — | ஆதிமனிதன் |
| Primo geniture, the law of | — | சொத்துரிமை மூத்த மகனுக்கே உரியது என்னும் சட்டம் |
| Proto-history | — | வரலாற்றுத் தொடக்கம் |
| Province | — | மாகாணம், மாநிலம் |
| Public finance | — | பொதுச் செல்வாதாரம் |
| Public life | — | பொது வாழ்வு |
| Public works and repairs | — | பொது மராமத்துப் பணி |
| Punishment | — | ஒறுத்தல், ஒறுப்பு |

## Q

| | | |
|---|---|---|
| Qualification, Competence | — | தகுதி |

## R

| | | |
|---|---|---|
| Region | — | பிராந்தியம் |
| Representation | — | பிரதிநிதித்துவம் |
| Republic | — | குடியாட்சி |
| Responsibility | — | பொறுப்பு |
| Responsible Government | — | பொறுப்பாட்சி |
| Revenue | — | வரவினம் |
| Revolution | — | புரட்சி |
| Right | — | உரிமை |
| Royal demesne | — | மன்னனுக்குச் சொந்தமான நிலம் |
| Ruins | — | பாழ்கள் |
| Rule | — | விதி |

## S

| | | |
|---|---|---|
| Science of Administration | — | ஆட்சி இயல் |
| Seal | — | முத்திரை |

Secretary — செயலாளர்
Slavery — அடிமை நிலை
Social contract — சமுதாய ஒப்பந்தம்
Social forces — சமுதாய சக்திகள்
Social Justice — சமூக நியாயம்
Social Practices — சமூகப் பழக்க வழக்கங்கள்
Sovereignty — இறைமை
Spy — ஒற்றர்
Subjects — குடிமக்கள்
Subordinate Chieftains — சிற்றரசர்
Suit — வழக்கு

T

Tax — இறைப் பணம், வரி
Title — பட்டம்
Torture — சித்திரவதை
Totem — வழிபடு குலச் சின்னம்
Treaty — ஒப்பந்தம்
Tribal Chief — குடித்தலைவர்
Tribal Councils — குடிமன்றங்கள்
Tribute — கப்பம்

U

Upper Middle Class — உயர் நடுத்தர வகுப்பினர்

V

Village Government — கிராம ஆட்சி